திற்குவருவேன். பின்னும் கியானேசுவர ரூபமாயிருந்து கீதையின் அர்த்தங்களைச் சொல்லுவேன். என்னுடைய மாயை முக்தாபாயியாக அவதரிப்பாளென்று சொல்லுகிறபோது லட்சுமியும் பிரம்மாதி தேவதைகளும் மகா ஆனந்த சமுத்திரத்திலே யமிழ்ந்தினவர்களாய்க் கைத்தாள முதலான வாத்தியங்களோடே நிர்த்தனம் பண்ணிப் புட்ப வருடம் வருஷித்து ஜய ஜயா கோஷத்தோடேபாக்கியம் பாக்கியமென்றார்கள். அக்காலத்தில் பிர்மதேவர் கர்மபூமியில் பண்ணப்படுகிற கர்மத்திற்குத்தக்கபடி சுவர்க்கம் முதலான லோகங்களின் போகத்தை அனுபவித்து மறுபடியும் அந்தக்கர்மபூமியிலேயே தள்ளப்படவேண்டியிருத்தலால் மிருத்திகாலோகம் வைகுண்டாதிகளிலுமதி சிரேஷ்டமானது. அதில் ஸ்ரீ ஹரிநாம சிரவண கீர்த்தனதியானாதிகளை நாங்களனைவரும் செய்ய நியமித்தபடியால் தன்னியர்கள் தன்னியர்களென்று சொல்லச் சந்தோஷமாய்ப் பகவதாக்ஞையின்படி வியாசரிஷிமுதலானவர்கள் அவதாரமெடுக்க விந்தப் பூமிக்கு வந்து விட்டார்கள். அதைச் சவிஸ்தாரமாய்ச் சொல்லுகிறேன் சாதுக்களே கேளுங்கள். மேல் அத்தியாயத்தில் பாவனமாயிருக்கின்ற ஜயதேவ கவியின்சரித்திரம் சொல்லப்படும். இந்தஅத்தியாயம்சம்பூரணம். ஸ்ரீவாசுதேவ ஜகத்திரையகுருவே நம: ஸ்ரீகிருஷ்ணையபரமகுருவே நம:.

## இரண்டாவது அத்தியாயம்.

# ஜயதேவர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர ஜகத்ரய குருவேநம:. பகவான் ஆக்ஞைப்படிக்கு வியாசரிஷி ஜகந்நாத க்ஷேத்திரத்திற்குச்சமீபத்திலே நிந்துபிலுக்கமென்கிற கிராமத்தில்பிராமண குலத்தில் அவதார மெடுத்து வளர்ந்துவந்தார். தாய்தந்தைகள் உபநயனாதிகளைப்பண்ணி வித்தியாப்பியாசம் பண்ணுவிக்காமலிருக்கையில் அவர் தனக்குத்தானே சகல சாஸ்திரங்களையுங் கற்றுணர்ந்தவராகி- நக்ஷத்திரங்களுக்கு மத்தியில் சந்திரனைப் போலவும் - பக்ஷிகளுக்குள்ளே கருடனைப் போலவும்- தேவதைகளுக்குள்ளே இந்திரனைப் போலவும்- தபசிகளுக்குள்ளே ஈசுவரனைப் போலவும் - யாதவர்களுக்குள்ளே கிருஷ்ண பாமாத்து

மாவைப்போலவும்- கற்களுக்குள்ளே மாணிக்கத்தைப் போலவும்- நவக்கிரகங்களுக்குள்ளே சூரியனைப் போலவும் - நதிகளுக்குள்ளே கங்கையைப்போலவும் ஜயதேவகவி யென்னும் பெயருடன் பிரகாசமாய் விளங்கினார். சுருதி ஸ்மிருதி யிதிகாச புராணங்கள் எல்லாவற்றிலும் கலியுகத்தில்ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியின்சரித்திரமேபாவனமென்று நிச்சயம்பண்ணிக்கோகுலத்தில் ராசக்கிரீடைமுதலான லீலைகளைப் பாத்மபுராணத்தில் முன்னமே வியாசரிஷியாயிருந்து வர்ணித்திருப்பதுபோலஅவைகளையேயிந்தக்கலியுகத்திலே- ஜயதேவராகிக்கோவிந்தகீதையென்னும் ஒருகிரந்தமாகச் செய்துசகலஜனங்களும்கடைத்தேறத்தக்கதாகப்பண்ணினார். அதைச்சகலஜனங்களும்கீதம்பண்ணத்தலைப்பட்டார்கள். கற்பகம்- மந்தாரம் முதலிய புஷ்பத்தின் வாசனையைப்போலக் கோவிந்தகீதை பிரகடமாயிற்று. அப்பொழுது ஜகந்நாதத்திலேயிருந்தசாத்தகியென்ற அரசன் ஜயதேவர்பண்ணின கிரந்தம்போல் தானும் ஒன்றைச்செய்து- இதுவுமதைப் போலே விளங்கவேண்டுமென்று ஆசைகொண்டு- ஜனங்களையெல்லாம் மனனம் பண்ணசொன்னான். அதைச் சகல வித்துவ ஜனங்களும்கேட்டு அங்கீகாரம் பண்ணாமல்- ஒரு கூட்டமாகக் கூடிவந்து ராஜாவைப் பார்த்து ஓ இராஜாவே நீர்பண்ணின கிரந்தத்தை ஜய தேவருடைய கிரந்தத்திற்குச் சமமென்று சொல்லுகிறீரா- நீர் பண்ணின கிரந்த முமக்கே பெருமையாயிருக்கிறது. ஒருவன் சர்வக்கியனானாலும் தன் வாக்கினாலேயே தன் பெருமைகளையும் வித்தைகளையும் சொல்லிக் கொள்ளமாட்டான் வித்தையும்பகவத்பக்தியும் ஞானோபதேசமும்-ரத்தினங்களும்- கந்தகஸ்தூரி பரிமள திரவியங்களும்- பெண்ணும் வலியவிலை கூறினால் குறைவடையுமதுபோல நீர் பண்ணின கிரந்தத்தை நீரே பெருமைப் படுத்தினால் விருதாவாகும். ஜயதேவர்ஸ்ரீஹரியினுடைய லீலாவினோதங்களை வர்ணித்ததுபோல் நானும் வர்ணித்தேனென்று சொல்லுவீரானால் அவ்வார்த்தை ஜகந்நிவாசனுக்கேற்காது- உலகத்தாருகருமேற்கமாட்டாது.அவருக்கு அங்கீகாரமாயிருக்கப்பட்டகிரந்தத்தைநாங்கள் சிரவணமனனநிதிதியாசனஞ்செய்துஆனந்தமடைவோமென்றிப்படிச்சொல்ல அதற்கு இராஜாஇந்த இரண்டுகிரந்தங்களையும்ஜகந்நாதசுவாமி சன்னிதியில் வைத்து எது பகவானுக்குப் பிரியமாக இருக்கின்றதோ பார்ப்போமென்று சொன்னான். வித்து வான்களும் பக்தர்களுமாகிய எல்லாரும் சம்மதித்து அவைகள் இரண்டையும் ஒரு இராத்திரி சுவாமிசன்னிதியிலேவைத்துக் கோவில்கதவைப்பூட்டித்திறவுகோலை இராஜாவினிடத்திலே கொடுத்துவிட்டு மறுநாள் இராஜாவுடன் வந்துபார்க்கும்பொழுது ஜயதேவருடைய கிரந்தம் சுவாமிக்குச் சமீபத்திலிருக்கிறதையும்-இராஜாவினுடைய கிரந்தம்கோவிலுக்கு வெளியிலே விழுந்துகிடக்கிறதையும்பார்த்து எல்லாரும் ஆச்

சரியத்தையும் ஆனந்தத்தையும் அடைந்தார்கள். இராஜா வானவன் மட்டும் வெட்கமடைந்து தலைகுனிந்து கொண்டிருந்தான். அப்பொழுது எல்லாரும் வேதாந்தசாஸ்திரத்திற்கும் கொக்கோகசாஸ்திரத்திற்கும் ஒப்புச்சொல்லக்கூடுமோ- சந்தன விருக்ஷமும் எட்டி மரமும் ஒப்பாகுமோ- பொன்னுக்குப் பித்தளையை ஒப்புச்சொல்லலாமா- விவேகியை மூடன் ஒப்பானோ அவைபோல ஜயதேவருடைய கோவிந்தகீதைக்கு இவ்வரசன் பண்ணின கிரந்தம் சமமாகமாட்டாதாதலால் ஜகந்நாதன் நிராகரித்துவிட்டாரென்று சொன்னதை இராஜாகேட்டு மகாவருத்தமடைந்து பகவான் சன்னிதியிலே போய் நின்றுகொண்டு ஸ்தோத்திரம்பண்ணிச் சுவாமி தேவரீருடையபெருமை இன்றைக்குத்தான்தெரிந்தது உம்முடையநாமம்பதிதபாவனமென்று நிச்சயமாகவும் சத்தியமாகவுமிருந்தும் - எனக்குமட்டும் அசத்தியமாகக்காணப்படுகிறது. சகலஜீவராசிக்கும் பிதாவான நீர் ஒருவனைத் தள்ளிவிட்டு ஒருவனை என்னுடையவனென்கிறீர்- சர்வாந்திரியாமியாய்ச் சர்வபரி பூரணராயிருக்கிற ஓ நாராயணா பக்தன் அபக்தன் ஆகிய இருவரும் உம்முடைய சக்தியினாலே தானே சஞ்சரிக்கிறார்கள். கடத்திலே வியாபித்த சூரியன்சர்வத்திரர்களுக்கும் சரியாயிருக்கின்றதல்லவா- பசுவுக்கும் புலிக்கும் நதிகளெல்லாம் வேறுபாடில்லாமலிருக்கின்றனவே- பெற்றதாய்க்கு மூடப்பிள்ளை விவேகமானபிள்ளை இருவருஞ்சரிதானே-சந்திரனுக்குப்பிரஜைகள்எல்லாருஞ் சரியன்றோ அப்படியிருக்க ஜயதேவர் சொன்ன கிரந்தத்தை மட்டும் ஒத்துக்கொண்டு நான்பண்ணின கிரந்தத்தை தள்ளிவிட்டீர். ருக்குமணிரமணா-யதுநாயகா- ஜகந்நிவாசா- ஸ்ரீநிவாசா- புருஷோத்தமா- வாசுதேவா-நாராயணா- நரசிம்மாவென்கிற நாமத்தின் பிரபாவத்தை பக்தியின்விரக்தியாய்ச்சொன்னாலும்தாரகம்பண்ணப்பட்டநாமத்தை நம்பி நான்சொன்னகிரந்தத்தை நிராகரித்த படியினாலே என்னுடைய சிரத்தை தேவரீருடைய திருவடிகளுக்குச் சமர்ப்பணம் பண்ணுகிறேனென்று வைராக்கியமாய்ச்சொல்லுகிறபொழுது- கருணாகடாக்ஷனும் தீனதயாளுவுமானநாராயணமூர்த்தி-அந்தராழிகைக்குப் பிரசன்னமாகி இராஜாவினுடைய கிரந்தத்தில் இருபத்து நான்கு சுலோகமெடுத்து ஜயதேவருடைய கிரந்தத்தோடே சேர்த்துவிட்டு அந்தரத்தியானமாய்ப்போனார். அப்பொழுது இராஜாவுக்குச் சந்தோஷமாயிற்று.

அப்படியிருக்கிற நாளில் ஜகந்நாத க்ஷேத்திரத்தில் ஒரு மஹா அயிசுவரியனான பிராமணன் வயற்றில் ஒருபெண் பிறந்தது. அந்தப் பெண்ணினுடைய நேத்திரம் கமலம் போலே யிருந்த படியினாலே பத்மாவதியென்று பெயர்வைத்து வளர்ந்துக்கொண்டு வருகிறபொழுது-அவளுடைய திவ்விய சுந்தரத்தைப்பார்த்து மாதா பிதாக்கள்.

இந்தப்பெண்ணுக்கு வரனாக ஸ்ரீமந்நாராயணனைத்தவிர மற்றொருவ ரையும் சொல்லககூடாதென்று நிச்சயம் பண்ணினார்கள். உறவினர் கள் பெண்ணைக்கொடுக்கச்சொல்லிக்கேட்டால் ஸ்ரீகிருஷ்ணார்ப்பண மாயிற்றென்றுசொல்லுவார்கள். இப்படி நாளுக்குநாள் அந்தப்பெண் வளர்ந்து வருகிறபொழுது ஒரு நாள் ஜகந்நிவாசன் இந்தப்பிராம ணனுடைய சொர்ப்பனத்தில் காட்சியருளி ஓ பிராமணா உன்னுடைய குமாரத்தியை யெனக்கு அர்ப்பிதம்பண்ணினாயானாலிப்பொழுது கலி யுகம் - நான் அர்ச்சாரூபமாயிருக்கிறேன். என்னுடைய அவதாரமான ஜயதேவகவியென்று ஒருவரிருக்கின்றார் - அவருக்கு நீர் உம்முடைய கன்னிகையை அலங்காரம்பண்ணிக்கன்னிகாதானம்பண்ணும்- அதுவே நமக்கு மகாசந்தோஷமாயிருக்குமென்று சொல்லிவிட்டு அந்தர்த்தா னமானார். பிராமணன்விழித்துககொண்டு ஆனந்தத்தை அடைந்துஅப் பொழுதே ஜயதேவசுவாமியை அழைப்பித்துப் பொருத்தமிமித் தங்களையும் பார்த்து விவாகமண்டபத்தில் நல்லதிவ்வியமுகூர்த் ததில் பத்மாவதியையும் ஜயதேவரையும்அலங்காரம் பண்ணிமண வறையில்உட்காரவைத்துகேசவா - நாராயணா - மாதவா - கோவிந்தா- கோபாலா - தேவாதிதேவா- மதுசூதனா - வாசுதேவா - பெண்ணையும் பிள்ளையையும் இரக்ஷியும; கோகுலபாலகா - துவாரகாவாசி - பண்டரி நாதா இருஷீகேசா - ஜெகதீசா- ஸ்ரீநிவாசா- ஜகதுத்தாரகா- அனந்தகலி யாணகுணநிதி-பெண்ணையும்பிள்ளையையும்இரக்ஷியும்; கிருஷ்ணா- வா மனா- ஜநார்த்தனா - நரசிம்மா - குணதாமா - அரங்கதாமா - திரிவிக்கி ரமா- பெண்ணையும் பிள்ளையையும் இரக்ஷியும்; வைகுண்டவாசி-க்ஷீரசா கரவாசி - வடபத்திரசாயி - சேஷசாயி - ருக்குமணிமனோரஞ்சிதா- டக் ஷிந்நாமணி - கருடவாகனா - காருண்ணியமூர்த்தே - பெண்ணையும் பிள்ளையும்இரக்ஷியும்; ஸ்ரீராமச்சந்திரா - சமஸ்தகலியாணகுணாபி ராமா - சீதாஹிருதயகமலமார்த்தாண்டா - தயித்தியகுலபஞ்சனா - தேவரிஷிமுனிஜெனநீலோத்பலசந்திரா-பக்தார்த்திபஞ்சனா -பக்தஜன ஹிருதயகமலபிருங்கா - பிர்மாதிதேவமுனிஜனவந்திதா - பெண்ணை யும் பிள்ளையையும இரக்ஷியுமென்று பிராமணர்கள் மங்களாசாசனம் சொல்லி விவாஹமஹோற்சவத்தைப்பண்ணுவித்தார்கள். ஜயதேவக வியும் சந்தோஷமாய் ஜெகந்நாதத்திலே வாசம்பண்ணிக் கொண்டு பகவத்பக்தியையிடைவிடாமல் பண்ணிக்கொண்டுவந்தார்.

அப்போது அவ்விடத்திலே ஒருவர்த்தகன் - பரதிரவியாபகாரம்- பரஸ்திரிசமனம் - பரபீடைகளைச்செய்யாதவன் - வேதசாஸ்திரகோ பிராமணர்கள் தேவதைகளிடத்திலே சத்திய புத்தியோடேகூடின வன் - ஹரிபக்தியோடேகூடினவன் - சிதோஷ்ண சுகதுக்கமானவமா னங்களை வர்ஜித்தவன் - சுசீலன் - மாதுருபிதுருசிசுரூஷையில் தவறு

தவன் - ஜயதேவசுவாமியைச் சரணமடைந்தான். அவனுக்கு உபதேசம் பண்ணிக்கிருபைபண்ணினர். அதின்பிறகு ஒரு நாள் அந்த வர்த்தகன் க்ஷமை - சாந்தி - நிஷ்காமபுத்தி-தயை - உதாரத்துவம் - தீரத்துவம் - அஷ்டாங்கயோகம் - ஞானம் - பகவத்பக்தி - முதலான குணங்கள் சாதுசங்கமில்லாமற்போனல் வரமாட்டாதென்று எண்ணி - ஜயதேவசுவாமியைத் தன் வீட்டிற்கு அழைத்துக்கொண்டுபோய் - இரவும் பகலும்சேவை பண்ணிக்கிருதார்த்தனுகவேண்டுமென்று பிரார்த்தித்ததின்பேரில் அவர்கிருபை செய்தருளினர். உடனே அவரை இரதத்தில்உட்காரவைத்துக்கொண்டு தன்னூருக்கு அழைத்துக்கொண்டுபோனன். அவன்அவ்விடத்தில்பாகவதோத்தமருக்குக்கயிங்கரியம்பண்ணிக்கொண்டிருக்க அவருடையகீர்த்தனங்களை ஜடமூடபாமரர்கள்முதலான சமஸ்தஜனங்களும் சிரவணம்பண்ணி ஆனந்தபரிதரானர்கள். இப்படிக்கு அவ்விடத்தில் ஒருமாதபரியந்தம் வாசம்பண்ணிப் பிறகு ஜெகந்நாதத்திற்குப்போகவேண்டுமென்று வர்த்தகனேடுசொன்னர். அப்பொழுதுவர்த்தகன் சகலமானபூசைகளையும் பண்ணிச்சாஷ்டாங்கமாகச்சேவித்துத் தங்களுடைய சரணரவிந்தத்தின்தியானம் என்னுடையசித்தத்தில் எந்நேரமும் இருக்கும்படிகிருபைபண்ண வேண்டுமென்று பிரார்த்தித்துக்கேட்டுக்கொண்டான். அவரும் பரிபூரணகிருபைபண்ணிவிட்டுப்புறப்பட உத்தியுக்தமானர். அப்பொழுது வர்த்தகனைவன்குருவுக்கு என்னகொடுப்போமேரோ நிரபேக்ஷர் - இவர் ரத்தினத்தையும் மிருத்திகையையும் சரியாய்ப்பார்க்கிறவரென்று யோசனைபண்ணி- ஒருஇரதம்திட்டப்படுத்தி- அதிலேயிவருக்கும்தெரியாமல் குப்தமாக ரத்நாபரணங்கள் முத்தாரங்கள் முதலியவைகளை வைத்து இரண்டு சேவகரைத்திட்டப்படுத்தி - அவர்களுக்கு சொன்னதாவது! அதிலே குப்தமாயிருக்கிறரத்தினங்கள் ஆபரணங்கள் முதலியவைகளை ஜயதேவசுவாமிக்குத் தெரியாமல் பத்மாவதி அம்மாளுக்கு என்பேராலே அநந்தங்கோடி சாஷ்டாங்கதண்டம் சொல்லிக்கொடுங்களென்று திரவுகோலையும் அவர்கள்கையில்கொடுத்துஜயதேவசுவாமியோடு வெகுதூரமளவும் வந்துவழிகூட்டி அனுப்பிவிட்டுப்போய்விட்டான். ஜயதேவசுவாமிகள்புறப்பட்டுவருகையில்வழியிலேயிந்தவர்த்தகனுடைய சேவகர்கள் இரண்டுபேரும் ஆபரணங்களுக்குஆசைப்பட்டுமோசம்பண்ண நினைத்து - ஒருவன்என்பெண்ஜாதி கர்ப்பமாயிருக்கிறள் என்றும் மற்றொருவன்தன்வீட்டில் அலுவலிருக்கிறதென்றுமாகஇப்படிஉத்தரவுகேட்டார்கள். அதற்குஜயதேவசுவாமி சேவகனுக்கும் - அடிமைக்கும் - மிருகஜந்துக்களுக்கும் சரீரம்பராதீனமாயிருக்கின்றதென்று எண்ணி உத்திரவுகொடுத்தார். அவர்கள் தங்களிடத்திற்குப்போவதுபோலப்போக்குக்காட்டி- ஜயதேவசுவாமி மாத்திரம் உட்கார்ந்து இரதத்தை ஓட்டிக்கொண்டு போகையில்

சந்துக்கட்டானவிடம் பார்த்துக் கிட்டநெருங்கினர்கள். அவர்களை ஜயதேவசுவாமிகண்டு இவர்கள்குடிலர்கள் என்றுநினைத்துஇந்தரதத்திலே இருக்கிறசமஸ்தமும் நீங்கள் எடுத்துக்கொள்ளுங்கள் என்று ரதத்தை விட்டுவிட்டுமுன்னேபோனர். அப்போதுஇந்தத்திருடர்கள் இவரை விட்டால் வர்த்தகனுக்குச் சொல்லிநம்மைச்சிக்ஷைபண்ணு வாராகையால் இவருடைய பிராணனை அபகரித்துவிடுவோமென்று ஒருவன் சொல்ல மற்றொருவன் இவர்பகவத்பக்தராகையால் கொல்லலாகாதென்றுஇரண்டுபேருங்கூடி முன்னேபோகிறவரைப்பிடித்து கை கால்களைவெட்டி ஒருபாழுங்கிணற்றிலே தள்ளிமறுதேசத்துக்குப் போய் விட்டார்கள்.

அப்போது ஜயதேவசுவாமி ஸ்ரீவச்சகவுஸ்துவதரனையே நினைத்துக்கொண்டு சுகதுக்காதிகள் லேசமும் தன்சித்தத்தினிடமணுகாமல் பகவத்பக்தியோடே கூடிக்கொண்டு ஆனந்தபரவசமாயிருக்கையில் - விஞ்சதேசத்து இராஜா வேட்டையாடிக்கொண்டு அன்றையத்தினம் இராத்திரிவனத்திலே தங்கியிருந்தான். அவன் இந்தப்பாழுங்கிணற்றிலே தோன்றிய ஒருபிரகாசத்தைக்கண்டு ஆச்சரியமாய்வந்து பார்க்கும்போது மஹானுபாவர்பகவத்தியானத்தோடேயிருக்கிறதும்- சிலவேளையில் ராமா-கிருஷ்ணா-கோவிந்தா-வென்கிறதும்கண்டு தானேயிறங்கி வெளியிலே அவரை யெடுத்துக் கொண்டுவந்து சேவித்து இதென்ன காரணமென்று கேட்க ஜயதேவசுவாமி யெனக்கு ப்பிறவியிலேயே யிப்படிக்கரசரணாதி அவயவங்களில்லை யென்று சொன்னதைக் கேட்டு இராஜாவானவரிவர்யாரோ மஹானுபாவர் மஹாபக்த சிரோமணியாயிருக்கிறாரென்று பிரார்த்தித்து பல்லக்கின்மேல் வைத்துத் தன்னுடைய நகரத்துக்குக்கொண்டுவந்து தன்னுடைய சிம்மாதனத்திலுட்காருவித்து ஐம்பது புத்திசாலியான பரிசாரகர்களை ஊழியத்திற்குத்திட்டம்பண்ணிச்சர்வஜாக்கிரதையாகப்பாகவதகைங்கரியம்பண்ணக்கட்டளையிட்டார். அவர்கள் இராஜாவைப்பார்த்து ஸ்தோத்திரம்பண்ணிச்சொல்லுகிறார்கள். இன்றைக்குத்தான் நாங்களநந்தங்கோடிஜென்மங்களிலே செய்தபுண்ணியங்களின்பயனைப்பெற்றோம் மஹாபாக்கியமெங்களுக்கு லபித்தது. எப்படியென்றால் சத்திரம் தேவாலயம் கோபிராமணர்கள்ரக்ஷணை முதலானதர்மங்களைப்பரிபாலனம் செய்கிறதற்கு ஒருவரால் நியமிக்கப்பட்டவர்கள் அவற்றை யெச்சரிக்கையாய்ப் பார்த்துவந்தால் அவர்களுக்குந்தர்மப்பயன் கிடைப்பதுபோலவும் - யாத்திரைக்குப்போகிறவர்கள் பின்னாலே கூலிக்குப்போகிறவனுக்கும் யாத்திரைப்பலன்கிடைப்பது போலவும் - ஸ்ரீஇராமச்சந்திரனைச் சேவித்து அயோத்தியாவாசிகள் அவரோடே கூடப்பரமபதப் பிராப்தமானாற்போலவும்- ருக்குமாங்கதராஜாவினுடையவேகாதசிவிரதத்துக்கு

அவருடைய ஆக்கினையினாலே சர்வஜனங்களும் அனுஷ்டித்துக்கடைத்தேறினது போலவும் எங்களுக்கு இராஜாவாலே அன்னங்கிடைப்பதே யன்றிப்பவரோகமுந்தீரும் படிசாதுசேவைக்குக் கட்டளையிடப்பட்டது எங்களுக்கு இதுவே பாக்கியம் பாக்கியமென்று கொண்டாடிச்சேவை செய்து வந்தார்கள். இராஜாவானவர்பிரதிதினம்சேவைபண்ணிவிட்டுப் போவார். இப்படியிருக்கையில் ஒருநாள் நான் கடைத்தேறத்தக்கதாக ஒருசாதனம் அனுக்கிரகம்பண்ணவேண்டுமென்று பிரார்த்திக்கிறபோது ஜயதேவசுவாமி கிருபையோடே இராஜாவைப்பார்த்து ஓ ராஜாவே ஸ்ரீவாசுதேவனுக்குச் சாதுக்களைப் பூசை பண்ணுகிறவனிடத்திலிருக்கிற கிருபைஇலட்சுமியினிடத்திலுமிருக்காது ஆகையால்சாதுபூசையே நீரும் பண்ணுமென்றுசொன்னதற்குச்சாதுக்களுடையலட்சணமுஞ்சின்னமும் தெரியச்சொல்லவேண்டுமென்று கேட்டார். அதற்குஜயதேவசுவாமி ஊர்த்தபுண்டரமுங்கழுத்திலேதுளசிமணிமாலையும்பூண்டுவாக்கிலே ராம நாமம் ஜெபித்துக்கொண்டிருப்பார்களென்று சொன்னார். அதைக்கேட்டு இராஜாவானவன் சந்தோஷமாகிக்குருவைச்சரணமடைந்துசாதுக்களையும் வைஷ்ணவர்களையும் பூசை பண்ணிக்கொண்டு வந்தார். அவர்வீட்டுக்கு யாசகர்கள் பக்தர்கள் அபரிமிதமாய்வரத்தலைப்பட்டார்கள். எப்படி யெனில் வெயிலிலே தப்தமாய்வதிப்பட்டுக்கொண்டு போகிறவன் குளிர்ந்த விடத்தை தேடிக்கொண்டு போவதுபோலவும் - கனிகளால் நிறைந்திருக்கிறமரத்திற்குப்பட்சிகள் ஓடிவருவது போலவும்- மேகத்தைப்பார்த்து மயில்கானனவை எழுவதுபோலவும் - யாசகர்கள் வந்தார்கள். வந்தசகலமானபேருக்கும் பக்தியோடே அன்னவஸ்திராதிகளைக் கொடுத்துப் பூசித்துக்கொண்டுவந்தார். வருகிறபகவத்பக்தர்முதலானவர்கள் முன்னே ஜயதேவசுவாமியைச்சேவித்து விட்டு அப்பால் இராஜாவினிடத்தில்போகிறது வழக்கம். அவர்களுக்கு இராஜா அபீஷ்டமானதைக் கொடுத்துப்பூசைபண்ணி அவர்களிச்சாப்பிரகாரம் அனுப்பிவிடுவார்.

இப்படியிருக்கிற செய்தியை ஜயதேவரைக் கை கால் வாங்கின அந்த இரண்டு திருடர்களுங்கேட்டுநாமும்பகவத்பக்தவேஷம்போட்டுக்கொண்டுபோய் இராஜாவினிடத்தில் வேண்டிய திரவியம்வாங்கிக் கொண்டுவருவோமென்றெண்ணிவந்தார்கள் - ஆனால் ஜயதேவர் இவ்விடத்திலே யிருக்கிறாரென்று இவர்களுக்குத்தெரியாது. கபடவேஷமாய்க்கொக்குப்போலும்காகப்பொன்போலும்மூடஜனங்களுக்குச்சம்சாரத்தில் இருக்கிறபொழுது வந்தவிரக்திபோலும் விளங்கிக்கொண்டிருக்கிற அந்த இருவரும் இராஜாவின் அரண்மனைக்கு உள்ளேவந்து ஜயதேவரைக்கண்டு மிகவும் நடுக்கமடைந்தார்கள். அப்போதுஜயதே

வர் நிர்வைரமாய்ச்சகல பூதங்களிடத்திலும் சமானமாய்ச் சாந்தராய பாரதிகளுடைய தோஷகுணத்தை யெண்ணுதவராய்எங்கும் நாராயணமூர்த்தி சொரூபமாய்த் தியானித்துக்கொண்டிருக்கிறவர் சிம்மாசனத்தை விட்டெக்குதித்தார். அதைக்கண்ட அவர்கள் இரண்டு பேரும் உடனே ஓடிவந்து சரணத்தில் விழுந்தார்கள். அவர்களை யெடுத்து ஆலிங்கனம்பண்ணிக்கொண்டுசமீபத்திலிருக்கிறசேவகரைப்பார்த்து ஜயதேவர் இந்தஇரண்டு புருஷர்களும் மஹாபிரேமளபக்தர்கள் இதுவரையிலிப்படிப்பட்ட சாதுக்கள் இங்கு வந்ததில்லையென்று இராஜாவுக்குச் சொல்லி நிரம்பவும் சம்மானம்பண்ணச் சொல்லுங்களென்று சொன்னூர். அப்படியே அவர்கள்போய் இராஜாவுக்குச்சொல்ல இராஜாவுமெதிர்கொண்டுவந்து சாஷ்டாங்கமாகச் சேவித்து அவர்களுக்கு நானுவிதமாய்ப்பூசைபண்ணிப் போஜனுதி உபசாரங்களுஞ் செய்துவிட்டுச்சுவாமிகளே தங்களுக்கிச்சையானபடி சுகமாயிருந்து இந்த எனது கிரஹத்தைப் பவித்திரம்பண்ணிக்காப்பாற்ற வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். அவர்களும் அப்படியே யிருக்கிறோமென்று சொன்னுர்கள். அன்றையத்தினம் இராத்திரியே யிவர்கள்கபடவேஷக்காரர்களான படியினுலே தங்கள் குற்றத்தைநினைத்துக்கொண்டு ஒருவருக்கொருவர் சுகனின சம்பந்தம்போல் விளக்கைக்கண்டு கனியென்று ஆசையாய்வந்து விழுந்துமடிகிற விட்டிற் புழுப்போலும் - தூண்டிலில் வைத்திருக்கிற இரைக்கு ஆசைப்பட்டுவந்து மடிகிற மச்சங்களைப்போலவும் - இவ்விடத்தில்வந்து நாம் அகப்பட்டுக்கொண்டோம். இவர்கள் செய்கிற உபசாரம்எல்லாம் கபடமாய்நம்மைஇப்பொழுது போஷித்துக் கடைசியிலே கத்தியால்ஆட்டுக்கடாவைஅறுப்பதுபோல் துண்டந்துண்டமாயறுக்கிறதற்கு என்றுதோன்றுகிறதெனச்சொல்லிக்கொண்டதல்லாமல் இராவும்பகலும்ஏக்கமாய் என்னஉபசாரங்களைப்பண்ணினுலும்செழிக்காமலிளைத்துப்போனுர்கள். இராஜாவானவர்கண்டுஜயதேவசுவாமி அண்டையில்வந்துசுவாமீயிந்தஇரண்டு மஹானுபாவர்களுக்கு மாத்திரம் தாங்கள் எழுந்திருந்து உபசாரம் பண்ணினதல்லாமல் என்னையும் அவர்களுக்குச் சம்மானம்பண்ணும் படிக்கும் உபசாரம்பண்ணும்படிக்குஞ் சொன்னீர்கள். நானுமப்படியேபண்ணிக்கொண்டுவருகிறேன். என்னபண்ணினுலுமவர்களுக்குச் சரீரம் பெருக்காமல் ரோகிஷ்டர்களைப்போலஇளைத்துப்போகிறுர்களிதுவென்ன ஆச்சரியமென்றுகேட்க-அப்பொழுது ஜயதேவர் இவர்கள் மஹானுபாவர்கள் மஹாவிரக்தர்கள் விஷயபோகம் ருசிக்கவில்லை. அதனுல்அப்படி யிருக்கிறுர்களே யொழியவேறில்லை. அவர்களித்தனை நாளிருந்ததுஉன்பாக்கியம். அவர்கள் தம்மிடத்திற்குப் போகவேண்டுமென்று அபேக்ஷித்தால் உடனே கேட்டதிரவியங்களைக் கொடுத்து உபசாரம்பண்ணி அனுப்புவியுமென்று சொல்ல- இராஜா அப்படியே

செய்கிறேனென்று சொல்லிவிட்டுப்போயினார். இப்படியிருக்க அந்தக் கபடவேஷர்கள் இராஜாவிடம் வந்துஊருக்குப்போகவேண்டுமென்று உத்தரவுகேட்டார்கள். அதற்கு இராஜா சுவாமிகளேஅவ்வாறே செய்யலாமென்றுசொல்லி நிரம்பவும் உபசாரம்பண்ணி உங்களுக்குஅபேக்ஷையானதைக்கேளுங்களென்றார். அவர்கள் எங்களுக்கு அபேக்ஷை ஒன்றிலேயுமில்லை ஆனால் நாங்கள்போகிறதற்குஇரண்டு இரதமும் அதிலேகொஞ்சம் திரவியமும் வைத்துக்கொடுக்கவேண்டு மென்று சொன்னார்கள். அப்படியேஇராஜாவஸ்திர ஆபரணங்களும்கொடுத்து இரதங்களும் திட்டம்பண்ணி அதிலே திரவியமும் யதேஷ்டமாக வைத்துக்கொஞ்சம் சேனையும் கூடக்கூட்டிஅனுப்புவித்தார். அவர்களும்ஜயதேவரிடத்தில் உத்தரவுபெற்றுக்கொண்டு புறப்பட்டுவருகிறபொழுது வழியில் ஒருவனத்திலேவருகையில் கூடவந்தசேவகர்களிவர்களைப்பார்த்துச்சுவாமிகளேயெங்கள் இராஜாவீட்டிலேகோடாகோடிபக்தர்கள் வருகிறார்கள் அவர்கள் எல்லாரையும்பார்க்கிலும்உங்களுக்குஎங்கள் ஜயதேவசுவாமி அதிகமாய்ச் சம்மானம்பண்ணினதும் - விசுவாசமாகவிருந்ததும் - எங்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது அதென்ன காரணமென்று வணக்கத்துடனேகேட்கஅவர்களைப் பார்த்து முன்னே அவிந்ததேசத்து இராஜாவிடத்தில் ஜயதேவர் பிரதானியாகவும் நாங்கள் சேவகராகவுமிருந்தோம் - அப்படியிருக்கிறபொழுது ஒருநாள் ஜயதேவர் மகாஅபராதம் பண்ணினாரென்றுஇராஜாகோபங்கொண்டு எங்களைப்பார்த்து இவரைக்கொண்டுபோய் வெட்டிவிடுங்களென்று உத்தரவுபண்ணினார். நாங்களிவரைப்பிடித்துக்கட்டிக்கொண்டு ஒரு ஆரணியத்திலேவந்துகொன்றுவிடாமல் சரசரணங்களைமட்டுமெடுத்துவிட்டு அங்கிருந்த வொருபாழுங்கிணற்றிலேதள்ளிவிட்டுப் பட்டணத்திற்குப்போய் இந்தச்செய்தியை இராஜா அறிந்தால் எங்களுக்குக் கடுமையான தண்டனைவிதிப்பாரென்றெண்ணி அவர் சேவகத்துக்குப்போகாமல் அன்றுமுதலிப்படிக்கு விரக்தர்களாய்த்திரிந்துகொண்டு இங்கேவந்தோம். வந்தவிடத்தில் அகஸ்மாத்தாய் ஜயதேவர்எங்களைக்கண்டமாத்திரத்தில் தன்னைக்காப்பாற்றினவர்களென்று நன்றிமறவாமல் இப்படிக்குஅதிகமான சம்மானம்தாமும் பண்ணி இராஜாவைக்கொண்டும் பண்ணுவித்தாரென்று சொன்னார்கள். இந்தச்சத்தத்தைப்பூமிதேவிகேட்கப்பொறுக்காமல் நடுங்கிப்பூமி இரண்டாய்ப் பிளக்க இரண்டுஇரதமும் அந்தப்பிளப்பில் விழுந்தன. அந்தஇரண்டுபேரும் பூமியிலே முழுகிப்போய்விட்டார்கள். அதைச் சேவகர்கள்கண்டு மிகுதியும் ஆச்சரியமாய்ஓடிவந்துநடந்தசெய்திகளை இராஜாவோடும் ஜயதேவசுவாமிகளுடனும் சொன்னார்கள். இதைக் கேட்டவுடனேஜயதேவர்நிரம்பவிசனமாகிக்கண்களிலிருந்து ஜலம்பெருக ஓஜகந்நாதா-ஸ்ரீகிருஷ்ணா-வாசுதேவா-பதிதபாவனா-பக்தவச்சலா.

ருக்குமணிரமணா - நாராயணா - சகலஜீவாந்தரியாமி - ஜகதீசா -என்னு டைய சத்துருவை அதோகதியிலேன்போக்கிறாய். உம்முடைய விரோதிகளாகிய ஹிரணியகசிபன் - இராவணன் - கும்பகர்ணன் - சிசுபாலன்-தந்தவக்கிரன் - கம்ஸன் - பூதனை- சாணூரமுஷ்டிகர் முதலான சமஸ்தருக்கும் உத்தமகதியைக்கொடுத்தாஎன்னுடைய சத்துருவுக்குமட்டும் ஏனோஇந்தக்கதியைக்கொடுத்தாய் - மதுசூதனா - ஜனார்த்தனா - கோவிந்தா - கருணாநிதே - தீனதயாளா - என்றுஇப்படி உருக்கத்துடனே ஸ்தோத்திரம் பண்ணுகிறதைக்கேட்டுஸ்ரீகிருஷ்ணபரமாத்துமா சந்தோஷத்தையடைந்து உடனே ஜயதேவருக்குச் சதுர்புஜராய்- சங்குசக்கர அஸ்தராய்- கதாசாரங்கதராய்- கவுஸ்துவாபரணராய்-மேகசாமளராய் - கோடிசூரியப்பிரகாசராய்-அனந்தகல்யாண குணநிதியாய்- கருணாசிந்துவாய்- பிரசன்னமானார். உடனேஜயதேவர் காசரணாதிகளையடைந்து தேகபரவசராயானந்தத்திலமிழ்ந்தினவராய் ஸ்தோத்திரம்பண்ண ஜகத்குருவும் பிதாவுமான ஸ்ரீவாசுதேவன்கருணையினாலே கடாட்சம்பண்ணிவிட்டு அதிரிசியமானார். இந்த மஹோத்சவத்தை ராஜாகேட்டு ஜயதேவரைச்சரணமடைந்துஸ்தோத்திரம்பண்ணியிற்கையில் ஜயதேவருடைய உத்தரவுப்படிச் சகலவிருதுகளுடனே அவரை பல்லக்கில்வைத்துக்கொண்டுஅந்த ஆரணியத்துக்குபோனார். அப்போதுஇவர்களனைவருக்குமுன்பாக விமானமொன்று வைகுண்டத்திலிருந்துவந்தது. [illegible]பிளந்துமுழுகப்பட்டுக் கிடக்கிற அந்த இரண்டுபேருமெழுந்திருந்து வெளியேவந்து ஜயதேவரைச்சரணமடைந்து சுவாமிஇதுமகாஆச்சரியம் - பக்தர்களுடைய பெருமையேபெருமை மஹாபாபிகளும்சாதுக்களிடத்தில்துவேஷம் பண்ணின பரமசண்டாளருமான நாங்களும் உத்தமகதியடையக்கிருபைபண்ணினீர். தயவு - க்ஷமை - சாந்தி - உங்களிடத்தில்தான் வாசம் பண்ணுகின்றன. இந்தஷிகேசனும் உம்மிடம்விட்டுக்ஷணப்பொழுதாகிலும் பிரியான். இந்தமகிமை பிர்மாதிதேவதைகளுக்குந்தெரியமாட்டாது. ஆச்சரியமாச்சரியமென்று அனந்தவிதமாய் ஸ்தோத்திரம் பண்ணிவிட்டு விமானத்திலேறிக்கொண்டு சகலரும்பார்க்கப்பரமபதமான வைகுண்டத்துக்குபோனார்கள். அப்போது அங்கேவந்திருந்த சகலரும் ஜயதேவரைஸ்தோத்திரம்பண்ணிவிட்டுப்பட்டணம்போய்ச் சேர்ந்தார்கள்.

ராஜா நிரம்பவும் ஆச்சரியத்தையடைந்து ஜயதேவரைச் சரணமடைந்து சுவாமி இதற்குமுன்னடந்தவைகளைத்தயைசெய்து ஒளியாமற்சொல்லவேண்டுமென்று கேட்கும்போது அவர் ஆதிமுதல்நடந்தவைகளையெல்லாம்சவிஸ்தாரமாய்ச் சொல்ல - ராஜா கேட்டு ஆனந்தத்தையடைந்து மறுபடியும் வணங்கிச் சுவாமி தேவரீருடையமஹாபத்

இனி என்னுடையதாயார்- அந்த அம்மனைப்பூசைபண்ணவேண்டுமென்றுமிருக்கு அபேக்ஷையிருக்கிறபடியால் தேவரீர் கிருபை பண்ணி அவ்வெண்ணத்தைநிறைவேற்ற வேண்டுமென்றுபிரார்த்திக்கிறபோது ராஜாவினுடையபக்தியைப் பார்த்து அப்படியேஉத்தரவுபண்ணராஜா சகலவிருதுடனேபோய்ப்பத்மாவதிஅம்மாளைஅழைத்துக்கொண்டுஜய தேவரிடம் வந்து சேர்ந்தார். அப்போது மஹாலட்சுமிக்குச்சமான மானரூபவதியாகிய பத்மாவதி தன்பிராணநாதரான ஜயதேவரைப் பிரதக்ஷணம்வந்து நமஸ்காரம்பண்ணிவணங்கி நிற்க - ராஜாவானவர் அந்தஅம்மனுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணி அனேக ஆபரணங்கள்திவ்வியவஸ்திரங்கள்கொடுத்துபரிமளவஸ்துக்களினாலேபூசை பண்ணிவிட்டுத் தன்னுடைய ஸ்திரீயைப்பார்த்து நீ பிரதிதினம்சதா இந்த அம்மனுடைய கைங்கிரியம் பண்ணிக்கொண்டுவா நான் சுவாமியினுடைய கைங்கிரியம் பண்ணிக்கொண்டுவருகிறேனென்று இருவரும் மஹா பயபக்தியுடனே சிசுருஷையைத் தவறாமல் செய்துகொண்டு வந்தார்கள். இப்படிச் செய்துகொண்டுவருகிற நாளில் ஒரு நாள் பத்மாவதி அம்மாள் சிம்மாசனத்திலிருக்க ராஜஸ்திரீயும் அனேக ஸ்திரீகளுடனே கூட உட்கார்ந்து கொண்டிருக்கிற வேளையில் ஒருசேவகன் வந்து ராஜஸ்திரீயினுடைய தம்பி இறந்துபோய்அவனுடைய ஸ்திரீயும் சககமனம்பண்ணினாளென்றுசொன்னான். அதை ராஜ ஸ்திரீ கேட்டு மிகவிசனப்பட்டுக்கொண்டிருந்தாள். அப்போது காயத்திரி சாவித்திரிக்குச்சமானமாய் விளங்கிக்கொண்டிருக்கிற பத்மாவதி அம்மன் கொஞ்சமும் ஆச்சரியப்படாமல் சும்மாவிருந்ததை ராஜஸ்திரீபார்த்து ஓ அம்மணி இப்படிஆச்சரியமானகாரியத்திற்குக் கூட ஆச்சரியப்படாமல் சும்மாவிருந்து விட்டீர்களேயென்றுகேட்க அதற்குப்பத்மாவதி அம்மாள்அவளைப்பார்த்துச்சகலத்தையும்மறந்து ஏழுஜன்மத்துக்குமந்தப்புருஷனுடனே கூடியிருக்க விரும்பியஉன்மைத்துனிஅப்படிச்சககமனம்பண்ணவேணடியதில்லை. புருஷன்ஜீவன் போனசெய்திகேட்ட மாத்திரத்திலே ஸ்திரீயானவள் யிறந்துபோகவேண்டும். சூரியன் அஸ்தமித்தால் சூரியகிரணம் எப்படிஉடனே போய்விடுமோ - தேகச்சாயையானது தேகத்துடனே யெப்படிநீங்குமோ- அப்படி நீங்கவேணடியதே பதிவிரதைகளினுடையதர்மமாகும் என்றுசொல்லப் பத்மாவதிஅம்மனின் அச்சொல்லைக்கேட்டுஇராஜஸ்திரீ ஆச்சரியப்பட்டுநல்லதென்றுதனக்குள்ஆலோசித்து இந்தஅம்மாள்சொன்னவார்த்தை அனுபவமில்லாமல் சொல்லப்பட்டிருக்கின்றது- அனுபவமில்லாமல் பிரமஞானம் பேசுகிறதும்- ஈசுவரகிருபையில்லாமலனேக யோசனைகளைப்பண்ணுகிறதும்- விருதாவாகும். அனுபவமில்லாத படியால் எஜமானனில்லாதவீடுபோலும்- மூக்கில்லாத அலங்காரம்போலும்- சாமர்த்தியமில்லாதவீரன்போலும்-மலடியான

ன் சொல்லும் பிரசவவருத்தம்போலும் பத்மாவதி அம்மனுடைய ார்த்தையை அசத்தியமாகஎண்ணிப்பிரதானியைத்தனியேயழைப் பித்து அவ்விடத்தில் நடந்ததைச்சொல்லி அதைப்பரீக்ஷிக்கவேண்டிய நிமித்தம் ஜயதேவரும் இராஜாவும் வேட்டைக்குப்போயிருக்கிறவே ாயில் ஜயதேவரிறந்துபோய் விட்டாரென்று பொய்யாகச்சொல்லி னுப்புவிக்கவேண்டு மென்றுசொன்னாள். பிரதானியும் அதற்குச் ம்மதித்துச் சமையம்பார்த்துக்கொண்டிருக்கையில்ஒருநாள்இராஜா யதேவரைப்பல்லக்கில்வைத்து அழைத்துக்கொண்டுவேட்டைக்குப் றப்பட்டுப்போனார். அவ்விடத்திலிருந்து பிரதானியானவன்ஒருசேவ னை நகரத்துக்கு அனுப்பி இராஜஸ்திரீயுடனே ஜயதேவரைப்புலி மூத்துக்கொண்டுபோய்விட்டதென்றும் அடையாளமாக இந்தவஸ் ரத்தைக் காண்பியென்றுச்சொல்லி ஒருவஸ்திரத்தையும் மிருகத் துன் இரத்தத்திலேநனைத்து அனுப்பிவிட்டான். அந்தச்சேவகன் பட் டணத்துக்கு வந்து இராஜஸ்திரீயுடனே அந்தச் சமாசாரத்தைச் சொல்ல அவள் கபடமாய்ப் பெருங்குரலிட்டு அழுதுவக்கினாள். அதைப்பத்மாவதி அம்மன்கேட்டு ராஜஸ்திரீயிருக்குமிடத்திற்குவந்து ஏன்அம்மாள் அழுகிறாயென்றுகேட்க ராஜஸ்திரீயானவள் ஓ அம்மணி நமக்கிப்படிப் பொல்லாத காலம்வருமா தாயே ஜயதேவரைப் புலிய டித்து விட்டதேயென்று நிஜம்போலச்சொல்ல அதைக்கேட்டமாத்தி ரத்தில் பத்மாவதி அம்மனுக்குச்சூரியன் அஸ்தமனமானவுடனே அதன் பிரபைஅடங்குவதுபோலும் புஷ்பத்தைநசுக்கினவுடனே யதன்வா சனை போவதுபோலும் தீபமறைந்தவுடனே யதன் பிரகாசமறைவது போலும் ஆவென்றசத்தத்துடனே பிராணன் நீங்கிவிட்டது. அப் பொழுது இராஜஸ்திரீயானவளென்ன செய்வோமென்று பயந்து கொண்டிருக்க அந்தக்ஷணத்திலே இராஜாவும்ஜயதேவரும்வந்துசேர்ந் தார்கள். இராஜாஇந்தச்செய்தியைக்கேள்விப்பட்டுப் பிரதானியைய ழைப்பித்துச் சகலவிருத்தாந்தமும் தெரிந்துகொண்டு இதற்குத்தன் னுடையஸ்திரீயைக்கொன்றால் ஸ்திரீஹத்திவருமாதலால் தானேபிரா ணனை விடுவதுநலமென்று நிச்சயம்பண்ணிச் சரீரத்தை விடும்பொ ருட்டு அக்கினியையவளர்க்கச் சொல்லிவிட்டுப் புத்திரர்களை அழைப் பித்து அவர்களுக்குச் சொல்லவேண்டியவைகளையெல்லாம் சொன்ன பிறகு வெளிப்பட்டு அக்கினிப்பிரவேசம்பண்ணப்போகையில்ஜயதே வசுவாமியைச் சேவித்துக்கொண்டுபோவோமென்று எண்ணிவந்து சாஷ்டாங்கமாகச் சேவித்து - சுவாமி நான் மகாபாபி யென்றாலே பெருந்துன்பம் வந்ததென்று சொல்ல - அந்தச்சர்வக்ஞரான ஜயதேவ சுவாமி யெல்லாவற்றையுமறிந்து இராஜாவின் கையைப் பிடித்துக் கொண்டுநீர் பிராணனைவிடவேண்டாமென்று பலவித ஆதரவானவார்த்

தைகளைச்சொல்லி - பத்மாவதிஅம்மன் நிரியாணமாயிருக்கிறவிடத்திலே வந்து ஸ்ரீஹரியைத்தியானம்பண்ணியிருபத்து நான்குஅஷ்டபதியையும் சொல்லி ஆனந்தத்துடனே நிர்த்தனம்பண்ணிக் கேசவா - நாராயணா- மாதவா - கோவிந்தா -முகுந்தா -பக்தவச்சலா -கோபாலா- கிருஷ்ணா - கஜேந்திரவாதா - இப்பொழுது கடாட்சிக்கவேண்டும்; ஜகந்நிவாசா - ஸ்ரீநிவாசா - வாசுதேவா - சர்வாந்தரியாமி - பிர்மாதிதேவேந்திரா- அனந்தசயனா - அப்ரமேயா - இப்பொழுது கடாக்ஷிக்கவேண்டும்; அதோக்ஷயா- திரிவிக்கிரமா - வாமனா - மதுசூதனா- சார்ங்கதரா - சக்கரபாணி - பத்மநாபா - தாமோதரா - பிரக்லாதவரதா - இப்பொழுது கடாக்ஷிக்கவேண்டும்; ருக்குமணிரமணா-பீமாதீரவாசா- அனாதபந்தோ - ஆபத்பாந்தவா இருடீகேசா - தீனதயாளா - இலட்சுமிநரசிம்மா-பாண்டுரங்கா -இப்பொழுதுகடாக்ஷிக்கவேண்டும்;என்று இப்படி ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது பக்தர்களுடைய சம்ரக்ஷணையே பரமபிரயோசனமென்று அதிலேதற்பரராய் - அளவில்லாத அபேக்ஷையோடேகூடின - ஸ்ரீமந்நாராயண மூர்த்திபிரசன்னமாகி - ஜயதேவரை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு - குழந்தாய் -உன்னுடைய ஸ்தோத்திரத்தைக்கேட்டுச்சரீரம் பரவசமானேன். நீபண்ணின அஷ்டபதியையார்பக்தியோடேபடிக்கிறார்களோ அவர்களிடத்திலேநான் சத்தியமாய்லட்சுமிசமேதனாய்க்கைகட்டிக்கொண்டிருப்பேனென்று திருவுளம்பற்றிப் பத்மாவதிஅம்மனும் உயிர்பெற்றுஎழும்படி கடாக்ஷம்பண்ணிவிட்டு அந்தர்த்தானமானார். பிரேதரூபமாயிருந்த பத்மாவதிஅம்மன் உடனே எழுந்திருந்து - தன்பிராணநாதனை ஜயதேவரைப்பிரதக்ஷணம்வந்து சாஷ்டாங்கமாகநமஸ்காரம்பண்ணி நிற்கையில் -ஆகாசமார்க்கத்தில் தேவதைகள் புஷ்பமாரிபொழிந்தார்கள். ராஜாவும் குடும்பத்தோடே ஜயதேவருடையசரணமடைந்து தினந்தோறும் அவருக்குப்பூசைபண்ணிக்கொண்டு பக்தியோடேயிருக்க- அந்தவர்த்தகனும்வந்து சேர்ந்து ஜயதேவரைச்சரணமடைந்து- ஆராதித்துப்பகவத்பக்தி பண்ணிக்கொண்டுஎல்லாரும் ஆனந்தபரிதர்களானார்கள். இந்த ஜயதேவருடைய திவ்வியமானசரித்திரத்தையெவர்கள் வாசித்தாலும் எவர்கள் கேட்டாலும்அவர்கள்மகாசுகானுபவர்களாய்த் தேகாந்தியத்தில் ஸ்ரீவைகுண்டநாதன்கடாக்ஷத்துக்குப்பாத்திரமாவார்கள்.இதையெந்தக்கஷ்டமானவேளையில் ஸ்மரித்தாலும் அப்பொழுதே அந்தச்சங்கடங்களெல்லாம் நிவாரணமாய்ப்போம். வியாசர்அவதாரமான ஜயதேவருடையசரித்திரம்மகாபாவனம். இந்த அத்தியாயம் சமாப்தம். இனிமேல்வருகிற அத்தியாயம் அத்தியந்தவற்புதமாகிய துளசிதாசருடைய சரித்திரம் ஸ்ரீவாசுதேவ ஜகத்திரயகுரவேநம: ஸ்ரீகிருஷ்ணயபரமகுரவேநம: ஸ்ரீரங்கபரப்பிரமணேநம: ஸ்ரீராமச்சந்திரபரப்பிரமணேநம:.

## மூன்றாவது அத்தியாயம்.

# துளசிதாசர்சரித்திரம்.

ஆனந்தரூபராயும் - பரமபுருஷராயும் - சச்சிதானந்த மூர்த்தியாயும் - தாளிதளசாமளராயும் - பிமாதீரத்திலேயிடுப்பிலேகையைவைத்துக்கொண்டுமஹா கோரபாபங்களைச செய்தபிராணிகளைக்கூடத்தெரிசனம்பண்ணினமாத்திரத்திலே - இரக்ஷித்துக்கொண்டிருக்கிற சுவாமியைசசேவிக்கிறேன். ஓ சாதுக்களே இந்த மூன்றுமத்தியாயத்தினுடையபிரபாவத்தைக்கேளுங்கள். க்ஷீரசாகரவாசியான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் - நித்தியசூரிகளெல்லாம் தன் சமீபத்தில் சூழ்ந்து சேவித்துக்கொண்டு வருகிறநாளில் ஒருநாள் வால்மீகரைப்பார்த்து ஆக்கியாபித்தபடியே அவர் வந்து அஸ்தினபுரத்திலே பிராமணர் குலத்திலே ஆத்துமாராமனென்பவருக்குப்பிள்ளையாக பிறந்தார். அவருக்குவிதிப்படி பன்னிரண்டாம்நாளில் துளசிதாசனென்று பெயர் வைத்தார்கள். அப்பொழுது அந்தேசத்திற்குத்தர்மசீலனும்புண்ணியவானுமாகிய அகபர்பாக்ஷாவென்கிற வாசனுயிருந்தார். அவரிந்த ஆத்துமராமனேஅன்பாககாப்பாற்றிக்கொண்டு வந்ததன்றிப்பிறகு துளசிதாசரையும் மிகவும்அபிமானித்துவந்தார். பிள்ளைக்குப்பன்னிரண்டு வயது ஆனபின்புமாதாதேவியென்று பெயருள்ள ஒருபெண்ணைக்கலியாணமும் பண்ணுவித்தார்கள். அந்தப்பெண் நல்லவிவேகமும்மிகுந்தல சுணமுமுடையவளாகவிருந்தபடியால ஸ்திரீபுருஷர்களிருவரும் ந்த அன்னியோன்னியமாயும் அன்பாயும்அபேக்ஷயான ஆடையாபரணங்கள் பரிமளவர்க்கங்கள்முதலானவைகளையணிந்துகொண்டு ஒவ்வொருநாளும நூதனமான பிரீதியோடே போக பாக்கியங்களை அனுபவித்துக்கொண்டு வரும்நாளில் துளசிதாசருக்குச் சிறிது நேரமாவது பிரியச்சகிக்கிறதில்லை. மஹாபதிவிரதையாகிய மாதாதேவியென்றஅவருடை ஸ்திரீயும் பணிவிடைகளெல்லாம் தவறாதுசெய்துகொண்டுவந்தாள். இப்படிஆனந்தமாயிருக்கும் நாளில் ஒருநாள் அக்பர்பாக்ஷாசாரி புறப்பட்டுப்போகும்பொழுது துளசிதாசரும் கூடப்போனார். அந்தவேளையில் மாதாதேவி தாயார் வீட்டிலிருந்துஒருமனுஷன் வந்துஅம்மாமாதாதேவி உமதுதாயாருக்குஉடம்புமிக அசௌக்கியமாயிருக்கின்றதாம்- அதனாலும்மைப்பார்க்கவேண்டுமென்கையோடே அழைத்துக்கொண்டுவரச்சொன்னார்கள் என்றுசொன்னான். அதைக் கேட்டு மாதாதேவி மிகவும் விசனப்பட அந்தமனிதன்தானே அம்மா - அதிக

மாத்திரைப்படவேண்டாம் உங்கள் தாயாருக்குக்கொஞ்சம் அசௌக்கியமாக விருந்தபோதிலும் உங்கள்புருஷன்உங்களை வெகுநாளாய் அனுப்பினதில்லையே அதனால்பார்க்கவேண்டுமென்றெண்ணி இப்படிச் சொல்லியிருக்கலாமென்று சொன்னான். அந்தவார்த்தைகளைக்கேட்டுச் சற்றுவிசனம்நீங்கி மாமனாருக்கும் மாமியாருக்கும் போய்ச்சேவித்து எனதுஎஜமான் இப்பொழுது சாரிபோயிருக்கிறார் இந்தச்சமயத்தில் எனதுதாயாருக்குஉடம்புமிக அசௌக்கியமாயிருக்கிறதென்று ஆள்வந்தபடியால் நான் தாயார்வீட்டுக்குப்போய்வர நீங்கள் உத்தரவுதரவேண்டுமென்றுசொல்லிக்கேட்டுக்கொண்டு வந்தமனுஷன் பிறகே தானே புறப்பட்டுத்தாயார்வீடுபோய்ச்சேர்ந்தாள். சாரிபோயிருந்த துளசிதாசர்அன்றையத்தினம் சாயங்காலம் வீடுவந்து சேர்ந்தவுடன் தாயானவள் நடந்தவிஷயமெல்லாம்சொன்னாள். அதுகேட்டுத்துளசிதாசர் மிகவிசனப்பட்டுப்படுத்துக்கொண்டாலும் நித்திரைகொள்ளாமையால் வெளியே புறப்பட்டுஇராத்திரியே வழிநடந்து ஆறுகள்வாய்க்கால்களையெல்லாம் கைநீச்சால் நீந்திச்சென்றுபத்துநாழிகைவழியும் வெகுவிரைவாய்க்கடந்து மாமனார்வீட்டுக்குஇராத்திரி இரண்டுஜாமமாகிமூன்றாம்சாமமாகிறவேளையில் வந்துகதவைத்தட்டினார். அப்பொழுது எல்லாரும் நல்லநித்திரைவேளையாயிருந்தபடியினாலே ஒருவரும் வந்துகதவைத்திறக்கவில்லை, துளசிதாசர்கூப்பிட்டுக்கூப்பிட்டு அலுத்து எந்தவழியாகலாகிலும் ஏறிஉள்ளேபோவோமென்று வீட்டைச்சுற்றி அதன் நாலுபக்கமும் பார்த்துவரும்பொழுது ஒரு ஆரற்சுவர்மேலே ஒருகொடியசர்ப்பமானதுபடுத்துக்கொண்டுவாலைத் தொங்கவிட்டுக்கொண்டிருந்தது. அதைப்பார்த்து நம்முடையஸ்திரீயானவள் நாம்வருவோமென்று கயிறுகட்டித்தொங்கவிட்டிருக்கிறாளென்று விரகமிகுதியினாலே நினைத்து அந்தச்சர்ப்பத்தின்வாலைப்பிடித்துச் சுவரேறிஉள்ளேபோனார். மாதாதேவி மஹாபுத்திசாலியும் புருஷனிடத்தில் மிகுந்த அன்பும் விசுவாசமுமுடையவளானபடியாலுடனே யெழுந்திருந்து ஆச்சரியத்தோடுஅருகில்வந்தாள். அவளைப்பார்த்து என்பிரியமான சுந்தரமே ஏன் என்னைத்தனியாக விட்டுவிட்டுவந்தாய் நான்இராத்திரியே பத்து நாழிகைவழியும் வெகுவிரைவாய்நடந்துயமுனையையுமற்றஆறுவாய்க்கால்களையும்கைநீச்சால் கடந்துஇவ்விடத்தில்வந்து கூப்பிட்டுக்கூப்பிட்டு அலுத்துச்சுவரேறியாவது உள்ளே வரலாமென்று சுற்றிப்பார்க்கும்பொழுது நான் வருவேனென்றுஎன்மேல்பிரியமுடைய நீ கட்டித்தொங்கவிட்டிருந்த கயிற்றைப்பிடித்துக்கொண்டு சுவரேறிக்குதித்து உள்ளேவந்தேனென்றுசொல்லக் கேட்டுஆச்சரியமாய்நான்கயிற்றுவழிகட்டிவைக்கவாவதுஇஃதென்ன அதிசயமான வார்த்தை சொல்லுகிறீர், அந்தக் கயிற்றைக் காட்டும் பார்ப்போமென்று வேலைசெய்யுமனிதர்களைக் கூப்பிட்டுத் தீபத்தை

யெடுத்துக்கொண்டுவரச்சொல்லிப்போய்ப்பார்க்கும்பொழுது பெரிய சர்ப்பமொன்று தொங்கிக்கொண்டிருக்கிறதைக்கண்டார்கள். உடனேயிருந்த ஆச்சரியமடைந்து மாதாதேவி மஹாவிவேகியானதால் தன் புருஷன் கையைப்பிடித்துக்கொண்டு அந்தப்புரத்திலே போய் அவரைக்கட்டிலிலே உட்காரவைத்துச்சுவாமி என் பிராணநாதா - யாராகிலுமிப்படி அர்த்தராத்திரியிலே வருவார்களா - நீர் மகாபுத்திசாலியானாலும் நான் சொல்லுகிற வார்த்தையைச் சற்றுக்கேளும். நீரென்னிடத்தில் வைத்திருக்கிற மகாமோகத்தினாலே தாய் தகப்பன் முதலானவர்களை விட்டு இந்த நிசியிலே வந்ததையும் யமுனைமுதலிய ஆறுகளைக் கைந்நீச்சால் கடந்ததையும் சர்ப்பத்தை பிடித்துக்கொண்டு சுவரேறிக்குதித்ததையும் பார்த்தால் உம்மிடத்தில் விவேகமென்பது சிறிதுமில்லையென்று சொல்லத்தக்கதாக விருக்கின்றதே - நல்லது அந்தச் சர்ப்பம் கடித்ததானால் இந்நேரம் பிராணன் போயிருக்குமே - அப்பொழுது மோகத்தை யெங்கே யார்பேரில் வைப்பீர். இந்தச் சமுசாரம் மாயமானவலை - இந்தத் தேகம் நீர்மேல் தோன்றி அழியும் குமிழி போல நிச்சயமற்ற வாழ்வையுடையது. அப்படியிருப்பதனால் என்னிடத்திலே வைத்த இச்சையினால் மெய்ம்மறந்து செய்யுங்காரியமின்னதென்று கூடத் தெரியாமலிருக்கிற இந்த மஹாமோகத்தை விட்டுவிடும். விவேகத்தினால் சோதித்துப் பார்க்கும்போது எல்லாப் பொருளும் நாசத்தை அடைகின்றன. இந்த ஆசையிலே ஆயிரத்திலொரு பங்கு சர்வ ஜீவாந்தரியாமியாகிய ஸ்ரீமந்நாராயணனிடத்திலே வைத்தால் உத்தமகதியடையலாம். ஸ்திரீகளென்கிற அக்கினியிலே புருஷர்களென்கிற அளவற்ற திருணம் தப்தமாய்ப்போகின்றன. ஒரு அகலிகையினாலே யிந்திரனுடைய சரீரம் போனபோக்கும் - சீதையினாலே இராவணகும்பகர்ணாதிகளிறந்ததும் - மஹாதபசையுடைய விசுவாமித்திரர் ஒரு அப்ஸரஸ்திரீயின் மோகத்தில் அகப்பட்டுக்கொண்டு தவசையெல்லாம் அழித்துவிட்டுப் பிராந்தியானதும் முதலிய பலவிதமான அனர்த்தங்களும் ஸ்திரீகளாலே வந்திருக்கின்றன. அனேகர் தம்முடைய பிராணனிடத்தில் வைக்கவேண்டிய ஆசையைப் பார்க்கிலும் அதிக ஆசையை தனத்தினிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் புத்திரர்களிடத்திலும் வைத்து ஒரு ஆத்துமா ராமனை அறியாமல் ஜெனன மரணமென்கிற பிரவாகத்தில் விழுகிறார்கள். இந்த ஸ்ரீயப்பதியினுடைய திவ்விய திருவடிகளில் சித்தத்தை வைப்பதே தேகமெடுத்ததற்குப் பிரயோசனமென்று சொல்ல - இதைக்கேட்டவுடனே துளசிதாசருக்கு ஞானஉதயமாய்ப் பூர்வவினைபபுவாந்து சந்தோஷமாய் ஓ மாதாதேவி விஷமென்று தெரியாமலுண்ணப்போகும் குழந்தையைத்தாயானவளெடுப்பது போலவும் உரோகஸ்தர்களை அநுபோதவைத்தியன் உரோகத்திலிருந்து நீக்கிவிடல் போலவும் நீச்சறியாத பிள்ளைகளைக்

ந்திந்தவன் கைதூக்கிவிடல் போலவுமெனக்குச் சற்குருவாகி மஹா உபகாரம் பண்ணினுயென்று சாஷ்டாங்கமாகச் சேவித்து விட்டு வெளிப்பட்டுவிட்டார்.

அப்பொழுது தன்னுடைய ஜென்மத்தின் காரணத்தை நினைத்துக்கொண்டு நாம் வால்மீக ரிஷியன்றே யாதுகாரணத்திற்கு அவதரித்தோமோ அந்தக் காரியத்தைச் செய்வோமென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு ஆனந்தத்தோடு காட்டுக்குப்போய்ச்சிலநாள் காய் கனிகளைச் சாப்பிட்டு ஸ்ரீ இராமச்சந்திரனைத் தியானம் பண்ணிக்கொண்டு வந்தார். சில நாள் பிராதக் காலத்திலெழுந்திருந்து சவுசத்துக்குப் போய்க் காலலம்பி மிச்சமான சலத்தை ஒரு மரத்தடியிலேஊற்றிவிட்டுப் பிறகு ஸ்நானஜெபதபாதிகளை முடித்துக்கொண்டு பககத்திலுள்ள ஒரு கிராமத்திற்குச் சமீபமாய்வந்து ஒரு இடத்தில் ஸ்ரீ இராமசரித்திரத்தைப் படனம் பண்ணிவிட்டு அப்பால் முன்போல க்காட்டிலேவந்து தபசு பண்ணிக்கொண்டு வருகையில் ஒருநாள் சவுசத்துக்குப்போய்க் காலலம்பிக்கொண்டு மிஞ்சின ஜலத்தை மரத்தடியில் வழக்கம்போல ஊற்றினுர். அவ்விடத்திலிருந்து ஒரு பிரமராட்சசன் கோரமாய் அவருக்கு எதிரே நின்றுகொண்டு ஓ துளசிதாசரே நான் உமக்குப் பிரசன்னமானேன். நீர் உமக்குவேண்டிய வரத்தைக்கேட்டுக்கொள்ளுமென்று சொல்லினுன். அதைத்துளசிதாசர்கேட்டு நீ ஆர் எனக்கு வரங்கொடுக்கிறேனென்று சொல்லுகிருயே என்றுகேட்கவதற்கு நான் இந்தவிடத்திலே வெகுநாளாயிருக்கிற பிரமராட்சதன் நான் குளங்களிலாவது ஆறுகளிலாவதிருக்கும் ஜலத்தைத் தொடக்கூடாதாகையால் தாகமாயிருந்து அவதிப்பட்டுக்கொண்டிருந்தேன். அப்படியிருக்கையில் நீர் சென்ற பன்னிரண்டு வருஷகாலமாக இங்கே வந்து காலலம்பி மீந்த ஜலத்தை யிந்த மரத்தடியில் ஊற்றிவிட்டுப் போனீர். அதை நான் பானம்பண்ணி என் தாக சோஷைகளைத் தீர்த்துக்கொண்டு சந்தோஷமாயிருந்தேன். இன்றைக்கு மகா சந்தோஷமடைந்து உமக்கு என்ன வேண்டுமோ அதைச்செய்துகொடுக்கவிருந்த அபேக்ஷைகொண்டிருக்கிறபடியினுலே நீர் உமக்கு வேண்டியவற்றைக் கேட்டுக்கொள்ளுமென்று சொன்னுன். அதைப் பற்றிதுளசிதாசர் இதென்ன ஆச்சரியம் ஸ்ரீ இராமச்சந்திரனைத் தரிசனம்பண்ணிக்கடைத்தேறவேண்டுமென்று எண்ணிக்கொண்டிருந்த எனக்குப பிசாசோ பிரசன்னமாகவேணடும். இது மாமரத்தை வைத்துப பயிராக்க அது மாங்கனிக்குப் பதில் கொம்மட்டிக்காய் கொடுத்தது போலும். சர்க்கரைப்பாத்தி கட்டி பால் வார்த்து வளர்த்த கற்பகவிருக்ஷம் ஊமத்தங்காயைக் கொடுத்தது போலும். காமதேனுவைத்தரிசனம் பண்ணி அமிர்தபானம் பண்ணவேண்டுமென்றிருக்கிறவனுக்கு

விஷம் கிடைத்தது போலும் - சிந்தாமணியை அபேக்ஷித்திருக்கிறவ
னுக்கு வளையற்கல் அகப்பட்டது போலும் - இராஜஅம்சத்தைத் தரி
சிக்க அபேக்ஷித்திருக்கிறவனுக்குக் காக தரிசனங்கிடைத்தது போ
லும் - சாதுசங்கமத்தை அபேக்ஷித்திருக்கையில் உலகநிந்தகன் சங்க
மம் கிடைத்தது போலும் - க்ஷீரசாகரத்தைக் காண அபேக்ஷித்திருக்
கையில் ஒருபாழுங்குட்டையைக்கண்டது போலுமிருக்கின்றது. ஜான
கிவல்லபனை ஸ்ரீ இராமச்சந்திரனைத்தரிசனம்பண்ணுவதே யெனக்
குப்பிரதானமென்றுசொன்ன வசனங்களைப்பூதமானதுகேட்டு - ஓபிரா
மணா மஹா புத்திசாலியாய்ச்சத்காரியத்தைக்கிரகிக்கநினைத்தவன் மற்
றககாரியங்களையும் சிறிது பெரிதென்று எண்ணலாகாது. தங்கத்தை
உருக்கவெண்காரம்போடாவிட்டாலுருகமாட்டாது - நூலன்றிப்பூமாலை
ஒரு நாளும் கோக்ககூடாது - ஊசியன்றிச் சட்டை முதலான வஸ்
திரங்களைத்தரிக்கக்கூடாது - ஸ்பரிசத்துக்குஅயோக்கியமானதுடைப்
பமில்லாவிட்டால் பூமி சுத்தியாகமாட்டாது. ஆகையால் விவேகமாய்
மேலான வழி கீழான வழி யென்றெண்ணாமல் காரியத்தின்பேரில்
திருஷ்டிவைத்துக்கேளென்று பூதம்சொன்னதைக் கேட்டுத் துளசி
தாசர்நல்லது எனக்குவேறு ஒருவரும் தேவையில்லை. ஸ்ரீஇராமச்
சந்திரன் தரிசனம்தான்வேண்டும் செய்விப்பாயாவென்று கேட்டார்.
அந்தச்சர்தத்தைப் பூதம் கேட்டவுடனே பத்தடி பின்வாங்கிப்போய்
ஓ பிராமணா இந்தப்பெயரைஉச்சரியாதேயும்உச்சரித்தமாத்திரத்தில்
நான் நாசததையடையுவேன். அதனால் அதுமட்டும் என்னால் முடியா
தகாரியம். ஆயினும் அவருடையதரிசனபேக்ஷை உமக்கிருக்குமாயின்
தரிசனமாகிறதற்காக ஒரு உபாயஞ்செய்கிறேன். அதாவது அவரு
டைய தாசன சாக்ஷாத் ஆஞ்சநேயரை உமக்குககாண்பிக்கிறேன் அவ
ரைககொண்டுமுடித்துக்கொள்ளுமென்றுசொல்லத்துளசிதாசர் மஹா
சந்தோஷத்துடனே அதாவது உம்மாலே ஆருமாவென்றுகேட்க அவ
சியம் தரிசனம் பண்ணுவிக்கிறேனெனறனன. அபபொழுது துளசிதா
சர் உம்முடைய பிரமராட்சதஸ்வரூபமும் நிவாரணமாய்முத்தியடை
யும்படி ஸ்ரீ இராமச்சந்திரனைக்கிருபைசெய்யச்சொல்லுவாரே எனறு
சொல்லப் பிரமராட்சதன் நான் அவர் சன்னிதானத்திலும் வரமாட்
டேன் உமககுமட்டும் அவர் தரிசனம் கிடைககும்படி செய்கிறே
னென்றான். அது கேட்டுத் துளசிதாசர் எனக்குமட்டுமாவது வாயு
குமாரனை மாருதி பகவான் தரிசனமாகும்படி செய்வீரானால் அவ
ரெனக்கு ஸ்ரீ இராமச்சந்திரனுடைய தரிசனமாகிறதற்குக் கடாக்ஷம்
பண்ணுவாரெனப் பூதம் நீர் நித்தியம் புராணபடனம்பண்ண ஆரம்
பிக்கிறபொழுது எல்லாருக்குமுன்னே ஒரு விருத்த பிராமணன்
தலையிலே குல்லாப் போட்டுக்கொண்டு இடுப்பிலே சேண வஸ்தி
ரம் தரித்துக்கொண்டுவந்து புராணத்துக்கு நேராக உட்கார்ந்து நிரு

...ரும் போன பிறகு எழுந்திருந்து போவார்-அவர் தான் அனுமாரென்று சொல்லிவிட்டுப் போயிற்று. துளசிதாசர் அன்றையத்தினம் இந்த அடையாளத்தின்படியே கண்டு புராணபடனமானவுடனே அவர் பின்னாலே போய்ச் சாஷ்டாங்கமாகச்சேவித்துச் சுவாமி அஞ்சனாபுத்திரா - அமித புஜபல பராக்கிரமசாலி - ஸ்ரீஇராமச்சந்திரபரிபூரணகடாக்ஷபிரசாதா-எனக்குக்கிருபைபண்ணவேண்டுமென்று அனேகவிதமாய்ஸ்தோத்திரம்பண்ணினார். அதற்கு ஆஞ்சனேயர்கிருபையுடனே யிவர்வால்மீகருடைய அவதாரமென்று அறிந்துகொண்டுஉமக்குஎன்ன அபேக்ஷையாயிருக்கிறது. நான்ஏழைப் பிராமணன் என்றால் உமக்குப்பிரயோசனமென்னவென்று கேட்கச் சுவாமி தேவரீர் ஸ்ரீஇராமச்சந்திரஸ்வாமிபாதாரவிந்தச் சேவையை விடாமல் ஆராதித்துக்கொண்டுவருகிறவர் - ஸ்ரீஅஞ்சனாதேவிகுமாரர் தேவரீரென்னிடத்தில் கடாக்ஷம் வைத்து ஸ்ரீஇராமச்சந்திரனுடைய தரிசனம் எனக்குக்கிடைக்கும்படி கிருபை பண்ணவேண்டுமென்று சொல்ல அப்படியே பண்ணுவிக்கிறேனென்று வாக்குக் கொடுத்துவிட்டு- ஸ்ரீஇராமச்சந்திரனிடத்தில்போய்ச் சங்கராதிதேவர்கள் வேதங்கள் ஆதிசேஷன்இவர்களாலும்சொல்லிமுடியாதபிரபாவத்தையுடைய திவ்விய நாமா - ஸ்ரீஇராமச்சந்திரா - வால்மீகர் அவதாரமான துளசிதாசர் தேவரீருடைய தரிசனாபேக்ஷையினாலே ததபரராயிருக்கிறாரவருக்குக கிருபை பண்ணவேண்டுமென்று ஸ்தோததிரம் பணணினதற்கு ஸ்ரீஇராமச்சந்திரமூர்த்தி அநதப்படியே செய்கிறேனென்று வானரங்களும் தாமும் துலுக்கஜமேத்துககூட்டமாக வேஷமெடுததுக்கொண்டு துளசிதாசர் ஆச்சிரம வழியாகச் சாரி போகையில்-துளசிதாசருக்கு இவர் இராமமூர்த்தியென்று தெரியாமல்யாரோ துலுக்கராஜா ஜமேததுக்கூட்டம் போகிறதென்றெண்ணிக்கொணடு சும்மா விருநதுவிட்டார். அப்பொழுது ஆஞ்சனேயர் வந்து சுவாமி உன்ஆச்சிரமத்தின் வழியாகப்போனாரேநீர்தரிசனம்பணணவில்லையாவென்று கேட்க அவர் ஆஞ்சனேயரே சுவாமியை நான்காணவேயில்லையென்ன, ஆச்சரியப்பட்டு ஓ மஹானுபாவா காமதேனுவானது தனக்குத் தானே வநததைப்பூசிக்காமல் ஆடு என்றெணணினதுபோலும - ஸ்பரிசக்கல்லேயும் சிந்தாமணியையும் கண்டுவேறயல்கல்லென்றுநிராகரிநததுபோலும் - கற்பக விருக்ஷத்தைக் கண்டு எட்டி மரமாக எண்ணினதுபோலும் - இராஜ அம்ச பக்ஷியைக் கண்டு வாயசமாக வெண்ணினதுபோலும் நீர் சாக்ஷாத் கோதண்ட தீக்ஷா குருவாகிய ஸ்ரீ இராமச்சநதிரனைக் கண்டு துலுக்க ஜமேத்துக் கூட்டமென்றெண ணினீரென்றதற்கு- துளசிதாசரானவர் ஸ்வாமிஅஞ்சனாதேவிகுமாரா தேனும் சுவர்னத்தினால் பண்ணப்பட்ட பூஷணங்களை சுவர்னமென்றும் - ...

சலத்தினுலே உண்டான பாலைச் சலமென்றும் இருவரும் சொல்ல மாட்டார்களே அன்றியும் மேகஜலத்துக்காக எதிர்பார்த்துக்கொண்டி ருக்கிற சாதகபக்ஷியானது பூமியிலே விழுந்த ஜலத்தைச் சாப்பிட மாட்டாதே - அதுபோல ஸ்ரீ இராமச்சந்திரனுடைய பஜனைபராளர் கிய ஜனங்கள் - ஜானகிரமணனுகிய கோதண்ட தீக்ஷா குருவினுடைய ரூபத்தை எந்தப்பிரகாரமாக வால்மீகர் வர்ணித்திருக்கிறரோ - அந் தப்பிரகாரம் தியானம் பண்ணுவார்களேயல்லாமல் மற்ற ரூபங்களைத் தியானிக்க மாட்டார்களேயென்று சொன்னதற்கு மாருதியானவர் மஹா சந்தோஷத்தையடைந்து உம்முடைய மனோரதத்தை ஸ்ரீஇரா மச்சந்திரன் பரிபூரணம் பண்ணுவிப்பாரென்று சொல்லிவிட்டு அந் தர்த்தியானமாய்ச்சென்று ஸ்ரீஇராமச்சந்திரனைத்தியானித்துஸ்தோத் திரம்பண்ணுகையில் ஸ்ரீஇராமச்சந்திரன் பிரசன்னமாகி ஏன் ஆஞ்ச னேயரே என்ன அபேக்ஷயாய்என்னைத்தியானம்பண்ணினீர் அதைச் சொல்லும் நிறைவேற்றுகிறேனென்று சொல்லியருள - ஆஞ்சனேயர் மஹா விநயத்துடனே ஸ்ரீஇராமச்சந்திரா - சீதா ஹிருதய குமுதசந் திரா - ஆனந்தசந்திரா - சமுசாரதாபநிவாரணசந்திரா - பக்தர்களு டைய அபீஷ்டததை நிறைவேற்றுவிக்கிற கற்பகத்தருவே - தேவரீர் வால்மீகர் அவதாரமான துளசிதாசருக்கு தாளிதளசியாமளவர்ண ராய்க் கோதண்டபாணியாய்ச் சீதாலக்ஷ்மண சமேதராய்த் தரிசனம் கொடுக்கக் கிருபைபண்ணவேண்டுமென்று பிராத்தித்ததற்குச்சந்தோ ஷமாய் மாருதி நீரென்ன செய்யச்சொன்னுலும் அதை மனப்பூர்வமா கசசெய்வேன் - என்னுடைய பக்தர்களுடையவசனத்தை அன்போடே கேட்டு அதை நிறைவேற்றுகிறதே யெனக்கு முக்கியமான காரிய மென்றுசொல்லிவிட்டுத் துளசிதாசருக்குத் தரிசனம் கொடுக்கப் புறப் பட்டார். அப்பொழுது ஆஞ்சனேயர் துளசிதாசரிடத்துக்கு முன்ன தாக ஓடிவந்து சுவாமிவருகிற செய்தியைச்சொல்லத்துளசிதாசர் ஆஞ் சனேயரைச்சாஷ்டாங்கமாகச்சேவித்து ஆனந்தமாகி ஓசுவாமிவாயுகு மாரரேயிதுவே மகாஉபகாரம் இதுவேபெரும்பாக்கியம்- இந்தஉபகா ரத்தை என்னவென்று சொல்லுவேன் திரிபுவனங்களில் சற்குருவான வருக்குப் பதில் உபகாரம் ஒருவரும் செய்யவில்லையே செய்ய ஒரு பதார்த்தமுமில்லையென்றுதானேவேதமும்சொல்லிற்று. துருவன்தன் தாயார்வாக்கியத்தின்படி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைஆராதித்து உன் னதமான பதவியை அடைந்து அந்தத் தாயாருக்கு என்ன உபகாரம் பண்ணினுன் - பார்வதிதேவிருத்திரமூர்த்தியைப்பார்த்துக்கொடுத்த தன்தகப்பனுகிய ஹிமோத்பர்வத ராஜனுக்கென்ன உபகாரம்பண்ணி னுன். சீதாதேவி ஸ்ரீராமனைத்தேடிக்கொடுத்த ஜனகருக்கென்ன உப காரம் பண்ணினுள் - அகலிகைதன்சாபவிமோசனமாம்படி ஸ்ரீராமனை யழைத்துவந்தவிசுவாமித்திரருக்கென்னஉபகாரம்பண்ணினுள்-தேவர்

யெல்லாம்பலவரங்களைக்கொடுக்கும்படிசெய்தவாயுபகவானுக்குதேவரீர் என்னஉபகாரம் பண்ணினீரென்றிப்படிஅனந்தவிதமாய்ஸ்தோத்திரம்பண்ணுகையில் ஸ்ரீஇராமச்சந்திரன்தரிசனம்கொடுத்தார். அப்பொழுது துளசிதாசர் அனந்தசாஷ்டாங்கதண்டம்ஸமர்பித்து ஸ்ரீஇராமச்சந்திரனைப்பார்த்துக்கையைக்கூப்பிக்கொண்டுதேவாதிதேவா-வேதங்களாலும் - இரண்டாயிரம்நாவுள்ள ஆதிசேஷனாலும் - வர்ணிக்கமுடியாத பிரபாபவத்தையுடையவனே - அமரர்கருணாநிதியே - அவாங்மானஸகோசரானந்தா - அனந்தரூபா - சர்வஜீவதயாளோ - சர்வஜீவபாலகா - பதிதபாவனா-திரிலோகசிந்தாமணி- புராணபுருஷோத்தமாவென்று வெகுவிதமாக ஸ்தோத்திரம்பண்ணி ஆனந்தத்தையடைந்து வாய்தழுதழுக்கக்கட்கதகண்டராய்நிற்கிறவரைப்பார்த்து ஆஞ்சனேயர் துளசிதாசரே ஸ்ரீஇராமச்சந்திரர்தரிசனம்கொடுத்துஉம்மனோரதத்தை இன்றைக்கு நிறைவேற்றுவித்தார் - இனி நீர் இப்பொழுது கலியுகமானபடியினாலே முன்வால்மீகராயிருக்கும்போது எவருடையதிவ்வியசரித்திரத்தை வர்ணித்தீரோ அந்த ஸ்ரீராமநாமத்தைத்தவிர ஞானம்-யோகம் - வைராக்கியம்-யக்கியம்-யாகம் - வேதாத்தியயனம் -இவைகளினால் சித்தசுத்திவந்துசத்துவகுணம் பிறக்கமாட்டாதென்று சகல பிராணிகளுக்கும்உபதேசம்பண்ணி அவர்களைஉத்தாரணம்பண்ணுமென்று சொன்னார். ஸ்ரீஇராமச்சந்திரனுமப்படியே செய்யுமென்று சொல்லி அனுக்கிரகம்பண்ணிவிட்டு அதிரிசியமானார்.

துளசிதாசரும் காசியிலே ஸ்ரீ இராமச்சந்திரனுடைய அனந்த கலியாணகுணத்தின் பிரபாவத்தைக்கீர்த்தனம் பண்ணிக்கொண்டுவந்தார். அங்குள்ள அனைவரும் அத்தியந்த பிரியத்தோடே ஸ்ரீ இராமச்சந்திரனைப்பிரபத்திபண்ண எத்தனம்பண்ணித் துளசிதாசரை சரணமடைந்து சிரவண கீர்த்தனங்கள்பண்ணிக்கொண்டு அவருக்கு ஒரு மடமுங்கட்டிக்கொடுத்து ஸ்ரீ இராமஸ்மரணையை யிடைவிடாமல்பண்ணிக்கொண்டுவந்தார்கள். தினந்தோறும் ஆயிரம் பதினாயிரம் பேர் கூடவே போஜனம்பண்ணிஎந்நேரமும் பக்கத்தில் கீர்த்தனம்பண்ணிக்கொண்டிருப்பார்கள். துளசிதாசருக்கு ஸ்ரீ இராமச்சந்திரனுடைய தியானத்தைத்தவிர மற்ற ஒன்றிலேயுமனஞ்செல்லுகிறதில்லை. ஆகாசம் போலே ஒன்றிலுமணுகாமல் ஸ்ரீ இராமச்சந்திரனுடைய திவ்விய மங்கள விக்கிரக கீர்த்தன தியானானந்த பரிபூரணராயிருக்கிற காலத்தில் சகல பிராணிகளும் சிரவணம்பண்ணி ஆனந்த பரிதர்களாயிருப்பார்கள். எல்லாரும் திவா இராத்திரி அறுபது நாழிகையும் ஸ்ரீ இராம கீர்த்தனத்தில் மக்கினராய்ப் போவது வருவது ஒன்றும்தெரியாமல் இருந்தபடியால் மடத்திலிருக்கும் பொன்பாத்திரங்கள் வெள்ளிப்பாத்திரங்களை யாரெடுத்துக்கொண்டுபோனாலும் தெரியாது. மடத்தினு

டைய கதவும்இராமா நுகூடச்சாத்திவைக்கிறதில்லை. சாமான்யர்களும் இராஜமார்க்கம்போலப்போகலாம்- எவரும் தமக்குவேண்டிய வைகளைக்கொண்டுபோகிறதும் மடத்துக்கு வேண்டியவைகளைக்கொடுக்கிறதுமாயிருந்தது. இப்படி நடந்துவருகிற காலத்தில் இரண்டு திருடர்கள் இந்த மடத்திலே திருடினால் யதேஷ்டமாய்க் கொள்ளையகப்படும் - இந்த மடத்திற்கு ரக்ஷகன் ஒருவருமில்லையென்றெண்ணி ஒருநாள் சமயம் பார்த்துக்கொண்டு எல்லாரும் நித்திரைபோனவுடனே உள்ளே நுழைந்து சுவர்னபாத்திரங்களையும் வெள்ளிப்பாத்திரங்களையுமெடுத்து மூட்டைகட்டிக்கொண்டு வெளியிலேவரும்போது வடக்கு வாசற்படியில் இரண்டுபேர் சூரர்கள் தனுசைப்பிடித்துக்கொண்டு நிற்கிறதைக்கண்டு பயந்து இவர்கள் நாம் உள்ளே வருகிறபோதில்லையே இப்பொழுதெங்கேயிருந்து வந்தார்களோதெரியவில்லையென்று தெற்கு வாசல்வழியாய் ஓடிப்போய்விடலாமென்று ஓடினார்கள். அவ்விடத்திலும இரண்டுபேரைக்கண்டுபயந்து இந்ததனுர்த்தாரிகள் இரண்டுவாசலிலேயுமிருக்கிறார்களே இவர்களில்யாராகிலும்எங்கேயாவதுபோனாலும் அல்லது நித்திரைபண்ணினாலும்அந்தச்சமயம் பார்த்து ஓடிப்போவோமென்று மடத்துவாசலில ஒருமூலையில் பதுங்கிக்கொண்டிருந்து நாலு நாழிகை சென்றபின் எழுந்திருந்துபோய்ப் பார்த்தார்கள். அப்பொழுதுமநதத்நனுத்தாரிகள்நின்றுகொண்டிருக்கிறதைக்கணடுதிருடர்கள்பயந்து திருடினசாமான்களைஎல்லாம்போட்டுவிட்டுக்கையிலொன்றுமிலலாமல்வாசலண்டையில்வநதார்கள். அப்பொழுதும்அநதஇரண்டுவாசலிலேயிருக்கிறதனுர்ப்பாணிகள் விடவில்லை. இப்படியிருக்கிறசமயத்தில் அருணோதயமாய்ப்பகவத்தியானம்பண்ணிவிட்டுத்துளசிதாசர்வெளியேவந்தார். அபபொழுது இந்தஇரண்டுதிருடர்களும் வநது சாஷ்டாங்கமாகச்சேவித்து ரக்ஷியும் ரக்ஷியுமென்று சொன்னார்கள். அவர்களை நீங்கள்யாரென்றுகேட்க அவர்கள் திருடவந்ததையும் மறுபடிபோகவொட்டாமல்தடைப்பட்டவிதத்தையும்சொல்லக்கேட்டு ஆச்சரியமாய் ஆனந்தபரிதராய் ஸ்ரீஇராமச்சந்திரா - ரகுகுலோத்தமா - கோதணடதீக்ஷாகுரு - பிரம்மாதிதேவதைகள்தேவரீருடையதுவாரத்தில காத்திருந்து சமயம்கிடைத்தபோது உள்ளேவருகிறதுண்டு. அப்படிப்பட்ட மஹாபுருஷரும் சர்வாநதரியாமியுமான தேவரீர் நான் பகவத்தியானம் பண்ணினதினால் என்னுடைய மடத்தில் துவாரரக்ஷகராயிருககிறீரென்று நானுவிதமாக ஸ்தோத்திரம்பண்ணிவிட்டுத் திருடர்களைப்பார்த்து உங்களுக்கு வேண்டியவைகளைச் சங்கோசமில்லாமலெடுத்துக்கொண்டுபோங்கள் நீங்கள் மஹாபாக்கியசாலிகள்யோகயாகவேதாத்தியயனம் தீர்த்தயாத்திரை முதலியவைகளால் காணக்கூடாதபரமாத்துமாவை உங்கள்புண்ணியவசத்தினாலேதரிசனம்பண்ணினீர்கள். அய்யா நீங்கள் பெற்றது நல்லபாக்கியம் நல்லபாக்கியமென்றுசொல்ல

அவர்கள் இரண்டுபேரும் சந்தோஷமாய்ச்சாதுவான துளசிதாசர் வசனத்தைக்கேட்டுச் சுவாமி சூரியப்பிரகாசமான பிறபாடு இருட்டென்கிறசொல் அற்றதுபோல இப்பொழுது எங்கள் அஞ்ஞானம்போய்விட்டது நாங்களிந்த மடத்திலேயேயிருந்து சேவைபண்ணிக்கொண்டு வருகிறோமென்றுநிச்சயமாய்ச்சொல்ல அப்படியேஅனுக்கிரகம்பண்ணினார்.

பிற்காலத்திலொருநாள் துளசிதாசர் தமதுமடத்திலே அனேகம் பிராமணர்களுடனே சாப்பிடப்போகையில்ஒருபிராமணனைஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கையைப்பிடித்துஅழைத்துக்கொண்டுபோய்ப்பந்தியிலே உட்காரவைத்தார். அப்பொழுது பிராமணர்களனைவரும் துளசிதாசரைப்பார்த்து நீர் பிரமஹத்திபண்ணின பிராமணனைப்பந்தியிலே உட்காரவைத்தீர் ஆதலால் நாங்கள்சாப்பிடமாட்டோம் என்றார்கள். துளசிதாசரிதைக்கேட்டு ஓ பிராமணோத்தமர்களே சீதா ராமாவென்று ஸ்மரித்த அந்தக்ஷணத்திலே பிரமஹத்திதோஷம் போய்விட்டது ஆதலால் நீங்கள் சுகமாய்ச்சாப்பிடலாம் வாருங்களென்று சொல்லச்சகல சாஸ்திரங்களிலும் வேதங்களிலும் நிபுணர்களான அந்தப்பிராமணர்கள் துளசிதாசரைப் பார்த்து ஓ பக்த சிரோமணி இராமாவென்று ஒருதரம் சொன்னமாத்திரத்திலே பிரமஹத்தி தோஷம்போம். அப்படிப்பட்டவர்களைப் பந்தியிலே கூடவைத்துக் கொண்டும் சாப்பிடலாமென்றுஎந்தச்சாஸ்திரத்திலேசொல்லியிருக்கிறது. சுருதியுக்தி அனுபவமென்னும் மூன்றிலொன்றினாலாவது எங்களுக்குக்காட்டும் என்றதற்குச் சகல தர்மங்களிலும் - அசுவமேதமுதலான மஹாயக்கியங்களிலும் - சுபசோபனாதி சிராத்தகர்மங்களிலும் - சந்தியாவந்தன ஜெபதபாதிநித்தியகர்மங்களிலும் - கர்மாதிகளுக்கூனம்வந்தால்தோஷநிவாரணார்த்தம் ஹரிநாமம் (ஹரிஹரேதிபாபானி) யென்கிறபடியேசகல பாபங்களையும்கோடிஜன்மாந்திர அகிர்த்திகரமான பிரம்மஹத்யாதி மஹாபாபங்களையும் திருணகாஷ்டத்தை அக்கினியானதுஅழிப்பதுபோலஅழிக்குமே. அஞ்ஞானத்தினாலேயாவது ஞானத்தினாலேயாவது ஸ்ரீஹரி - கிருஷ்ணா - வாசுதேவா - நாராயணா - மாதவா - கோவிந்தா - முகுந்தா - ஜனார்த்தனா - ஸ்ரீ இராமச்சந்திரா - என்கிறஅனந்த நாமங்களில் யாதொரு நாமத்தைச்சொன்னமாத்திரத்திலே அநந்தபாபங்கள்பாவனமாய் ஜனனமரணமென்கிறபிரவாகத்தினின்றும்விடுபட்டு நித்தியமான ஸ்ரீபரமபதவாசிக்கு முதஸ்தனாவான் என்கிறதற்குச்சந்தேகமில்லையேயென்றுநிச்சயமாய்ச்சொன்ன துளசிதாசரைப்பார்த்துப் பிராமணர்கள்சுவாமி தேவரீருக்கு நிச்சயமாயிருக்கிறது எங்களுக்கு நிச்சயப்படுகிறதற்கு ஏதாவது ஒருசோதனையைக் காண்பித்தால்தான் சமுசயந்தீருமாகையால் விசுவநாதருக்கு முன்பாக பாஷாணமாகவிருக்கிற நந்திமுன்னே இந்த அன்னத்தைக் கொண்டுபோய் வைத்து

சாப்பிடச்சொல்லும்- அது எழுந்திருந்து சாப்பிட்டால் அப்பொழுது நாங்கள் ஒருதரம் இராமாவென்றால் பிரமஹத்திபாதி தோஷங்கள் நிவாரணமாய்விடுமென்று உறுதியாகி பிரமஹத்திபண்ணினவர்களையும் பந்தியிலேயும் வைத்துச் சாப்பிடுகிறோமென்றார்கள். அதற்குத் துளசிதாசர் விசுவநாதர்சன்னிதிக்குப்போய் விசுவநாதரைச்சேவித்து ஜயஜயாசந்திரசூடா - கங்காதரா - மதநாந்தகா - நீலகண்டா - பார்வதி ரமணா - திரிபுராரி - பக்தவச்சலா - வென்று ஸ்தோத்திரம்பண்ணிச் சுவாமி தேவரீர் ஆலகாலவிஷத்தைப்பக்ஷித்தபோது ஸ்ரீஇராமாவென்கிற அக்ஷரத்துவயத்தை ஜெபித்தபிரபாவத்தினாலே விஷம்பாதிக்காமல் கண்டத்திலேநின்றது சத்தியமானாலும் ஒருதரம்ஸ்ரீஇராமாவென்றால் பிர்மஹத்தியாதிதோஷம் நிவாரணமாமென்றாலும் இந்தத்தாம்பாளத்திலிருக்கிற அன்னத்தைநந்தீகேசுவரர் எழுந்திருந்துசாப்பிடவேண்டுமென்றவுடனே நந்திகேசுவரர்எழுந்திருந்துஅந்தநைவேத்திய அன்னத்தைப் பூரணமாக ஒருசேஷமின்றிச்சாப்பிட்டு விட்டுப் பழையபடியேஉட்கார்ந்து விட்டார். அந்தஆச்சரியத்தைச்சகலமான பேரும்பார்த்து ஆனந்தத்தையடைந்து இராமாஇராமாவென்று கெர்ஜித்துக்கொண்டிருக்கிறதுளசிதாசருக்குச்சாஷ்டாங்கமாகச்சேவித்துத் தன்னியர்கள்நீங்களேயென்று அனேகவிதமாக ஸ்தோத்திரம்பண்ணித் தேவரீருடைய பிரபாவத்தைநாங்களறியாமல் அபசாரப்பட்டோம்- தேவரீர்வைஷ்ணவவீரர்களுக்குள்ளே சிரேஷ்டரென்றுஎங்களுக்குத் தெரியாமல் சோதனைபண்ணினோம். நக்ஷத்திரங்களுக்குள்ளே சந்திரனைப்போலவும் - பக்ஷியில்கருடனைப்போலவும்- தெய்வங்களில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியைப்போலவும் - தபசிகளுக்குள்ளே பினாகபாணியைப்போலவும- ரிஷிகளுக்குள்ளே நாரதமகாரிஷியைப்போலவும் - முனிகளுக்குள்ளே கபிலமுனியைப்போலவும் - வில்பிடித்தவர்களுக்குள்ளே ஜானகிரமணனைப்போலவும் -நவக்கிரகங்களுக்குள்ளேசூரியநாராயணனைப்போலவும்- கவீஸ்வரர்களுக்குள்ளே உசனாகவியைப் போலவும் - யோகிகளுக்குள்ளே தத்தாத்திரயயோகியைப்போலவும் - பாகவதோத்தமர்களானவைஷ்ணவர்களில் தேவரீர் சிரேஷ்டமென்று எங்களுக்குத்தெரியவந்தது என்றுஸ்தோத்திரம்பண்ணிமடத்துக்குள் போய் அந்தப்பிரமஹத்திபண்ணின மஹாபாக்கியசாலியான பிராமணனைப்பந்தியில் வைத்துக்கொண்டுபோஜனம் பண்ணினார்கள்.

அதன்மேலந்தவாரணாசியென்கிறபட்டணமுழுதும்இராமநாமத்தைஸ்மரிக்கத்தலைப்பட்டார்கள் இப்படியிருக்கிறகாலையில் அந்தப்பட்டணத்தில் செயித்தகபாலனென்கிறஒருவர்த்தகன் நிரியாணமாய் அவனுடைய ஸ்திரீ சககமனம்பண்ண நிச்சயித்துப் பிரேதத்திற்குப்பின்னாலே வரும்பொழுது மடத்தின்வாசலண்டைவருகையில் அந்தப் பெண்பிள்ளை ஆ ஆ இன்னம்க்ஷணப்பொழுதில் பிராணனைவிடப்போகி

பெறுமேயிந்தமஹானுபாவரான துளசிதாசரைக்கண்டுசேவித்துவிட்டுப் போவோமென்று நினைத்துத் தான்மாத்திரம் உள்ளேபோய்ச் சேவித்தாள். அவள்சேவித்தவுடனே தீர்க்கசுமங்கலியாய் எட்டுப்புத்திரர்களைப்பெற்றுக்கொண்டு சுகமாயிருவென்று ஆசீர்வாதம்பண்ணினார். அப்பொழுது அந்தப்பெண்பிள்ளை சுவாமிதேவரீர் ஆசீர்வாதம்பண்ணுகிறீர். என்னுடையபுருஷன் கிரியாணமானார். நான் அவரோடே சககமனம்பண்ணப்போகையில் தேவரீரைச்சேவித்து விட்டுப்போக வேண்டுமென்று வந்தேனென்றாள். இதைத்துளசிதாசர்கேட்டுஸ்ரீஇராமச்சந்திரருடைய வாக்குப்பொய்யாமோஒருகாலத்தும்பொய்யாகாது அந்தப்பிரேதத்தையிங்கேகொண்டுவாருங்களென அப்படியேகொண்டுவந்துகட்டுகளையெல்லாம் அவிழ்த்தார்கள். துளசிதாசர் பிரேதத்தைப் பார்த்து ஸ்ரீஇராமாஎழுந்திருமெழுந்திருமென்றார் அப்பொழுதுபிரேதம்வாரிச்சுருட்டி யெழுந்திருந்து துளசிதாசருக்குச்சாஷ்டாங்கமாகச் சேவித்தது. உடனே அந்தஸ்திரீபுருஷர்களிருவருக்குப்பின்னும் ஆசீர்வாதம்பண்ணி வீட்டுக்குஅனுப்பிவிட்டார். இதைச்சகலமானபேரும் பார்த்து ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையுமடைந்து துளசிதாசரைப் பார்த்து நானாவிதமாய் ஸ்தோத்திரம்பண்ணிவிட்டுப்போனார்கள்.

அப்பால்டில்லிஅக்பர்பாக்ஷா இந்தச்செய்திகளைக்கேள்விப்பட்டு ஆச்சரியமாகி இவரைச்சோதிக்கவேண்டுமென்று நினைத்து ஒருமந்திரியைக்காசிப்பட்டணத்துக்குஅனுப்பித்துளசிதாசரை அழைத்துக் கொண்டுவரச்சொன்னார். அப்பொழுது மந்திரிவந்து துளசிதாசரைக் கண்டு சேவித்துச்சுவாமி யெங்கள் பாக்ஷாதேவரீரைத்தரிசனம் பண்ணவேண்டுமென்று அழைத்துக்கொண்டுவரச்சொன்னாரென்றுசொல்லப்பரோபகாரசிந்தையோடு பிராணிகள் கடைத்தேறும் நிமித்தமாகவே அவதாரம்பண்ணின துளசிதாசர் நல்லதென்று சம்மதித்து ஸ்ரீஇராமநாமத்தைக்கொர்ச்சித்துக்கொண்டு புறப்பட்டு அஸ்தினபுரத்துக்குச் சமீபமாகவரும்பொழுது டில்லி அக்பர்பாக்ஷா எதிர்கொண்டுவந்து சேவித்து அழைத்துக்கொண்டுபோய்ச் சிம்மாசனத்திலுட்காரவைத்துச் சுவாமிதேவரீர் நானாவிதமான ஆச்சரியங்களைக் காசிப்பட்டணத்தில் காண்பித்தீரே அவை யாருடையவல்லமையினாலேயென்று கேட்க-அதற்குஅவர்என்தெய்வமானஸ்ரீஇராமனுடையநாமப்பிரபாவத்தினாலேதானென்றார். அப்படியானால்உம்முடையஅந்தத்தெய்வத்தை எனக்குக் காட்டும் இல்லாவிட்டால்உம்மைவெளியிலே விடுகிறதில்லையென்று மோசல்வைத்து விட்டுப்போனான். அப்பொழுதுதுளசிதாசரானவர்ஆஞ்சநேயரை ஸ்மரிக்க அவருடனே பிரசன்னமாக அவருக்குச்சாஷ்டாங்கமாகச்சேவித்துஇந்தவிருத்தாந்தங்களெல்லாவற்றையும் சொன்னார். உடனே அநுமார்பதினாயிரம்வானரவீரர்களைஅழைத்து

அவர்களைப்பார்த்து நீங்கள் ஒருநாழிகைபரியந்தம் உங்களுடைய சுய
குணங்களை இராஜாவுக்குக் காண்பிக்கவேண்டுமென்று சொன்னவு
டனே அவர்கள் அம்புபோல ஆகாசமார்க்கத்திலேகிளம்பிப் பட்டணத்
திலிருக்கிற பிரஜைகளைஒருவர்மேலே ஒருவரைத்தூக்கிப்போடுகிற
தும் விருக்ஷங்களைவேரோடேபிடுங்கி யெறிகிறதும் பிராகாரகோபுரங்
களையும் மெத்தைமேடைகளையும் பிடுங்கித்தள்ளுகிறதும் உலோபிக
ளுடைய பொக்கிஷங்களைக்கொள்ளையடித்து வீதியிலேகொண்டு வந்து
போடுகிறதுமாக இப்படிநானாவிதமான உபத்திரவங்களினாலே பட்ட
ணத்தை அல்லோலகல்லோல மாக்குகிறதை இராஜாகேள்விப்பட்டுத்
திகிலடைந்து இதுஎன்னகாரணமென்றிருக்கிறபொழுது அந்தஇராஜா
வினுடையகாரியஸ்தர்களில் ஒருவிவேகியானவன் ஓ பாக்ஷா துளசி
தாசரானவர்வைஷ்ணவவீரர் - அவரைஅவமானம்பண்ணினதோஷத்
தினாலே யிப்படிப்பட்ட அனர்த்தங்களுக்கிடமாயிற்று என்றுசொல்ல"
இராஜாவானவர் சரிதான்நாம் அவரைஇப்படிக்காவல்செய்தது அன்னி
யாயமேயென்றுசொல்லிவிட்டுப்பயந்து துளசிதாசரண்டையில்வந்து
சாஷ்டாங்கமாகச்சேவித்துசுவாமி நான்பண்ணின அபராதங்களை
க்ஷமைபண்ணிக்காப்பாற்றவேண்டுமென்று பிரார்த்தித்தான். அதன்
பேரில் துளசிதாசர் ஓ இராஜாவே நீர் ஸ்ரீஇராமதரிசனம்பண்ணவேண்
டுமென்று அபேக்ஷித்தீரே சூரியனுக்குமுன்னே அருணோதயமாவது
போலவும் - ஒருவனிடத்தில் சிரவணம் பண்ணுகிறதற்கு முன்னே
க்ஷமைதோன்றுவதுபோலவும் - அன்னத்திற்குமுன்னே லவணம்வரு
தல்போலவும் ஸ்ரீஇராமச்சந்திரர் போருமிடங்களிலெல்லாமவருக்கு
முன்னேஅவருடையசேனைகள்வரும். ஸ்ரீஇராமச்சந்திரனுக்கு - ௭௰௨-
வெள்ளம் சேனைகள் உண்டு அவைகளிலேபதினாயிரம்பேர்முன்னேவந்
தார்கள். இன்னம்வெகுசேனைகள்வந்து அப்பால்தான் ஸ்ரீஇராமச்சந்தி
ரனுடையதரிசனம் உனக்குஆகும. உன்னுடைய பாக்கியத்துக்குஅள
வில்லையென்றுசொல்லஇராஜாவானவர்கேட்டுமிகப் பயத்தையடைந்து
சுவாமி பதினாயிரம்பேர் வந்ததில் பட்டணம் அல்லோல கல்லோல
மாய்ப்போயிற்று- மற்ற ௭௰௨-வெள்ளமும்வந்தால் என்னமாகுமோ
தெரியாது-தங்களுடைய தரிசனமேயெனக்குச் சாக்ஷாத் ஸ்ரீஇராமச்
சந்திரனுடைய தரிசனமானதுபோலாயிற்று.மற்றச்சேனைகளும்வாரா
மல்கிருபைபண்ணவேண்டுமென்றுமிகப்பிரார்த்தித்தார்.அப்பொழுது
துளசிதாசருக்குத்தயவு வந்து ஆஞ்சனேயரை ஸ்தோத்திரம்பண்ண
அவர்தம்முடைய சேனைகளை அழைத்துக்கொண்டு போய்விட்டார்.
இவற்றைக்கண்டசகலரும்ஆச்சரியத்தையடைந்துதுளசிதாசர்சரணா
கதியாயடைய அவர் ஒருவருஷபரியந்தம் அவ்விடத்தில் இருந்துசகல
ருக்கும் இராமநாமகீர்த்தனங்களை உபதேசம்பண்ணிக் கிருதார்த்
தர்களாக்கினார்.

பிறகு துளசிதாசர் இராஜாவினிடத்தில் உத்திரவு வாங்கிக் கொண்டு அஸ்தினுபுரம்விட்டுப்புறப்பட்டு மதுரைக்குவந்து கோகுலத்தில்தீர்த்தயாத்திரைபண்ணிஸ்ரீகிருஷ்ணமூர்த்தி யினுடைய தரிசனம்பண்ணிக்கொண்டுகோகுலத்திலிருந்து பிருந்தாவனத்துக்குவந்து ஸ்ரீசாரங்கபாணி ஸ்வாமியைத்தரிசனம்பண்ணி ஒரு மாதபரியந்தம் இராமகீர்த்தனம்பண்ணிக்கொண்டிருந்துமறுபடியும்மதுரைக்குவந்து-யமுனையில் ஸ்நானம்பண்ணி ஸ்ரீகிருஷ்ணமூர்த்தியைத்தரிசனம் பண்ணிச்சாது ஜனங்களையும் தரிசனம்பண்ணிக்கொண்டிருந்தார். மதுராபுரத்திலும் கோகுலத்திலும் பிருந்தா வனத்திலும் இருந்த பகவத்பக்தர்களும் இரவும் பகலும் அரிகீர்த்தனம்பண்ணுவார்கள். அவர்களுள் பிரியதாசரென்ற ஒருபிராமணன் பகவத்பக்தசிரோமணி. அவர்கலியுகத்திலே உண்டான பகவத்பக்தர்களுடைய சரித்திரத்தைச்சமஸ்கிருத பாஷையில் பண்ணியிருந்தார். அதைத்துளசிதாசர் கேட்டு அந்த க்ஷணமே பிரியதாசரிடத்தில் வந்துதேவரீர் பகவத்பக்தர்களுடைய சரித்திரங்களை வர்ணித்திருக்கிறதைக்கேட்கவேண்டுமேன்று அடியேனுக்கு மிகுந்த அபேக்ஷையிருக்கிறபடியாலதை நிறைவேற்றவேண்டுமென்றுசொல்லப் பிரியதாசரானவர் ஓகோ நாம்முன்னுள்ள பக்தர்களுடைய சரித்திரங்களையும் இவருக்குபின்னால் உண்டான பக்தர்களுடைய சரித்திரங்களையும் வர்ணித்தோம்- இவருடையசரித்திரத்தையெழுதாமற்போனோமே யென்று மனதிலே விசனத்தையடைந்து நல்லது இவர் கேட்கவேண்டுமென்று அபேக்ஷயாகச்சொல்லுகிறபடியினாலதைவாசித்துக் காணப்போமென்று அனேகம் பகவத்பக்தர்கள் சிரவணம்பண்ணத் துளசிதாசர் முன்னேவாசிக்க ஆரம்பித்து வாசிக்குமளவில் பிரியதாசருக்குந்தெரியாமல்துளசிதாசருடையசரித்திரத்தை ஸ்ரீஇராமச்சந்திரன் அந்தபுஸ்தகத்திலே யெழுதிவிட்டார். பிரியதாசர் படிக்கிறபொழுது அதைக்கண்டு மஹா ஆச்சரியத்தையடைந்து சகலமானபக்தர்களுக்கும் இந்த அதிசயத்தைக்காண்பிக்க ஸ்ரீ இராமச்சந்திரனுடைய தவஹஸ்தலிகிதகிரந்தத்தை யெல்லாரும் பார்த்து ஆனந்தாபிஷேகத்தையடைந்து பிரியதாசரையும் துளசிதாசரையும் ஸ்தோத்திரம்பண்ணினார்கள்.

பகவத்பக்தர்களுடைய பிரபாவங்களை வேதங்களாலும் வர்ணிக்கமுடியாது. துளசிதாசருடைய சரித்திரத்தை ஸ்ரீஇராமச்சந்திரன் எழுதினபடியால் அந்தகிரந்தம் சகலகிரந்தங்களுக்கும் வேதவேதாந்தங்களுக்கும் மேன்மையாயிற்று. அந்தச்சமஸ்கிருதபாஷையிலிருந்ததை நாபாஜியாநாக்கையிந்துஸ்தானியில் எழுதினார். அதைப் பார்த்துஉத்தவகீர்த்தன பரமபாகவதோத்தமர்சுத்தஸபாஷையில்கிரந்தமாகப்பண்ணினார். அதைப்பார்த்துச் சுவர்னத்திலே கல் இழைக்கிற

யொத்தபாகவதோத்தமர் சரித்திரத்தை அறியும்பொருட்டு எனது கொச்சைச்சொற்களையுமேற்றுக்கொள்வார்கள் என்றெண்ணிமகிபதியாகியநான் மகாராஷ்டிரபாஷையில் எழுதினேன். பீமாதீரவாசியான ருக்குமணிரமணன் அனுக்கிரகத்தால் இந்தத்திவ்வியசரித்திரம் நிறைவேறிற்று. ஸ்ரீ வாசுதேவ ஜெபிரூயபிரவேனம: ஸ்ரீ கிருஷ்ணயபரம குருவேநம: ஸ்ரீ ரெங்கதாமனேநம: ஸ்ரீ இராமச்சந்திராயநம:.



நான்காவது அத்தியாயம்.



# நாமதேவர் சரித்திரம்



ஸ்ரீயாபகவிச்வஉத்தாரபவிஞசஞ - ஸ்ரீஹரிபுண்டலீகவரதா - பக்தாராமகல்பத்ரு - பக்தவத்ஸலா - இராமச்சந்திரா - கிருஷ்ண - பாண்டவநாதா - அனந்தகல்யாணகுணநிதே என்று ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு இந்தப்பக்தவிஜயகிரந்தத்தின் நான்காவது அத்தியாயத்தைச்சொல்லுகிறேன்.

கேளுங்கள் சாதுக்களே க்ஷீரஸாகரவாஸியானஸ்ரீமந்நாராயணன் சுகரையும் உத்தவரையும்பார்த்து ஓ உத்தமர்களே நீங்கள் இருவரும் பிரிதிவிலோகத்திற்போய் அவதரித்து ஜனங்களுக்கென்னுடைய பிரபாவத்தை உபதேசியுங்களென்று ஆக்ஞாபிக்கஅவர்களிருவரும்தேவரீருடைய ஆக்கினைப்படிக்கு நடக்கிறோம், ஆனாலெங்களுக்கு அயோநிஜர்களாக ஜென்மம் கொடுக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். இந்தவசனத்தை ஜகத்கர்த்தாவான நாராயணன் கேட்டு நாம்அவ்வாறே செய்கிறோம் நீங்கள் பூமியிற்போய் எனதுஉத்தரவுப்படி நடவுங்களென்று சொல்லிவிட்டு அவர்களிருவரையும் குழந்தைகளாக்கியிரண்டு சிப்பியிலே வைத்துமூடி மேகத்துவாரமாகஒன்றைக்கங்கையிலேயும் ஒன்றைப்பீமாதீர்த்தத்திலேயும் விழப்பண்ணினார். அவைகளுள் கங்கையில் விழுந்த சுகர் ராமநாமப்பிரியராகவும் பீமாதீர்த்தத்தில் விழுந்த உத்தவர் கிருஷ்ண நாமப்பிரியராகவும் பிரவாகத்தில் வந்துக்கொண்டிருந்தார்கள். இந்த இவ்வாறிருக்கப்பண்டரிபுரத்திலிருக்கிற சிப்பியத்தலைவராகிய தாமாஜியென்கிறவர் பகவத்பக்தர் புண்ணியசிரேஷ்டர் ஸ்ரீகிருஷ்ணனுடையபூசைகளைவழுவுதலில்லாமல்பண்ணிப்பிறகு போஜனம்பண்ணுகிறதே நித்தியநியமமாகவுடையவர். அவருடைய பாரியானவள் மஹாகுணசாலி - குணபாயியென்று பெயர்.

இவ்விருவரும் பண்டரிபுரத்தில் ஜகந்நாதனை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு ஆனந்தமாயிருக்கிறபோது - ஒருநாள் குணபாய் தன்னுடைய புருஷனைப்பார்த்துச் சுவாமி நமக்குப் புத்திரசந்தானமில்லாதபடியால் பாண்டுரங்கனிடத்திலபோய் ஒருபுத்திரனைக்கேட்டபோமென்று சொன்னாள். அந்தவசனத்தை அவள் புருஷனான தாமாஜி கேட்டு நீ அஞ்ஞானத்தினாலே இப்படிப்பட்ட வார்த்தைகளைச் சொல்லுகிறாய். ஏனென்றால் நாமிருவரும் விருத்தாப்பியமாயிருக்கிறோம். உளுத்துப்போனவிதைகள் காரியத்துக்கெப்படியாகும் வருஷாகாலம் போனபிறகு வருஷிக்கவேண்டுமானால் மேகமெப்படிவருஷிக்கும். அப்படிப்போல இருக்கிறது இந்தவிருத்தாப்பியத்தில் நீ புத்திரசந்தானம் வேண்டுமென்றுலெச்சையில்லாமல் இச்சிக்கிறது. எண்ணெயும்திரியுமில்லாமல் விளக்கேற்றநினைக்கலாமா. பகவானெப்படிக்கட்டளையிடுவாரென்றுசொல்ல ஸ்திரீயானவள் சுவாமி யென்பிராணநாதரே ஏன் இப்படிச்சொல்லுகிறீர். சர்வத்துக்கும்வல்லவனான ஸ்ரீ மந்நாராயணனுடைய சக்தியின்னபடியானதென்று சொல்லிமுடியுமா. ஸ்ரீராமாவதாரத்திலே சமுத்திரத்தில் கல்லை மிதக்கப்பண்ணினவரும் கல்லை பெண்ணாக்கினவரும் ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தில் பிரம்மதேவன் பசுக்களையும் கன்றுகளையும்திருடிக்கொண்டுபோக அந்தனை ஆயர்கள்வீட்டிலும் பசுக்களும் கன்றுகளுந்தாமேயாயினவரும் குருதக்ஷிணாநிமித்தம் இறந்துபோன ஏழு குருபுத்திரர்களை மறுபடியும் அழைத்துக் கொடுத்தவருமாகிய ஸ்ரீ கோவர்த்தனோத்தாரனுக்கு எனக்கு ஒரு புத்திரசந்தானங்கட்டளையிடுகிறது பாரமோவென்று சொல்ல அந்த வசனத்தைத்தாமாஜிகேட்டுச் சம்மதித்து உண்மைதான் அப்படியானால் நான் கோவிலுக்குப்போய் ஜகந்நிவாசனிடத்தில் உன்னுடைய மனோரதத்தை விண்ணப்பம்பண்ணிக்கேட்கிறேன் என்றுசொல்லிப் புறப்பட்டுக்கோவிலுக்குவந்து ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமாவைச்சரணமடைந்து சுவாமி யென்னுடைய ஸ்திரீயானவள் புத்திரசந்தானத்துக்கு இச்சைப்படுகிறாள்- தேவரீர் கடாக்ஷப்பண்ணவேண்டுமென்று பிரார்த்தித்து அவ்விடத்திலேயே படுத்துக்கொண்டுநித்திரைபோய் விட்டார். அப்பொழுது ஒருசொர்ப்பனங்கண்டு அந்தச்சொர்ப்பனத்திலேஸ்ரீ யப்பதியானவர்சேவைசாதித்து உனக்குப்புத்திரசந்தானம் கொடுத்தேன் - பயப்படாதே -நாளையத்தினஞ்சூரியஉதயத்துக்குபீமாநதிக்குஸ்நானத்துக்குப்போ அங்கே அப்பொழுது சிப்பிக்குள்மூடப்பட்டுஒருபுத்திரஇரத்தினம்மிதந்துவரும்அதைச்சீக்கிரமாயெடுத்துக் கொண்டுவீட்டுக்குப்போ. அவன்உத்தவருடையவவதாரம். என்னிடத்தில்விசேஷமாகப் பக்திபண்ணுவான். எனக்குமகாபிரியனாயிருப்பன். லோகோத்தார நிமித்தம் அவதரிக்கிறவன் மகா பாகவதோத்தமனென்று சொல்லிவிட்டு அதிர்சியமானார். உடனே தாமாஜி விழித்துக்

சொண்டுசுவாமிக்கு அனந்தசாஷ்டாங்கதண்டம்பண்ணி ஸ்தோத்திரஞ் சொல்லிவிட்டு வீட்டுக்கு வந்துதன் ஸ்திரீயுடனே நடந்தவிருத்தாந்த மெல்லாம் சொல்ல அவளுக்குமளவில்லாத சந்தோஷமுண்டாயிற்று.

மறுநாள்காலமே பீமாநதிக்குப்போய் ஸ்நானம்பண்ணி நித்திய நியமங்களைமுடித்துக் கொண்டிருக்கையில் அகஸ்மாத்தாய் பிரவாகத்திலே ஒரு முத்துச்சிப்பியானது மிதந்து கொண்டுவருகிறதைக்கண்டு சீக்கிரமாயோடி யெடுத்துக்கொண்டுவந்து திறந்துபார்த்தார். அதில் இப்பொழுதுதான் தாய்வயிற்றிலிருந்து பிறந்தகுழந்தையைப்போலிருக்கிற சிசுவைக்கண்டு சந்தோஷப்பட்டு மறுபடியிந்தக்குழந்தைக்கு ஒரு தாய்வைத்து ஸ்தன்னியபானம்பண்ணுவிக்கிறதற்கு நான் தரித்திரனுயிருக்கிறேனென்னுடைய ஸ்திரீயோ விருத்தாப்பியமுள்ளவளாயிருக்கிறாள் அப்படியிருக்க இந்தப்பிள்ளையையெவ்வாறு காப்பாற்றுகிறதென்று சிந்தாக்கிராந்தராய் அந்தக்குழந்தையை ஒரு வஸ்திரத்திலே வைத்துக்கொண்டு வீட்டுக்குவந்து ஸ்திரீயையழைத்துச் சுவாமி யிந்தக்குழந்தையை நமக்குக்கொடுத்தாரென்று சொல்ல அப்பொழுது அவள் மிகுந்தசந்தோஷத்தோடு வந்து குழந்தையைக் கையிலே வாங்கிப்பார்த்தாள். உடனே ஸ்தனம் விம்மிப்பால் சுரக்க இருவரும் மகாஆச்சரியமடைந்து பாலூட்டி இதுவும்பக்தவச்சலனை அந்த ஸ்ரீமந்நாராயணனதுசெயலேயென்றுசொல்லி அவரைஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டு அந்தப்பிள்ளைக்கு நாமதேவ[illegible]பேரும் வைத்துப் பிரியமாய் வளர்த்துக்கொண்டுவந்தார்கள்[illegible]அந்தப்பிள்ளையும் பேதமைப்பருவங்கடந்து அறிவு ஒழுக்கம் பக்தி முதலியவைகளாற் சிறந்து வளர்ந்து வருகிற நாளையில் ஒரு நாள் நாமாஜியென்கிறவருக்குச் சிறிது தூரத்திலுள்ள ஒரு கிராமந்திற்குப்போக வேண்டியதாயிற்று. அப்பொழுது தன் ஸ்திரீயைப்பார்த்து இன்றையத்தினம் நாமதேவன் கையில் பூஜாதிரவியங்களைக்கொடுத்துக்கோவிலுக்கு அனுப்பிப்பூஜைசெய்துவரும்படிசெய் நாளைக்கு நான்வந்துவிடுகிறேனென்று சொல்லிவிட்டுப்போனார். அப்படியே அவள் பூஜாதிரவியம் நைவேத்தியமுதலானவைகளைப் பிள்ளை கையில்கொடுத்து அனுப்புவித்தாள். நாமதேவர்கோவிலுக்குவந்து பக்தியோடே பூஜைபண்ணி நைவேத்தியத்தைச் சுவாமிமுன்னேவைத்துச் சுவாமிநித்தியம் சாப்பிட்டு விடுகிறதென்று எண்ணிக்கொண்டு சுவாமியைச்சாப்பிடும்சாப்பிடுமென்று சொன்னார். பலவாறு பிரார்த்தித்துச் சாப்பிடவேண்டுமென்று சொல்லியும் சாப்பிடாதபடியால் சுவாமி நீர் சாப்பிடவில்லையே. உன்னுடைய நிஜதாசன் நாமாஜி பக்கத்திலுள்ள வோர்கிராமத்திற்கு போனபடியாலென்னிடத்தில் இந்த நைவேத்தியபூஜாதிரவியங்களைக்கொடுத்துப் பண்டரிநாதனாகிய உனக்கு அர்ப்பிதம்பண்ணிவிட்டு வரச்சொன்னார். தேவரீர் சாப்பிடாமல் சும்மாவிருந்தால் என்

தாயானவள் நீ யென்ன அபராதம்பண்ணினாயோவதனால்தான் சுவாமி சாப்பிடவில்லையென்றென்னை அடிப்பாளே யென்றுசொல்லிவிட்டுத் தேம்பித்தேம்பி அழுதுகொண்டு சுவாமி ஜகந்நாதா சாப்பிடும். தயவு பண்ணி விரைவில்வாரும் எனக்கும் பசியும் தாகமுமாயிருக்கிறது என்று இப்படிச்சொன்னவசனத்தைப் பக்தவச்சலனான பண்டரிநாதன் தேவாதி தேவன்கேட்டு நாமதேவருக்குப் பிரசன்னமாய் ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு அவர் கொண்டுவந்த நைவேத்தியத்தை நிஜரூபத்தோடேயிருந்துசாப்பிட்டுவிட்டுப்பிறகுநாமதேவரைப்பார்த்து இந்தச் செய்தியை ஒருவரோடேயுஞ் சொல்லாதேயென்று சொல்லிவிட்டு அதிர்சியமானார். அதன்மேல் நாமதேவர் வழக்கம்போலச் சேவித்துக்கொண்டு ஸ்தோத்திரம்பண்ணிவிட்டு ஆனந்தத்தோடே வீட்டுக்கு வந்தார். வீட்டிலே தாயானவள் நைவேத்தியமெங்கே யாருக்குக்கொடுத்தாயென்றுகேட்க அம்மாநான் ஒருவருக்குங்கொடுக்கவில்லை. எப்பொழுதும்போலச்சக்கரபாணியே சாப்பிட்டாரென்றார். அதைக்கேட்டுக்குணாபாய் ஆச்சரியமாய்மறுநாள்புருஷன்வந்தவுடனே இந்த அதிசயத்தைச்சொல்லத் தாமாஜியுங்கேட்டு மஹா ஆச்சரியப்பட்டுநாமதேவரைப்பார்த்து ஏ நாமதேவா சக்கரபாணி நீ கொண்டுபோன நைவேத்தியத்தையெப்படிச்சாப்பிட்டார். இன்றைக்கு உன்னோடுகூடக்கோவிலுக்குநான்வருகிறேன்-அவரைச்சாப்பிடச்சொல்லு பார்ப்போமென்று சொல்லிப் பூஜாதிரவியங்களையும் நைவேத்தியத்தையுமெடுத்துக்கொண்டு இருவரும் கோவிலுக்குப்போனார்கள். நாமதேவர் தேவாதிதேவனுக்குப் பூஜையைவிதியோடேபண்ணி நைவேத்தியத்தை முன்னேவைத்து சுவாமி சாப்பிடும் சாப்பிடுமென்றார். அப்பொழுது ஜகந்நிவாசன் தாமாஜிக்குத்தெரியாமல் நாமதேவருக்கு மட்டுந்தோன்றி ஓ நாமதேவா உன்தகப்பன் உன்னோடேகூட இருக்கிறபடியினாலே நான்நேற்றுப்போல வந்துசாப்பிடமாட்டேன். என்னுடைய தரிசனம் அவருக்குக் காண்பிக்கமாட்டேனென்று சொல்ல நாமதேவர் ஹேகபடநாடக சூத்திராவதாரி நீ யெனக்குமாத்திரம் தரிசனங்கொடுத்து என்னுடைய தகப்பனுக்குக்கொடுக்கிறதில்லையானால் உன்னைவிடமாட்டேனென்று சொன்னதைக்கேட்டு அடியவர்க்கெளியனான ஸ்ரீவாசுதேவமூர்த்திமந்தஹாசத்தோடே யிருவருக்கும் பிரசன்னமாய் நைவேத்தியத்தைச்சாப்பிட்டுவிட்டு அதர்சியமானார். அப்பொழுது தாமாஜிபிள்ளையைப்பார்த்து வியந்து ஓ ஓ இவன் எவ்வளவுபாக்கியசாலி இந்தப்பிள்ளையினாலே பிரம்மஇந்திராதிதேவதைகளுக்கும் துர்லபமான இருடிகேசனுடைய தரிசனமாயிற்று கிருதார்த்தனானேனேயென்று ஆனந்தத்தோடேபிள்ளையைஅழைத்துக்கொண்டு வீட்டுக்குவந்து தன்ஸ்திரீயுடனே யிந்த ஆச்சரியத்தைச்சொல்லியிருவரும் அளவில்லாத ஆனந்தகரமாயிருந்தார்கள்.

அவ்வாறிருக்கிறநாளையில் தாய்தந்தையர் நாமதேவருக்கு விவாகம்பண்ணவேண்டுமென்று உறவின்முறையாருக்குள்ளே ஒருபெண் விசாரித்து நிச்சயம்பண்ணிக்கலியாணம்பண்ணுவித்தார்கள். கொஞ்சநாளைக்குப்பிறகு அந்தப்பெண் கெர்ப்பந்தரித்து ஒரு புத்திர இரத்தினத்தைப்பெற்றுப் பன்னிரண்டாநாள் அப்பிள்ளைக்கு நாமகரணம் பண்ணுகிறதற்குப்பண்டரிநாதனுக்கு விருந்துசொன்னார்கள். அப்பொழுது பகவான்வரிசையெடுத்துக்கொண்டுவர - அந்த இருடிகேசனைக் குணாபாய்பார்த்துச் சுவாமி நாமதேவனுக்குப்பிள்ளை பிறந்தது - அந்தப்பிள்ளைக்கு என்னபெயர்வைப்போமென்று கேட்கப்பகவான் இந்தப்பிள்ளைக்கு நாராயணனென்று பேர் வைத்து விளையாடுவோமென்றார். அந்தப்படியே நாமகரணம்பண்ணினார்கள். ஜகதீசுவரனும்அந்தப் பிள்ளைக்கு அனேக ஆபரணங்களும் அந்தப்பிள்ளையின்தாயாகிய இராதாபாயிக்கு ரவுக்கை சேலை முதலானவைகளும் கொடுத்துவிட்டுக் கோவிலுக்குப்போய்விட்டார்.

இப்படியிருக்கிறநாளையில் தாமாஜிகுணாபாயிருவரும் அத்தியந்த விருத்தாப்பியமாய் தாரித்திர பீடை ரொம்பவும் பாதிக்கிறபோது குணாபாய் ஆனதாயார் நாமதேவரைப்பார்த்து ஓநாமதேவா அறுபது நாழிகையும் பகவத்பக்தியிலே அமிழ்ந்தி இருப்பாயானால் சமுசாரம் நடத்துகிறதற்கு வேண்டிய செலவுக்குஎன்னபண்ணுவோம் - அனேக பகவத்பக்தர்கள் லவுகீகம் பாரமார்த்திகம் இரண்டிலேயும் சமர்த்தர்களாயிருக்கவில்லையா - உன்னுடையஸ்திதிமட்டும் வேறுவிதமாயிருக்கிறதே. வீட்டிலே குழந்தைகளும் சமுசாரமும் கஷ்டப்படுகிறதை எவ்விதமாய்ப் பார்க்கிறது என்று சொன்னவார்த்தையைக் கேட்டுக் கோவிலுக்குப்போய்ப் பகவானைப்பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணிச் சுவாமியிந்தத்துக்கரூபமான சமுசாரசாகரத்தில்என்னையேன்அமிழ்த்தினீர். இந்தமஹாதுக்கம் சகிக்கமுடியவில்லையே யென்று தீனத்துவமாய்ச்சொல்ல அவ்வார்த்தையைப் பண்டரிநாதன்கேட்டு ஏனப்பா உன்னையின்றைக்கு யாரென்ன உபத்திரவப்படுத்தினார்களென்று கண்ணீரைத் துடைத்துச் சமாதானம்பண்ண - அப்போது நாமதேவர் ஓதேவாதிதேவாயென்னுடையதாயானவள்ரொம்பவும் சமுசாரத்தைப் பற்றிச் சொல்லி மிகுந்தகவலைக்குள்ளாக்கினாள். உன்னுடையதிவ்ய திருவடிகளைச்சரணமடைந்து அவைகளே கதியென்றிருக்கிற என்னை யக்கவலைகளினின்று நீக்கிரக்ஷியுமென்று சொன்னார். அதற்குப்பண்டரிநாதன் நீ யென்னிடத்திலே யிருந்தால் மாய்கை - மமதை முதலிய ஒன்றும உன்னை அணுகமாட்டாது. நீ யென்னுடைய சொரூபம் உப்பானதுசமுத்திரத்துக்கு வேறாகத்தோற்றினாலும் வேறன்று அதினுடையசொரூபமே - சூரியனுக்கும்சூரியபிரபைக்கும்வேற்றுமையில்லை - தீபத்துக்கும் பிரகாசத்துக்கும் வேறுபாடில்லை - இரத்தினத்துக்கும்

பிரகாசத்துக்கும் பேதமுண்டா அவைபோல வென் நிஜதாசனாகிய உனக்கும் எனக்கும் பேதமில்லையே அப்படியிருக்க வேன்கவலைப்படுகிறாயென்று சொல்ல - நாமதேவர் ஓ ஜகந்நிவாசா இந்தஞானத்தையெனக்கேன்சொல்லுகிறீர். தேவரீருடைய நாமம் என்னுடையநாவியிலே யிருக்க இந்தச்சமுசாரதுக்கத்தை யார்சட்டையண்ணுகிறார். மனதானது உன்னுடைய ரூபத்திலே லயமாயிருக்கிறபோது சமுசாரத்தின் அனுதாபம் எங்கேயிருக்கப்போகிறது- நீ தெய்வம் நானுன்னடிமை உன்னுடைய நாமத்தை ஜன்மஜன்மந்தோறும் கீர்த்தனம்பண்ணத்தக்க வரத்தைக்கொடும் - மோக்ஷமெனக்குப் பெரிதாகத்தோற்றவில்லையென்று சொன்ன வார்த்தையைக்கேட்டுப் பகவான் சிரித்து ருக்குமணிதேவியைப்பார்த்து இவனுக்குச்சகளவடிவத்தில் பிரமையதிகம் - ஆகையால் ஆத்துமஞானமனதிற்குப் பிடியாதென்று சொல்லிவிட்டு நாமதேவரையெடுத்து மார்போடணைத்து மடியிலேவைத்துக்கொண்டு உன்னுடைய கிரககிர்த்தியமிப்பொழுதெப்படி நடக்கிறது அதைச்சங்கோசப்படாமல் சொல்லென்றுசொல்ல நாமதேவர்சொல்லுகிறார். என் கிரககிர்த்தியத்தைச் சொல்லச்சொல்லுகிறீர் தேவரீருடைய பிரசாதத்தினாலே எனக்கென்னகுறை - தேவரீருடைய வீடு பரமபதம் என்வீடுபறன்குச்சு - சர்வலோகசரணியாஉன்னுடைய வீட்டில்அஷ்டமாசித்திகளும்ஊழியக்காரிகள் - சாப்பிடுகிறதுஅமிர்தம் என் வீட்டில் கஷ்டமேஅதிகம் சாப்பிடக்கூழுக்குஇடமில்லை - நீ தரிக்கிறது பீதாம்பரம் என் பெண்சாதி பிள்ளைதரிக்கிறது திகம்பரம் - நீ சயனிக்கிறது சேஷனுடலில் நாங்கள் சயனிக்கிறது அவன்தலைச்சுமையாகிய பூமியில் - உன்னுடையவீட்டில்இரத்தினங்கள்நிமிடகரித்திருக்கின்றன என்னுடையவீட்டில் உன்னுடையதிவ்வியநாம இரத்தினங்கள் நான் என்றுசொன்னவார்த்தையைக்கேட்டு பக்தபராதீனன் மந்தஹாசம் பண்ணினார்.

இவ்விடத்திலிப்படியிருக்க நாமதேவருடைய ஸ்திரீயான இராதாபாய்வீட்டிலே தன் மாமியாரைப்பார்த்து ஏ மாமிஉன்னுடையபுத்திரன் என்னநிமித்தியார்த்தம்வந்து அவதரித்தாரோ எனக்குக்கட்டவஸ்திரமும் சாப்பிடச்சாதமுங்கிடையாமல் நானும் என் பிள்ளைகளும் கஷ்டப்படுகிறோம்.எவன்இவருடையசேவகம்வாங்குகிறானோஅவனே நம்முடைய குடியைமுழுகடிக்கத்தலைப்பட்டான்போலும் காணப்படுகிறது நாம்செய்யலாவதென்ன சமுசாரத்துக்கு வேறொருவழியுங்காணேனே என்று விசாரப்படுகிற சப்தமானது நாராசம்போலே அனாதபந்து வினுடையகாதில் விழுந்தது. அதுகேட்டவுடனே கருணைவந்து நாமதேவருக்குத்தெரியாதபடிக்கு ஜெககர்த்தாவான நாராயணன் கேசவசெட்டியென்கிற பெயருடன் ஒரு வர்த்தகனாகவேஷமெடுத்துக்கொண்டு கருடனை ஒரு பொதிமாடாக்கி அதின்பேரிலே

ஒரு மூட்டைவராகனைப்போட்டுக்கொண்டு நாமதேவர் வீடுவிசாரித்துக்கொண்டு போகிறபோது போகிறவர்கள் வருகிறவர்கள் எல்லாம் நாமதேவர்வீட்டில் சாப்பிடவேஅன்னம் கிடையாதே இவன்விருந்தாளியாகப்போவதுபோலத் தோன்றுகிறதே அங்குஏன் போகிறானென்று மனதிலேநினைத்துக்கொண்டு அதோகொடிகட்டின குச்சுத்தெரிகிறதே அதுதான் நாமதேவர்வீடென்று காண்பித்தார்கள். அந்த வீட்டண்டைவந்து சேர்ந்து நாமதேவருடையபெண்சாதியான இராதாபாயியைப்பார்த்து முராரியானவர் உங்கள் வீட்டிற்குவிருந்தாகவந்தேனென்றார். அதற்கவள் வீட்டிலே எஜமானில்லை நீங்கள் வந்தவழியைப்பார்த்துக்கொண்டுபோங்களென்று சொல்லிவிட்டு கதவைச்சாத்திக்கொண்டு அயல் வீட்டிலிருந்துவந்து பேசிக்கொண்டிருந்தவளைப்பார்த்து இந்த வீட்டுக்கு விருந்தாளிகள் வந்தால் நாங்கள் என்ன பண்ணப்போகிறோம். நானாவித உத்தமமானவர்கள் பகவானைத்தியானம் பண்ணிக்கொண்டிருக்கிற பகவத்பக்தர்கள் எங்கள் வீட்டுக்கு எந்நேரமும் வருவார்கள் என் எஜமானுக்கு வீட்டினிருப்புத்தெரியாமல் அவர்களுக்குப் போஜனம் பண்ணுவிக்கச் சொல்லுவார். நானதற்குச் செய்யலாவதென்ன சகியேயென்று சொன்ன வார்த்தையை ஸ்ரீஹரி கேட்டு இராதாபாயியைக் கதவையாவது திறவென்றார். அதற்கவள் கதவைத்திறக்காமல் கதவிடுக்கிலிருந்துகொண்டுசெட்டியைப்பார்த்து நீர்யார் எங்கேயிருக்கப்பட்டவர் உங்கள் நாமதேயமென்னவென்று கேட்டதற்கு என்பேர் கேசவசெட்டி எனக்கும் நாமதேவருக்கும் அத்தியந்தசினேகம் அவரைக்காணவந்தேன் அன்றியும் என்னுடைய பிராணசகாவான நாமதேவர் மிகவும்தரித்திரத்தால் கஷ்டப்படுகிறாரென்றுகேள்விப்பட்டுக் கொஞ்சம் திரவியம் கொண்டுவந்திருக்கிறேனென்றார். இந்தவசனத்தைக்கேட்டவுடனே இராதாபாய் கதவைத்திறந்து வெளியே வந்து உபசாரங்கள்பண்ணி உள்ளே அழைத்துக்கொண்டு போய் ஆசனம்கொடுத்து உட்காரவைத்தாள். இவள் முன்னேநிஷ்டூரமாய்ச்சொன்னதும் திரவியம் கொண்டுவந்திருக்கிறேனென்றபிறகு உபசாரம் பண்ணினதும்பற்றி இருடீகேசன் சிரித்துத்திரவிய ஆசை பொல்லாதது - சுவாமி சற்குரு முதலானவர்களையும் இராஜாக்களையும் பந்துஜனங்களையும் இஷ்டமித்திரர்களையுங்காணப்போகிறபோது பக்தியினாலும் விசுவாசத்தினாலுமேதேனும் கொண்டுபோகவேண்டும் - அயலார்வீட்டில்ஒருநாளும்வெறுங்கையோடுபோகவேகூடாதென்று நினைத்து இராதாபாயியைப்பார்த்து ஓ அம்மணி என்னுடைய பிராணசகாவான நாமதேவனைச்சமுசாரசவரக்ஷணை நிமித்தம் உபத்திரவப்படுத்தவேண்டாம் இந்தத்திரவியத்தைச் செலவுபண்ணிக்கொள் செலவழிந்துபோனால் இன்னமும் வேண்டியதிரவியங்கள் கொடுக்கிறேன் உன்னுடைய பர்த்தாவுக்கும் நான் வந்தசெய்தியைச்சொல்

லென்று சொல்லிவிட்டு நீலமேகசாமளன்பீமாராஜா குமாரத்தியான
ருக்குமணிதேவிக்கு நடந்த விருத்தாந்தமெல்லாம் சொன்னார். இரா
தாபாயானவள் மஹாசந்தோஷமடைந்து என்னுடைய பர்த்தாசெய்
யும் சேவைக்குமகிழ்ந்து பகவானே யிந்த திரவியத்தைக்கொடுத்தா
ரென்று அதைத்திறந்து மடிநிரம்ப வராகனை யெடுத்துப்போட்டுக்
கொண்டு கடைவீதிக்குச் சென்று கடைக்காரன்கையில் சிலவராகனைக்
கொடுத்து எங்கள் வீட்டிற்குத்தேவையான சாமான்களைக்கொடுத்
தனுப்புவியென்று சொல்லிவிட்டு வந்துவிட்டாள். அந்தக் கடைக்கார
னும் சந்தோஷமாய்வேண்டியவைகளையெல்லாங்கொடுத்தனுப்பினான்.
நாமதேவருடையதாயார் குணாபாயி வெளியேபோயிருந்தபடியாலவ
ளுக்கு இந்தச்செய்தி ஒன்றுந்தெரியாது. அங்கேகொஞ்சம் தானியம்
சேகரம்பண்ணிக்கொண்டுவருகிறவள்மனதிலேநாமதேவனைக்கோபித்
துக்கொண்டு கோவிலுக்குப்போயிருக்கிறவனை அழைத்துக்கொண்டு
போவோமென்று நினைத்துக் கோவிலுக்குப்போய் கருடகம்பத்தண்
டையில்வந்து சாஷ்டாங்கமாகச்சேவித்துவிட்டுஉள்ளேபோனாள். அப்
போது இருடீகேசன் நாமதேவரைப் பின்னாலே வைத்துக்கொண்டு
தான் இவள் முன்னாலே நின்றார். அவரைப்பார்த்து குணாபாய் சுவாமி
பண்டரிநாதா என்பேரில் கிருபையண்ணி நான் விக்ஞாபனம்பண்ணு
கிறதைக்கேட்கவேண்டும். நாமதேவனோ உன்னிடத்திலேயே மனம்
வைத்து சமுசாரத்தைநழுவவிட்டான். மோகஇராகத்து வேஷங்கள்
மாயை இவைகளை வேரோடேகளைந்து விட்டுச் சதா உன்னையே தியா
னம்பண்ணிக்கொண்டிருக்கிறான். அவன் பெண்சாதி பிள்ளைகளும்
நானும்படுகிறகஷ்டம் அவனுக்குள்ளளவுந்தெரியாது. அவனுக்குச்
சமுசார நினைப்பேயில்லாமல் அவன் மனதை உன்னிடத்திலே லயித்
துப்போகத்தக்கதாகப்பண்ணிவிட்டாய் நாங்கள் உன்னிஷ்டர்களாயி
னும் எங்களைத்துஷ்டர்களாகவெண்ணி அவனைமாத்திரம் இஷ்டனென்
றெண்ணிப்பின்பாரிசமாக வைத்துக்கொண்டு பேசவருகிறீர். ஜகந்நி
வாசா உனக்குக்கருணையில்லையா. இனிமேல்உன்னுடையதாக்ஷணியம்
பார்க்கமாட்டேன். நாங்கள்பிரயாசைப்பட்டுவளர்த்த பிள்ளையை எங்
கள்பேரிலே நிராசையாகப்பண்ணிவிட்டு உன்னடிமையாக்கிக்கொள்
ளுகிறது உனக்கு நியாயமோ. உன்னை மஹாதாதாவென்றுசொல்லுகி
றார்களே - அது என் மனதிற்குச்சரியாகத்தோற்றவில்லை. நீ சுதாமன்
கையில் ஒருபிடி அவலைமுன்னேவாங்கிக்கொண்டுஅப்பால்தானே அவ
னுக்குச் சுவர்ணத்தைக் கொடுத்தாய் - கைமாறில்லாமல் நீ கொடுக்க
வில்லையே-விபீஷணனுக்குலங்கா இராச்சியமும்சிரஞ்சீவிப்பட்டமும்
அவனைக்கொண்டு இராவணனுடைய உளவைஅறிந்துகொண்டுஉம்மு
டையகாரியமானபிறகுதானேகொடுத்தீர். துரௌபதை-கஜேந்திரன் -
துருவன் - பிரகலாதன்முதலானசமஸ்தமானபேரையும் அவரவர்கள்

சுகிர்தம் உன்னையிழுத்து ரக்ஷிக்கச்சொல்லிற்றேயல்லாமல் நீயாக ஒருவரையும்ரக்ஷித்ததில்லை "நான் ரக்ஷகனென்று" பேர்மட்டும்வைத்துக்கொண்டிரேயல்லாமல் உம்முடைய அவகுணங்கள் எழுதிமுடியாது என்றுசொன்ன மொழிகளைச் சாரங்கபாணி கேட்டுச் சிரித்து ஓபெண்ணேவிருதாவாகவென்பேரில் ஏன் கோபம்பண்ணுகிறாய் என்னுடைய திருவடிகளில் நாமதேவன் சித்தத்தைவைத்துப்பயித்தியகாரன்போலே திரிகிறான். உன்னுடையபிள்ளைக்கு உங்களிடத்திலாசையிருந்தால் அழைத்துக்கொண்டுபோ - வென்னுடைய நாமதேவனை உன்பிள்ளையென்றுசொல்லி அவனுக்குநல்லவள்போலப்பேசுகிறாய். அவனுக்குப் பிரியமிருந்தால் சுகமாயழைத்துக்கொண்டுபோ என்பேரில் குற்றஞ்சாட்டாதே - காயென்றுகிறபொழுதே பழுத்துக்காற்றடித்தவுடனேகீழே உதிர்ந்ததுபோல நாமதேவன் தீவிரபக்குவமடைந்தான். அப்படியிருக்க என்பேரில் ஏன் நிஷ்டூரம்சொல்லுகிறாய். நானொன்றிலும் ஒட்டாதவனாகவும் குணரஹிதனாயும் - நாசரஹிதனாயும் - பரிபூரணனாயும் - அசாத்தியனாயும் - நாமரூபரஹிதனாயுமிருக்கிறேன் - நாமதேவருடைய சப்தப்பிரியத்தினாலே சத்துவகுணத்திலே வந்தேன். பஞ்சபூதசிருஷ்டிக்குமுன் நாமதேவருக்குமெனக்கும் பிராணசினேகம். நீயோ இப்பொழுது சிருஷ்டிக்கப்பட்டவள். என்னுடையபிள்ளையென்று என்நியாயத்தினாலே சண்டைக்குவருகிறாய் - விருக்ஷத்துக்கு மதம்வந்தால் அதினுடைய உச்சாகத்தை அந்தமரமே அனுபவிக்கும் - எனக்குப்பிராப்தமாகவில்லையே யென்று நீ சொல்லுதல் உன்னுடைய கர்மவிசேஷம் - நான் ஜகத்துக்கு ஆதாரருக்ஷமம் என்னுடைய அமிர்தபலம் நாமதேவரென்று சொன்ன ஜெககர்த்தாவுடைய வசனத்தைக் கேட்டுக்குணாயி சுவாமி ஜகந்நிவாசா நன்றாயச்சொன்னீர். குடியானவன்நானாவிதக்கஷ்டப்பட்டுப்பயிரிட்டுவைக்கப்பக்குவகாலத்திலேஇராஜாவினுடைய உத்தரவுப்படிக்கறுத்துப்பயிரிட்ட குடியானவனுக்குக் கூடவொன்றும் கொடாமல் செலவிட்டதுபோல நான்மிகுதியும் கஷ்டப்பட்டுவளர்த்தபிள்ளைக்கு நீயெஜமானனென்றுசொல்லுகிறாயாவென்று சொல்லஅதைக் கேட்டுஇவளுக்குநாம்நல்லவார்த்தைசொல்லி நன்மைபண்ணிக்கொள்ளவேண்டுமில்லாவிட்டால்இவள்நம்மைகொஞ்சத்திலே விடமாட்டாள் நமதுபேருக்கு அபகீர்த்திகொண்டு வந்து விடுவாளென்று நிச்சயம்பண்ணிக்கொண்டிருக்குமணிகாந்தன் ஹேகுணாயாய் நீ மஹாபுண்ணியசாலி உன்னுடைய மனது நிர்மலமானபடியினாலே எனக்குப்பரமபிரேமளானநாமதேவன் உனக்குக் குழந்தையானான். எப்படிப் பிரம தேவருக்கும் சாவித்திரிக்கும் பரமபாகவதோத்தமரான நாரதர்பிறந்தாரோ அப்படித்தாமாஜிக்கு முனக்கும் நாமதேவன் ஜகத்தோத்தாரணம்பண்ண அவதரித்தான் - உன்னுடைய பாக்கியத்துக்கு அளவில்லை - ஸ்தன்னியம்கொடுத்து நாமதேவனை

அணைத்துவளர்த்தவளாகிய உன்னுடைய மேன்மை யெவராலும் வர்ணித்து முடியாது என்று அகிலாண்டகோடி பிரமாண்டநாயகன் சொன்னதைக்கேட்டுக்குணுபாய் ஓ பிரபு-சருவலோகரக்ஷகா - சருவஜகன்மோஹனு - சருவசாக்ஷி - சருவஜீவதயாபரா - சருவவியாபகா - என்னுடைய நாமதேவனை யெனக்குக்கொடுத்துப்பிறகு தேவரீரிடத்தில் என்சித்தம் அத்திபந்தப்பிரீதியாகத்தியானிக்கவும் ஸ்மரிக்கவும் கிருபை பண்ணவேண்டுமென்று பிரார்த்தித்தாள். அவளைக்கருணாசாகரன் கடைக்கண்பார்வையாற்பார்த்து நாமதேவரைத்திரும்பவும்சமுசாரசாகரத்தில் பிரவேசிக்கப்பண்ண மனதில்லாமல் தத்தளித்துக்கொண்டு சும்மாவிருந்துவிட்டார். அந்தக்குறிப்பை அறிந்து பீமராஜாகுமாரத்தியான ருக்குமணிதேவியினிடத்திலே தன்னுடைய குறையைச்சொல்லப் போனபொழுது அவ்விடத்திலே சத்தியபாமையும் காளிந்திதேவியும் ருக்குமணிதேவியுமாகிய மூன்றுபேரும் உட்கார்ந்துகொண்டிருக்கையில் - குணுபாய்போய்ச்சேவித்து ஹேதாய்மார்களே என்னுடைய குறையைக்கேளுங்கள் - உங்கள் பர்த்தாவினுடைய கலியாணகுணத்தைவேதசாஸ்திரங்களும் வர்ணிக்கமாட்டாமல் மவுனமாகிவிட்டன. அவனுடைய தன்மையவ்வாறிருந்தாலும் என்னுடைய புத்திரனைத்தன்னடிமையாக்கிக்கொண்டு விதேகஸ்திதியாகப்பண்ணிவிட்டான் - ஒருதாய்க்கொருபிள்ளையான அவனைச்சமுசாரத்திலிருந்து கெடுத்தான் - இவன்மஹாகபடநாடக சூத்திரதாரி - இவனுடைய நடத்தை உங்களுக்கு நன்ருய்த்தெரிந்திருக்குமே - ஜனகாதிரிஷிகளுக்கும் யோகிகளுக்கும் கொஞ்சம்தெரியும்- இவன்எங்கள் வீட்டில் நாங்கள் தரித்திரதிசைஅனுபவிக்க ஏக புத்திரனுனநாமதேவனைத் தன்னடிமையாக்கிக்கொண்டு எங்களைப் பரதேசிகளாக்கிவிட்டான். இனிமேல் தாக்ஷணியம்பார்க்கமாட்டேன் நாலுபேர்முன்னே யிழுத்துக்கொண்டுபோவேன் உங்களுக்குத்தெரிந்திருக்கட்டும் நீங்களாகிலுமவனுக்குத்தெரியச்சொல்லி யெங்கள்பேரில் கிருபைபண்ணச்செய்யுங்கள். இவனைப்போலே தெய்வமிர்தமூன்றுலோகத்திலும் கிடையாது. நானென்ன செய்வேனென்றுசொன்னுள். பிறகு நாமதேவனிடத்தில் வந்து ஏ நாமதேவா ஏன் இவ்விடத்திலிருக்கிறுய் இந்த இருடிகேசன் பார்த்துக் கொண்டிருக்கையில் தானே உன்னையிழுத்துக்கொண்டு போகிறேன். இவன் மகாஜாலக்காரன் - துரியோதனகுலநாசன் - ஸ்திரீசோரன் - ஜகன் மோஹனன் - செங்கல்லின்பேரிலே இடுப்பிலேகையைவைத்துக்கொண்டு நின்றுஜகத்திலிருக்கிறபிராணிகளுடைய சித்தத்தையெல்லாம்ஆக்கிரஷித்துக்கொள்ளுகிறவன். இவனுக்குப்புண்டலீகன்இடங்கொடுத்தானென்றுசொல்லிவிட்டுச் சுவாமியைப்பார்த்து உனக்கு இன்னமும் கருணை வரவில்லையோவென்று கேட்டாள். அப்பொழுது பகவான் என்னன்பேரிலே நிஷ்டூரவார்த்தை

களைச்சொல்லுகிறாய்இனிச்சொல்லாதேயென்றுசொல்லிநாமதேவன் கையைப் பிடித்துஅவள்கையில் ஒப்புவித்து அழைத்துக்கொண்டு போவென்று சொன்னார். குணுபாயானவள் நாமதேவன்கையைப் பிடித்துக்கொண்டு வீட்டுக்குப்போகையில் அவனைப்பார்த்து அடா நாமதேவா இந்தப் பிரபஞ்சவாழ்க்கையைவிட்டுவிட்டுப்பண்டரிநாத னைக் கெட்டியாகப் பிடித்துகொண்டால் நாங்கள் என்னசெய்வோ மென்றுசொல்ல அவர் ஆனந்தபாஷ்பத்தோடே ஒன்றுஞ்சொல்லா மல் வீட்டுக்குவந்துசேர்ந்தார். வீட்டிலேசகலசாமான்களும் பாத்தி ரங்களுமிருக்கிறதையும் மருமகளான இராதாபாய்திவ்வியான்னங்க ளும் பதார்த்தங்களும் சமையல் பண்ணிக்கொண்டிருக்கிறதையும் பார்த்து மிகுந்த சந்தோஷமடைந்து ஜகந்நிவாசன் கிருபைபண் ணினாரென்று எண்ணிக்கொண்டிருந்தாள். நாமதேவர் இவைக ளைப்பார்த்து மனக்கலக்கமடைந்து-தூண்டிலிலகப்பட்டமீன்போலும் கண்ணியிலகப்பட்ட மிருகம்போலும் - கிரகணம் பிடித்தசூரியன் போலும் - காற்றினாலே சிதறப்பட்டமேகம்போலும் - சத்துருவினு டைய பிரபல்லியத்தைக்கேட்டு நடுங்குகிற இராஜாவைப்போலும் - தத்தளித்துத்தாயாரைப்பார்த்து இந்தச்சம்பத்து ஏது யார்கொடுத் தாரென்று கேட்க அதற்கு நானொன்றுமறியேனென்றாள். இராதா பாய் புருஷனைப்பார்த்துச் சாப்பிடவாருங்களென்று சொல்ல நாம தேவர் ஆச்சரியப்பட்டு ஏது நம்முடையஸ்திரீயானவள் இன்றைக்கு வணக்கமாய்ப்பேசுகிறாள் ஒருவேளைஇந்தவைபவத்தைப் பார்த்துச் சந்தோஷமடைந்திருக்கலாம் திரவியமிருந்தால் எல்லாரும்கொண் டாடுவார்களென்றெண்ணிக்கொண்டு இந்தச் சம்பத்துயார்கொடுத்தா ரென்றுகேட்க அவள் இவருக்குச்சொன்னால் எல்லாவற்றையும் தானம்பண்ணிவிடுவாரென்று சொல்லாமல்மவுனமாயிருந்தாள். அப் போது ஊழியக்காரியாகிய ஜனாபாய்ஓடிவந்து பண்டரிநாதனானவன் கேசவசெட்டிவேஷம்போட்டுக்கொண்டுவந்து கொடுத்தவிபரத்தை யெல்லாம் சொன்னாள். அந்தவசனத்தைநாமதேவர்கேட்டு ஆனந்த பாஷ்பத்தோடே ஹேகிருஷ்ணா-வாசுதேவா- பதிதபாவனா - நீலமேக சாமளா - பக்தபூஷணா - கருணாசாகரா - ஜகன்மோகனா - ஜனனரஹிதா - அவயவரஹிதா - அவிநாசா - மாயாதீதா - நிராமயா - நிரஞ்சனா - அனாத பந்தோ - என்அன்பானதாயே ருக்குமணிபதியே என்று ஸ்தோத் திரம்பண்ணி நான் அபேக்ஷிக்காமலும்உம்மைச்சங்கடப்படுத்தாமலு மிருக்கநீரேன் வருத்தப்பட்டீர் இதுயாருக்குஉபயோகம். சமுத்திரத் தில் வருஷம் வருஷித்தால் அச்சமுத்திரத்துக்கு என்னஉபயோக மென்று சொல்லிவிட்டு ஊரிலேயிருக்கிற பிராமணர்களையெல்லாம் அழைத்துவஸ்திரங்கள் பாத்திரங்கள் தனங்கள் முதலியவெல்லாவற் றையும் கொடுத்து விட்டு உபாதிரஹிதராய் - ஆனந்தத்தோடே பண்

டகீர்த்தனை தியானம்பண்ணிக்கொண்டிருந்தார். இந்தத்திவ்யசரித்திரமாகிய நான்காமத்தியாயம் சம்பூரணம் - ஸ்ரீவாசுதேவபரப்பிரமணேநம: ஸ்ரீகிருஷ்ணாயபரமகுருவேநம: ஸ்ரீரங்கதாமனேநம: ஸ்ரீராமச்சந்திரஜயகுருபநம:.

## ஐந்தாவது அத்தியாயம்.

# கபீர்தாசர்சரித்திரம்.

கேளுங்கள்சாதுக்களே இந்த ஐந்தாமத்தியாயத்தின் சரித்திரம் அத்தியந்த பாவனமுடையது. இனிமையில்அமிர்தத்திலும் சிறந்தது பவித்திரம் செய்வதில் கங்கையையும் இதற்கு ஒப்புச்சொல்லக் கூடாது. முன்அத்தியாயத்தில்சொன்ன அனுசந்தானங்களைக்கேட்டிருந்தாலும் நான்மறுபடியும் ஞாபகப்படுத்துகிறேன். அதாவது ஸ்ரீமந்நாராயணனுடைய ஆக்கினைப்படி சிப்பியிலே மூடப்பட்டு பீமா நதியிலே மிதந்துவந்த நாமதேவருடைய சரித்திரம் கேட்டீர்களே இப்பொழுது அவ்விதமாகவே சாக்ஷாத் ஸ்ரீசுகர்ராமநாமபஜனம்பண்ணிக்கொண்டு கங்காநதியிலே மிதந்து வருகையில் தமால்மோக்கின் என்கிற நெசவுகாரனாகிய துலுக்கன் நூல்கழுவுகிறதற்கு அங்கே வந்தான். அவன்அப்போது கங்கையில் மிதந்துவருகிற சிப்பியைப் பார்த்துஜலத்திலேயிறங்கிஅதையெடுத்துத்திறந்துபார்க்கையில்மகாதேஜசுள்ளகுழந்தையைக்கண்டு சங்குமணிகோக்கையில்முத்துமாலை அகப்பட்டதுபோலும் - யமலோகத்துக்குப்போகையில்வைகுண்டம் பிராப்தமானது போலும் - வெயிலிலே தகதகளித்துக்கொண்டு போகையில் கற்பகவிருக்ஷம் எதிரேநின்றதுபோலும் -இவ்வளவுதிவ்வியமானகுழந்தை நூல்கழுவவந்தவிடத்தில்அகப்பட்டபடியால்அளவற்றசந்தோஷத்தோடு அதைக்கையிலேந்திக்கொண்டு வேகமாய்வீட்டுக்குவந்துதன்பெண்சாதியையழைத்துஒருகுழந்தைமுப்பத்திரண்டு லக்ஷணத்தோடே அகப்பட்டது அதை நீ நன்றாய்ப்பரிபாலனம்பண்ணிக்கொண்டுவா வென்று சொல்லி அவள் கையில்கொடுத்தான். வாங்கினவுடனே இரண்டு ஸ்தனமும் பால்சுரந்து பீரிட்டடிந்தபடியால் அவள் சந்தோஷமாய்க்குழந்தைக்குப் பால்கொடுத்து வளர்த்துவந்தாள். பிள்ளையிடத்தில்இரண்டுபேரும்அத்தியந்தபிரீதியோடுஇருந்து அதற்குக்கபீரென்று பேர்வைத்தார்கள். அந்தக்குழந்தை ராமநாமத்

தையே ஸதாஜெபித்துக் கொண்டிருந்தபடியால் அதைச்சகலரும் பார்த்து ஆச்சரியப்பட்டுத் துலுக்கனுன இவனுக்குச் சாக்ஷாத்பகவத் தாஸன்வந்து பிறந்ததென்ன அதிசயமென்றுசொல்லிஇவனைஸ்தோத் திரம்பண்ணிவிட்டுப் போவார்கள். குழந்தையானது நாளுக்குநாள் வளர்ந்துபெரியவனானபொழுது கலியாணமும்பண்ணப்பட்டது. கபீர் பிரபஞ்ச வியாபாரங்களில் மனதில்லாமல் பிர்மாதிமுதல் பிபீலிகாதி பரியந்தம் சமானமாய்க்கண்டு விஷயசுகங்களைவிட்டு ஸ்ரீஇராமநாமத் தையே பஜனம்பண்ணிக்கொண்டிருப்பார். இந்நடத்தைபிரபஞ்சத் தில் உள்ளோர்க்கு ஒவ்வாமையால் அவரைப் பயித்தியகாரனென்று சிரிப்பார்கள். தாய்தந்தையர் அவரைமிகுந்த அன்போடு வளர்த்து வந்தபடியால் அவர்கள்மட்டும் இவரைமதித்துஉபசரித்துவந்தார்கள். அப்படியிருக்கையில் கபீர்தானே குடும்பத்தைத்தாங்கும்படியான காலநேரிட்டது. அப்பொழுதும் கபீர் அக்கினியும் ஜலமும் - தாசியும் பதிவிரதையும் - உதாரியும்லோபியும்- பண்டிதனும் பாமரனும்- ராகு வும் சந்திரனும் - விளக்கும்பதங்கமும் - ஸ்ரீகிருஷ்ணனும்சிசுபாலனும் - இராமசந்திரனும் ராவணனும் - அமிர்தமும் விஷமும்- கூடியிராதது போலப் பிரபஞ்சத்திற்கும் பாரமார்த்திகத்துக்கும் வைரமாதலால் பாரமார்த்திகதிசையில் அதிக உன்னதராகிப் பிரபஞ்சத்தை மறந்து ஏழைபோலே திரிந்தார். இதைப்பார்த்துத்தாயானவள் என்னருமை மகனே நீ யிப்படிப்பிரபஞ்சவிவகாரத்தில் மனசில்லாமல் திரிந்தால் சமுசாரமெப்படிநடக்குமென்று நானுவிதமாய்ச்சொல்லி நெசவை நெய்யச்சொல்லி உட்காரவைத்தாள். கபீரானவர் கண்ணைமேல்நோக் கிக்கொண்டு ஸ்ரீஇராமசந்திரனுடைய ரூபத்தில் சித்தத்தைவைத்து விட்டுத்திடஸ்த்தமாயிருந்துவிட்டார். தாயானவள் வந்துபார்த்துத் தட்டி ஜாக்கிரதைசெய்யப்பண்ணி அறுவலைப் பார்க்கச்சொல்லிவிட்டுப் போவாள் - கொஞ்சம்நெய்வார் - மறுபடி தியானயரனுயிருந்து விடு வார். இப்படியிருக்கிற ஸ்திதியை ஜெகந்நிவாஸனை ஸ்ரீஇராமசந் திரன் கண்டு நெசவுநெய்ய உட்கார்ந்து பிறகுஅதைவிட்டுவிட்டுத் தன் னையே தியானம்பண்ணிக்கொண்டிருந்த கபீரிடத்தில்வந்து அந்த நெசவைத் தானே யெடுத்துக்கொண்டு நெய்யத்தலைப்பட்டார். மஹா யோகிகளுடைய ஹிருதயபத்மாசனத்துக்குத்தூலபனை ஸ்ரீஜானகி ரமணன் நெய்துகொண்டிருக்கிறபோது கபீரானவர் ஜாக்கிரதைக்கு வந்து கொஞ்சம் நெய்வார் அப்பொழுது தாசரதிமறைந்திருப்பார். கபீர் மறுபடி ஞானபரனுகிவிடுவார். அப்போதுரகுவீரன்உட்கார்ந்து நெய்வார். இந்தப்படியிருவரும்கூடி நெய்தசல்லாவைக் கபீர்மடித்துத் தாயாரிடத்தில் கொண்டுபோய்க்கொடுக்கத் தாயானவள்கடைக்குப் போய் விற்றுக்கொண்டுவாவென்று அனுப்பினுள். கபீரானவர்கடைத் தெருவிலேபோய் எதிரே சல்லாவைவைத்துக்கொண்டு உட்கார்ந்து

ஹிருதயகமலத்தில் ஸ்ரீ இராமனைத் தியானம்பண்ணிக்கொண்டு வாக்கிலே ராமநாமபஜனம்பண்ணிக்கொண்டு - சல்லாவிற்கவந்தோமென்கிற ஞாபகமில்லாமல் விதேகஸ்திதியானார். போகிறவர்களும்வருகிறவர்களுமானவர்த்தகர்கள் இந்தச்சல்லாவைப்பார்த்துஇதுவிலையுயர்ந்ததாயிருக்கிறது நமக்கு இது வாங்குவதற்கு வேண்டிய அத்தனை திரவியமில்லையேயென்றுநினைத்துக்கொண்டுவிலைகூடக்கேட்காமல்போய்விட்டார்கள் - மற்ற எல்லாரும் கிட்டவந்து பார்க்கிறதற்குமஞ்சினார்கள். ஏனென்றால் எவரெவர்களுக்கு எவ்வளவு சக்தியோ அதற்கு இரட்டிப்புவிலையாகத் தோற்றிற்று. ஆதலால் ஒருவரும் வாங்காமல் அஸ்தமனமாகிக் கடைத்தெரு முழுதும் கட்டப்பட்டது. கபீரானவர். கண்ணைத்திறந்துபார்த்து எல்லாரும்போய்விட்டார்களே-நம்முடைய சல்லாவிலையாகவில்லையே - வீட்டுக்குப்போனால் தாயார் அடிப்பாளேயென்று மிகப்பயந்து - அவ்விடத்திலேயேயிருந்த ஒரு பாழுங்குச்சுக்குள்ளேபோய் ராமநாமஸ்மரணைபண்ணிக்கொண்டிருந்து விட்டார். இப்படியிருக்கையிலிவருடைய நிஷ்டையை ஜகந்நிவாஸன்பார்க்கிறதற்காக ஒரு விருத்தபிராமணனாய் வஸ்திரஹீனமாய் நடுக்கலோடு அவ்விடத்திற்கு வந்துபிறகுகபீருடையஉதாரத்துவத்தைச்சோதிக்கவேண்டிஎளியவார்த்தையாய்நான்தீனன்-அநாதன்-வஸ்திரமில்லாமல் குளிரினால் நிரம்பவும் கஷ்டப்படுகிறேன் ஏதாகிலும் ஒருவஸ்திரம் கொடுக்கவேண்டுமென்று சொல்லக்கேட்டுக் கபீரானவர் சல்லாவையெடுத்துப் பாதிகிழித்துப் பிராமணன்கையில் கொடுத்து விட்டுத் தியானபரராயிருந்துவிட்டார். பிராமணரூபமாய்வந்த அந்தச்சக்கரபாணியானவர்சல்லாவைவாங்கிக்கொண்டு வெளியிலேபோய்ச்சாம்பூநதத்தங்கத்தையும் குற்றமற்றவச்சிரமாணிக்கங்களையும் பரீக்ஷிக்கிறதுபோல் கபீருடையசத்துவத்தைப்பரீக்ஷைபார்க்கிறதற்கு மறுபடி மலங்குப்பக்கிரிவேஷமெடுத்துக்கொண்டுவந்துபக்கிரிகளுடையகுரல்போல சப்தம்போட்டுநின்றுகொண்டு கபீரைப்பார்த்து அல்லாவானவர் நிராகாரமாய் நிர்க்குணமாயிருப்பது நீ யறியாமல்அவரைவிட்டுவிட்டு ராமநாமபஜனம்பண்ணிக்கொண்டிருக்கிறாயேயென்றுசொல்ல அவ்வார்த்தையைக்கேட்டுக் கபீர் ஓ சுவாமி ஆகாரமும் நிராகாரமும் அபின்னமாயிருப்பதேயொழிய வேறில்லை உருக்கினநெய்க்கும் உறைந்தநெய்க்கும் நாமதேயமொன்றாயிருப்பதுபோலும்சுவர்ணமே பூஷணமாய்ப்பரிணமித்ததுபோலும்அவிநாசமும் அரூபமும்ஜெகந்நிவாஸனுடையசொரூபம்தான் ஆனால் பக்தர்களுடையகாரியார்த்தமாய் அவரேசகளமாய்ச்சிலரூபமெடுத்தனரென்றுசொன்னார். அச்சொல்லை பக்கிரிகேட்டு நல்லது நான் குளிரால்மிக வருந்துகிறேன்ஏதாகிலும் வஸ்திரமிருந்தால் கொடுமென்றுகேட்டார். கபீரானவர் அந்தப்பாதிச் சல்லாவையும் பக்கிரிக்குக்கொடுத்துவிட்டு வருஷகாலம்போன ஆகா

சம்போலும் புடம்போட்ட தங்கம்போலும் ராகுவினல் விடுபட்டச
திரன்போலும் சல்லாவிலே போகாமலிருந்த விசனம்போய் உபா
யின்றி நிர்மலமாய் ஸ்ரீராமனைத்தியானம் பண்ணிக்கொண்டிருந்தார்
ஜகந்நிவாஸன் இப்படிச்சல்லாவையும் வாங்கிவிட்டுப் பிராமணரு
மாய்க் கபீர்வீட்டுக்குப்போய் அவருடையதாயாரிடத்தில் அம்மாஉ
னுடைய குமாரனைகபீர்சல்லாவைக்கிரயம்பண்ணச்சந்தைக்குவந்த
எதிரேவைத்துக்கொண்டு சீதாராமனைத் தியானம் பண்ணிக்கொண்டு
சல்லாவைவாங்குகிறதற்குஅனேகம்பேர்வந்து விலேகேட்டபொழுத
விலையைச்சொல்லி வியாபாரம்பண்ணுமல்மவுனமாயிருந்தார்.அதைப்
பார்த்துவிட்டுஅவர்களெல்லாரும்போய்விட்டார்கள்-சாயங்காலமாகிச்
சந்தையுங்கலேந்தது. உன்மகன் ஒருபிராமணனை அழைத்து அவனு
குப் பாதிச்சல்லாவையும் பின்னையொரு பக்கிரிக்குப் பாதிச்சல்லா
வையும் கொடுத்துவிட்டு அவ்விடத்திலே ஒரு குடிசையிலேபோய்
உட்கார்ந்துகொண்டு சீதாராமனைத் தியானம் பண்ணிக்கொண்டிருக்கி
ருன்-நானிவைகளைத் தூரமாயிருந்து பார்த்துக்கொண்டிருந்தேன்.
ரம்பவும் விசனமாயிற்று எப்படியாகிலும்நீங்கள் சுகமாயிருக்கவேண்
டுமென்பதே என்னுடையகருத்து என்றுசொல்ல வதைக்கபீருடைய
தாயானவள் கேட்டு மகாகோபத்தை யடைந்து நல்லதய்யா இங்கே
வந்தவுடனே அவனை நன்ருய்ச்சிக்ஷிக்கிறேன்.இப்படியானுலெப்படிச்
சமுசாரம்நடக்கும் நீர் மஹாதயாளுவானபடியுைலே இவர்கள்ஏழைகள்
இவன் இப்படிப்பயித்தியகாரத்தன்மைபண்ணுகிருனேயென்றுபச்சா
தாபத்தோடு வந்துசொன்னீரென்றுசொல்ல - அம்மாஅவனிப்பொழு
திங்கே வருகிறவனுய்க் காணேன் உனக்குப் பயந்து ஒருகுடிசையில்
ஒளித்துக்கொண்டிருக்கிருன்அவனைக்காட்டுகிறேன்வாவென்று கிழவி
யின்கையைப்பிடித்துஅழைத்துக்கொண்டுவந்து கபீரிருக்கிறகுடிசை
யைக்காட்டி விட்டு ஜகந்நிவாஸன் வெளியிலே நின்று வேடிக்கைப்
பார்த்துக் கொண்டிருந்தார். அப்பொழுது நாரதர் உபதேசம்பெற்ற
வால்மீகிரிஷி ராமநாமபஜனம்பண்ணினதுபோலும் - அசோகவனத்
தில் ஜெகன்மாதாவான சீதைஅவர்வடிவத்தைத் தியானம்பண்ணின
துபோலும் - சகலவிஷய சுகங்களையும் விட்டு ராமநாமபஜனம் பண்
ணிக்கொண்டிருக்கிற கபீரைத்தாயானவள்வந்துபார்த்து அடேகபீர்
சல்லாவைவிற்கக்கொண்டுவந்தாயே அது எங்கே உள்ளதைச்சொல்
இல்லாவிட்டால் உன்னை அடிப்பேனென்றுசொன்னுள்.அவருடைய
சித்தம் ராமநாமத்தில் லயித்துப்போனபடியினுலே இவள்வந்ததும்
சொன்னதும் தெரியாமல் தியானத்திலேயிருக்க அப்பொழுதுதாயா
னவள் இதுஎன்னடாவேஷம்போட்டுக் கொண்டிருக்கிருய் இப்படிப்
பேசாமலிருந்ததினுலே உன்னை அடிக்காமல் விடுவேனேவென்று
சொல்ல - வாசலிலேநிற்கிறவைகுண்டநாதன் அம்மா நீ வாக்கினுலே

மாத்திரம் கபீரேமாய்ப்பேசுகிறதேயல்லாமல்மனசில்நிரம்பவும்பிள்ளை யினிடத்திலே யன்பும் ஆசையுமாயிருக்கிறாய். இப்படிக் கேட்டால் அவன் வழியோடு சொல்லுவானா நல்ல கழியாயெடுத்துக்கொண்டு அடித்தால்அப்பொழுதுதான் அவன்வழிக்கு வருவானென்றுசொல்லி ஒரு கழியுமெடுத்துக்கொடுத்தார். கிழவியானவள் அதைக் கையிலே வாங்கிக்கொண்டு கபீருடைய முதுகிலேயடித்தாள். கபீர் அந்த அடியும்தெரியாமல் தியானபரனாயிருந்துவிட்டார். ஆனால் உடனேவெளியிலேநின்றுகொண்டிருக்கிற நாதனுடையமுதுகிலே அந்தஅடிவிழ அவரதைப் பொறுக்கமாட்டாமல் அம்மா நில்லுநில்லு அடித்தது போதும் போதுமென்றுசொல்லிவேரிலே கோடாலியினாலே வெட்டினால் மரமுழுதுநடுங்குதல்போலவும் - பிள்ளையைப்பிறர் தண்டிக்கத்தாயானவள் தத்தளித்தல்போலவும் - குட்டியானமான்வலையிலகப்பட்டால் தாயானது தத்தளித்தல்போலவும் - ருக்குமணி சாந்தரானவர் தத்தளித்துக் கொண்டுபோய்அடியைநிறுத்திவிட்டுஇதுஎன்ன ஆச்சரியம்நம்முடையகபடம்நமக்கே தீமையாய்முடிநதது. வாமனாவதாரமெடுத்துக் கபடமாய் மூன்றடி மண் கேட்டு எல்லா வற்றையும் வாங்கிக்கொண்டு கடைசியிலேஅவனுடைய துவாரபாலகனாக இருக்கத்தக்கதாயானதுபோலநமக்கே துன்பமாகமுடிந்தது. நம்முடைய பக்தர்களுக்குச் சங்கை யில்லை - அவர்களொருவரைத் தொட்டும் நாமிப்படி அடிபட்டதில்லை. இந்தக்கபீருடையபக்தி அத்தியந்தஆச்சரியமானது. இவனுக்கு நாம் ஈடுபட்டுப் போனோமென்று எண்ணி உடனே சாக்ஷாத்கோதண்டதீக்ஷா குரு அவசரமாகதரிசனம் கொடுத்தார். அப்பொழுது தாளிதளசாமளராயும் - இரத்தினகிரீடகுண்டல ஹாரகேயூராதி திவ்யப்பிரகாச பூஷணதாரியாய் ஆஜானு பாகுவாய்க் கோதண்டதாரியாய் - விசாலமானநேத்திரத்தையுடையவராய்க்கருணாகடாக்ஷராய் பீதாம்பரதாரியாய்க் கோடிசூரியப்பிரகாசம்போல நிற்கிற பகவானைக் கபீரானவர் கண்டெழுந்திருந்து ஸ்தோத்திரம் பண்ணவாயெழாமல் கட்கதகண்டமாய் ஆனந்தபாஷ்பத்தோடுதிரிலோகபாவனமாகிய கங்கை உத்பன்னமான திவ்ய திருவடிகளிலே விழுந்து கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டதை ஸ்ரீவைகுண்டநாதன் பார்த்து ஹேபக்தசிரோமணியே உன்னைப்போலேயெனக்குப்பிரியன் திரிலோகத்திலும்கிடையாது. நான் உன்னைவிட்டுப் பிரியமாட்டேன் என்னுடைய ஹிருதயத்திலுன்னைச் சதாவைப்பேனென்று அருளிச்செய்துவிட்டுக் கபீருடைய தாயாரை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு தாயேஉன்னுடைய பாக்கியத்தை யென்னவென்று சொல்லப் போகிறேன் நீயே மகாபாக்கியசாலி நீயும் இனி ஸ்ரீராமநாமபஜனம் பண்ணென்றுகிருபைசெய்துவிட்டு அதிரிசியமானார். உடனேகபீருடைய தாயானவள் ஆனந்தபரிதையாய்த் திடவசித்தமாய் நின்று கபீரை

எடுத்துமார்போடு அணைத்துக்கட்டிக்கொண்டு உச்சிமுகந்து குழந்தாய் என்பாக்கியமே பாக்கியம். உன்னிமித்தம் ஸ்ரீ இராமச்சந்திரனை அகிலாண்ட நாயகன் தேவாதிதேவன் இந்திராதிதேவர்கள் ரிஷிகள் முனிகளுக்கும் மஹா துர்லபமானவன் தரிசனமெனக்குக்கிடைத்ததென்று சொல்லி அவளை அழைத்துக்கொண்டு ஆனந்தமாய் வீடுவந்துசேர்ந்தாள். இந்த ஆச்சரியமுள்ள அத்தியாயத்தைச்சிரவணம்பண்ணினமாத்திரத்திலே ஸ்ரீவைகுண்டாதிபதியினுடைய கிருபைக்குப்பாத்திராய் ஜனனமரணப்பிரவாகத்தில் நின்று விடுபட்டுநித்தியசூரிகளாவார்கள். இந்த அத்தியாயம்சம்பூரணம். ஸ்ரீவாசுதேவஜயஜயனேநம: ஸ்ரீகிருஷ்ணயபரமகுருவேநம: ஸ்ரீரங்கதாமனேநம: ஸ்ரீ இராமச்சந்திரஜயஜயனேநம:.



## ஆறாவது அத்தியாயம்.



# கபீர்தாசர்சரித்திரம்.



ஸ்ரீஇராமச்சந்திர பரப்பிர்மணேநம: பாக்கியசாலியானசாதுக்களே இந்த ஆறாவது அத்தியாயமென்கிறபக்தசரித்திரமாகிய அமூல்லியரத்தினத்தை வசனமென்கிற தங்கத்தகட்டிலேபதித்துக்குண்டலமாகப்பண்ணி சிரவணம்பண்ணுகிறவர்கள் காதிலேபோடுவேனானால் அதனாலே அவர்களுக்கு ஞான சித்தியுண்டாம். அன்றியும் ருக்குமணிரமணன் அக்ஷயமான பதத்தைக்கொடுப்பான். ஆனபடியினாலே நான் அப்படிப்பட்ட பக்தர்களுடைய சரித்திரத்தை வர்ணிக்கவிச்சைப்பட்டுச்சொல்லுகிறேன். கேளுங்கள் முன்அத்தியாயத்தில் கபீருக்கும் அவருடையதாயாருக்கும் ஜானகிரமணன்தரிசனம்கொடுத்து மறைந்தபிற்பாடுகபீரும்அவருடையதாயாரும்வீட்டுக்குவந்து பகவத்தியானம் பண்ணிக்கொண்டிருந்ததன்றி ராஜாவினால் மதிக்கப்பட்ட ஒருவனை மந்திரிசாமந்தர்கள் மானிப்பது போலவும் - சற்குருவினுடைய கிருபையடைந்தவனை ஜெனனமரணமுபாதிக்காதது போலவும் - அயோத்தியாதிபதியினுடையகிருபைஉண்டானபிறகு கபீருடையதாயார் குமாரனை உபத்திரவப்படுத்துகிறதைவிட்டுச் சித்தசாந்தியாகவிருந்தாள். அவருடையஸ்திரீயானவள்பதிவிரதாதர்மத்தில் அனுசூயையையொத்தவள். அவரும்அவர்மனைவியும் அவர்தாயாருமாகிய மூவரும்சுடரும்ஒளியும்- சொல்லும்பொருளும்-சர்க்கரையும் தித்திப்

பும் பிரிக்கப்படாதிருப்பதுபோலஏகசித்தமாய்ச்சமாதானமாய்ப்பக்தி ஞானவைராக்கியசம்பன்னர்களாயிருக்கிறகாளேயில்கபீருடைய ஸ்திரீயானவள் கர்ப்பமாகி ஒரு புத்திரனைப்பெற வவனுக்குப்பன்னிரண்டாநாளில் கமால் என்று நாமகரணம் பண்ணினார்கள். பிள்ளையும் நாளுக்கு நாள்வளர்ந்து ஞானவைராக்கிய சம்பன்னனாய்த் தகப்பனுடைய கீர்த்தனங்களைக்கேட்டுத் தானும் ராமநாமஸ்மரணைபண்ணுவான். அவன் ஆறும்வயதில் தீர்த்தயாத்திரைக்குப் போகவேண்டுமென்று அபேக்ஷையாகித்தகப்பனை உத்தரவுகேட்கிறபோது-பூமண்டலத்தை ஜயித்துக்கொண்டு வருகிறேனென்றுஉத்தரவுகேட்கின்ற பிள்ளையைக்கண்ட மகாராசனைப்போலவும் -சந்திரனுடையபூரணகலையைப்பார்த்த சமுத்திரம்போலவும் - வைராக்கிய சீலனாய்த்தீர்த்த யாத்திரைப்போகிறேனென்றுசொன்னபிள்ளையைக்கண்டுகபீர்சந்தோஷத்தை அடைந்து கமாலுக்கு உத்தரவுகொடுத்தார். கமால் உத்தரவைப்பெற்றுக்கொண்டு வெளியிலே புறப்பட்டு விஷயவாசனைகளை விட்டு ராமநாமஸ்மரணைபண்ணிக்கொண்டுபோகிறபொழுது வழியில் கண்டபக்தர்களாகிய சகலரும் தங்கள் தங்கள் ஜாகையில்அழைத்துக் கொண்டுபோய்ஹரிகீர்த்தனம்பண்ணுவித்துபோஜனாதிஉபசாரம்செய்வார்கள். இவன்இரவும்பகலும் நாரதபகவானைப்போல ராமநாமஸ்மரணைபண்ணிக்கொண்டு துவாரகைக்குவந்துசேர்ந்து கங்காநதியில் மஹாசிரத்தையுடனே ஸ்நானம்பண்ணிஹேகங்காதேவியென்றுடைய பாபங்களை நிவாரணம்பண்ணிஜனனமரணமில்லாமல் கிருபைபண்ணவேண்டுமென்று ஸ்தோத்திரம்பண்ணிவிட்டுத்துவாதசவிடங்களிலே கோபிசந்தனம்தரித்துக் கழுத்திலே துளசிமாலைபோட்டுக்கொண்டு கையிலேஜபமாலைபிடித்துக்கொண்டுபக்தியோடுகோவிலுக்குப்போய் ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமாவைத் தரிசனம்பண்ணிவிட்டு - அவ்விடத்திலேதானே நாலுமாத பரியந்தமிருந்து ஸத்சாவகாசம்பண்ணிக் கொண்டிருந்தார். பிறகுஅவ்விடத்திலிருந்து புறப்பட்டுப்பிமாதீரத்தில்திரகோடிதீர்த்தத்துக்குவந்துஸ்நானம்பண்ணி-அவ்விடத்திலிருக்கிறபகவத்பக்தர்களோடுகீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கிறபோது- விஷ்ணுதாசனென்கிறஒருவர்த்தகன் கமால் பக்தரைத்தன்னுடைய வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய்ப்பூஜைபண்ணிஅவ்விடத்திலே கீர்த்தனம்பண்ணுவிக்கிறபோது-சகலரும்ஆச்சரியமடைந்துசந்தோஷமானார்கள். இந்தவர்த்தகனானவன் இவருக்கு நாம் என்னகொடுக்கலாம் இவர் நிரபேக்ஷையராயிருக்கிறாரேயென்றுயோசித்துத்தன்னுடையபொக்கிஷத்திலே விலையுயர்ந்ததும்தீபம்போலேபிரகாசிக்கின்றதுமான இரத்தினம் ஒன்றை யெடுத்துக்கொண்டுவந்து பாதத்தில் வைத்துச்சுவாமி இந்தவயிரத்தைத்தலைமாட்டில் வைத்துப்படுத்துக் கொண்டால் தீபம்வேண்டியதில்லை அவ்வளவுஒளியுள்ளசிறந்ததாகை

யால் தயவுபண்ணி இதைமட்டுமேர்வது அங்கோரம்பண்ணுமென்று நிரம்பப்பிரார்த்தித்தான். அதற்குக்கமாலானவர் இந்தவச்சிரத்தை நான்கொண்டுபோனால் என்பிதாகபீர் என்னைக்கோபிப்பார். அன்றியும் அன்னத்தைப்பசித்தவர்களுக்குக் கொடுப்பதுபோல இதைவித்துவாமிசர்களுக்குக்கொடுத்தால் கீர்த்தியுண்டாகும். பாகவதோத்தமர்களுக்குஒன்றிலேயுமாசையிராது. அன்னத்தைப் பசியில்லாதவனுக்குக் கொடுத்தால் வீணாவதுபோல விருப்பமில்லாத எனக்கு வயிரம் வீணாகும் வேண்டியதில்லையென்று சொன்னவசனத்தைக்கேட்டுவிசனமாய் உபாயமாய் வஸ்திரத்தின் முன்முனையிலே அவருக்குத்தெரியாமல் அதைமுடிந்துவிட்டான். பிறகு கமாலானவர்வழியிலே வரும்போது முடிச்சைஅவிழ்த்துப்பார்த்து வர்த்தகன் அன்பினாலிப்படிச்செய்தான் ஆதலால் அய்யாவினிடத்தில்கொண்டுபோய் வைத்துவிடுவோமென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு வீட்டுக்குவந்து தகப்பனாராகிய கபீருடைய திருவடிகளிலே சாஷ்டாங்கமாகச்சேவித்து வயிரத்தையுமெடுத்துமுன்னேவைத்து நடந்தசங்கதிகளைச்சொன்னார். கபீரானவர் இந்த வார்த்தையைக்கேட்டு மஹாவியாகூலத்தை யடைந்து பெருங்குரலோடுஅழத்தலைப்பட்டார். அப்போது அவருடையஸ்திரீயானவள் ஓடிவந்து சாஷ்டாங்கமாகச்சேவித்துச் சுவாமியிப்படித்தாம்விசனப்படக்காரணமென்னவென்றுகேட்கப் - பிள்ளையினுடையமுகத்தைபாராமல் திரும்பிப் பெண்சாதியைப்பார்த்துப் பிள்ளையால் நம்முடையவமிசம் முழுகிப்போமென்று தோன்றுகிறது - இவன்சத்தியனானால்ராமநாமத்தைவிற்று ரத்தினத்தைவாங்கிக்கொண்டு வருவானா - கஸ்தூரியைக் கடைத்தெருவிலே விற்றுவிட்டுச் சாம்பலைக்கட்டிக்கொண்டுவந்தது போலும் - மஹாத்துமாக்களைத்துரத்திவிட்டு வீட்டிலே திருடனைக் கொண்டுவந்து வைத்துக்கொண்டதுபோலும் - விஷ்ணு பூஜையைவிட்டு விட்டுவேதாளபூஜையைப்பண்ணுவதுபோலும் - இந்திரன்குதிரையைக் கொடுத்துவிட்டு வண்ணான் கழுதையை வாங்கிக்கொண்டு வந்தது போலும் - அமிர்தத்தைகொடுத்துவிட்டு விஷத்தை வாங்கிக்கொண்டு வந்ததுபோலும் - இந்தக்கமாலானவன் ராமநாமத்தைக்கிரயம்பண்ணி விட்டு வயிரத்தைக்கொண்டுவந்தானென்று எனக்கு மிகுதியும்விசனமாயிருக்கிறதென்று சொல்லிவிட்டு மூர்ச்சையாய்விழுந்தார். இந்த வார்த்தைகளைக் கமால்கேட்டு அந்த வயிரத்தையெடுத்துக்கொண்டு போய் அந்த வர்த்தகனண்டையில் கொடுத்துவிட்டு வீட்டுக்குவந்து தகப்பனாருக்குச் சாஷ்டாங்கமாய்ச்சேவித்து நின்றார். அப்பொழுது கபீர் சிஷனுக்கு வைராக்கியம்வரச்சற்குருசந்தோஷத்தை அடைவது போலவும் - ஆரோக்கியமானதன் குழந்தையைப்பார்த்துமாதாபிதாக்கள் சந்தோஷத்தை அடைவதுபோலவும் - சந்தோஷத்தை யடைந்து பிள்ளையை [illegible]

இப்படி அவர்கள் ராமநாமபஜனம்பண்ணிக்கொண்டிருக்கிறநாளை யில் ஒருநாள் தீர்த்தயாத்திரைக்குப்போகிற பகவத்பக்தர்கள் கபீருடைய வீட்டுக்கு ராத்திரியேழரைநாழிகைக்குவந்தார்கள். அவர்களைக் கபீர் எதிர்கொண்டுபோய்ச்சேவித்து உபசாரமாயழைத்துக்கொண்டு வந்து ஆசனமும்கொடுத்து உட்காரவைத்ததன்மேல் கபீர் அவர்பெண்சாதி பிள்ளையாகிய மூவரும் சனகாதியர்களைப்பார்த்து இந்திரன் சந்தோஷமடைவதுபோலவும் - வெகுநாள் வருஷமில்லாமலிருந்து வருஷித்தமழையைக்கண்டு ஜனங்கள் சந்தோஷமடைவதுபோலவும் - சந்தோஷமடைந்தார்கள். பிறகு ஸ்திரீயைப்பார்த்துக் கபீரானவர் இந்தப் பகவத்பக்தர்களான பாக்கியசாலிகள் நம்முடைய புண்ணிய வசத்தினாலே நம்முடையபகிரஹத்துக்குவந்திருக்கிறார்கள். அவர்களுக்குப்போஜனம்பண்ணுவிக்கவேண்டுமென்றுசொல்லஸ்திரீயானவள் கணவனைப் பார்த்து ஓ சுவாமிநான்என்னசெய்வேன்வீட்டிலேஒருசாமானுமில்லை உறவினர் யாரைப்போய்க்கேட்டாலும் நாம்முன்கொடுக்கவேண்டிய வைகளைக்கொடுத்துப் பின்கேளாதபடியினாலே கொடுக்கவுமாட்டார்கள்- மஹாத்துமாக்களை உபவாசமாய்ப்போடுகிறதைப்பார்க்கிலும்நாம பிராணனைவிடுகிறது நல்லதென்று சொன்னாள். அந்த வசனத்தைக் கேட்டுத்தகப்பனும்பிள்ளையும் யோசனைபண்ணிக்கடையிலேபோய்த் திருடிக்கொண்டுவந்தாகிலும் மஹாத்துமாக்களுக்கு அன்னம்போடவேண்டுமென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு ஆயுதபாணிகளாய்க் கடைத்தெருவிலேவந்துஒருகடையிலேகன்னமிட்டுஉள்ளேகமால்போய் அரிசிபருப்புமுதலான சாப்பாட்டுக்குவேண்டிய வைகளை யெடுத்து வெளியில்நிற்கிற தகப்பனிடத்தில்கொடுத்துவிட்டு நாம்இப்பொழுது கன்னக்கோல்வைத்து உள்ளேவந்து நமக்குத்தேவையான அரிசிபருப்பு முதலானவைகளை யெடுத்துக்கொண்டோம். இனி நாமிந்தக் கடைக்காரனை யெழுப்பிச்சொல்லித்தானம்பண்ணிவிட்டுப்போவோமில்லாவிட்டால்பின்னையுஞ்சிலதுஷ்டர்கள்இந்தவழியாகவந்துஇந்தவியாபாரித்தகனுடையசம்பத்துமுழுமையும் கொள்ளையடித்துக் கொண்டுபோய் விடுவார்கள். அப்பொழுது இவன் சகலத்தையும் கொள்ளைகொடுத்துவிட்டு விசனமென்கிறமகாஅக்கினிக்கு இரையாவான். அப்படிப்பட்ட தோஷத்துக்கு நாம் ஏதுவாவோமென்றுயோசித்து அந்தக்கடைக்காரனைத்தட்டி எழுப்பிவிட்டுவந்ததுவாரவழியில் நுழைந்தார். அந்தவர்த்தகன் உடனே ஓடிவந்து கமால்காலைக்கெட்டியாய்ப்பிடித்துக்கொண்டான். கமாலுக்குஇடுப்புவரையில் வெளியிலுமற்றவையுள்ளேயுமிருக்கின்றன. அப்பொழுது கமால் தகப்பனைப்பார்த்து மெதுவாய் ஓஅய்யா மானானது வேட்டைக்காரன்கையில் அகப்பட்டதுபோலும்- பக்ஷிகள் கண்ணியில்சிக்கினதுபோலும் - நான் அகப்பட்டுக்கொண்டேன். இவன்என்னைப் பிடித்துக்கட்டிப்பலரும்அறியும்படியாகராஜா

வுக்குத்தெரிவித்து ஆக்கினைபண்ணச்சொல்லுவான். அப்பொழுது நம்மைஉலகத்தார்இவர்கள் திருடர்கள்கபடவேஷம்போட்டுக்கொண்டு ராமநாமபஜனம் பண்ணுகிறார்களென்று நானாவிதமாய்ச்சொல்லுவார்கள். இந்தச்செய்தியை நம்முடைய வீட்டில் வந்திருக்கிறமகாத்துமாக்கள்கேட்டால் அவர்களும்நம்மைத் துஷ்டர்களென்றுஎண்ணிவிபசாரஸ்திரீயைக்கண்ட பதிவிரதையைப் போலும் பதிதர்களைக்கண்ட சாதுக்களைப்போலும் நம்முடைய கிரகத்தைவிட்டு நீங்குவார்கள் பின்புநாம் நிந்தைக்குப்பாத்திரமாவோம். ஆகையால் என்தலையை அறுத்துக்கொண்டுபோய்விடும்புத்திரவாஞ்சையைப்பாராமல்கீர்த்தியைப்பாருமென்று சொன்னவசனத்தைக் கபீர்கேட்டுமகாசந்தோஷமாய்க் கத்தியை யுருவித்தலையை யறுத்துக்கொண்டு வீட்டுக்குவந்து தன்னுடைய ஸ்திரீயின் கையிலே அரிசியும்பருப்பும்மகன்சிரசையும் கொடுத்து நடந்த சமாசாரமெல்லாம் சொன்னார். அப்பொழுது கமாலுடைய தாயானவள் கண்ணீர்பெருக என்னப்பனே சாதுக்களுடைய காரியத்துக்காகச் சிரசைக்கொடுத்தாயே நீயேநல்ல பாக்கியசாலி நீயே உபயகுல உத்தாரணம் பண்ணின புண்ணியவானென்று சொல்லி மனதைத் தைரியம் பண்ணிக்கொண்டு சித்தசாந்தியாய்ச் சமயலுக்குஆரம்பித்தாள். முன்னமே பார்வதிரமணன் சிறுத்தொண்டன்வீட்டுக்கு விருந்தினராகவந்து நரமாமிசம் சமையல் பண்ணிப் போடவேண்டுமென்று கேட்டதின்மேல் அச்சிறுத்தொண்டன் தன் புத்திரனைக்கறியாகச்சமைத்துப்போட்டான். இவர்கள் அப்படிசாதுக்கள்கேட்காமலிருக்கவும் அவர்களுடைய போஜன காரியத்துக்காகப் புத்திரன் தலையை அறுத்தார்கள். ஆகையாலிவர்களுடைய பக்திக்கும் தைரியத்துக்குப் உவமையில்லை. ஆகாசத்துக்குஆகாசமும்-கருடனுக்கு கருடனும்- கங்கைக்கு கங்கையும்- காமதேனு- கற்பகவிருக்ஷம் - அனுசூயை- சந்திரன்- பலிச்சக்கரவர்த்தி- பிரகலாதன்- ஆஞ்சநேயர்- வால்மீகர் முதலானபுண்ணியசாலிகளுக்கு அவர்களேயும் உவமையானது போலவைஷ்ணவ வீரரானகபீருக்குத் திருஷ்டாந்தம் கபீரே யல்லாமல்வேறொருவருமில்லை. கபீருடைய ஸ்திரீயானவள் சமையல் திட்டமாய்ப்பண்ணிச் சாதுக்களுக்கு உபசாரமாய்ப் போஜனம் பண்ணுவிக்க எல்லாரும் அமுதுசெய்து ராத்திரி நித்திரைபண்ணிப்பிராதக்காலமெழுந்திருந்தார்கள். இதுநிற்கக் கடையிலேநடந்ததென்னவென்றால் வர்த்தகன் கமாலுடைய காலைப் பிடித்துக்கொண்டு இழுத்துப் பார்த்துவிட்டுக் கூக்குரல்போடப் பக்கத்திலுள்ளஜனங்கள் எல்லாம் ஓடிவந்துமிகவும் ஆச்சரியமாய்அர்த்தமிருக்கிற விடம்அனர்த்தம்ஆனாலும்நீசெய்த புண்ணியத்தினாலே உன்தலையை யறுக்காமல் திருடன் தன்தலையைத்தானேவெட்டிக்கொண்டுபோய்விட்டான். இதுவுமல்லாமல் கொஞ்சம் அரிசிமுதலிய சாமான்கள் போயினவே யல்லாமல்

பின்னை ஒன்றும்போகவில்லையே அதனால் திருடவந்தவர்கள் மஹான்க ளௌத்தோன்றுகிறதுஎன்றுஇப்படிநானுவிதமாய்ச்சொல்லிக்கொண் டார்கள். பொழுதுவிடிந்தஉடனே ராஜாவுக்குஇச்செய்தியை அறிக்கை பண்ண அவன் அந்தமுண்டத்தைவழிக்கரையில்கழுமரத்தில்கொண்டு போய்ப்போடஉத்தரவுபண்ணினதால் அந்தப்படியே போட்டு விட் டார்கள்.பிணத்தைத்தண்டிக்கிறதும் மூர்க்கனோடு வாக்குவாதம் பண் ணுகிறதும் பரதேசியோடு சண்டைபோடுகிறதும் பக்தர்களைநிந்திக்கி றதுமாகிய இவையெல்லாம் குலக்ஷயமாய்ப் போய்விடுங்குறியென்று அவனறியவில்லை. அப்பால் கபீர் வீட்டுக்குவந்த சாதுக்கள் காலமே யெழுந்திருந்து ஸ்நான ஜெபதபாதிகளை முடித்துக்கொண்டு தீர்த்த யாத்திரைக்குப்போகக் கபீரை உத்தரவு கேட்டார்கள். அப்போது கபீரும் அவருடைய ஸ்திரீயும் சாதுக்களுக்கு உபசாரமாய் அவர்க ளோடுகூட வழிவிடும்படி வந்தபடியாலெல்லாரும் கழுமரத்தின்வழி யாய்வர்து சிரசில்லாத முண்டத்தைக் கழுவில் போட்டிருக்கிற தைப்பார்த்தார்கள். அப்பொழுது அந்தமுண்டமானது இருகரமும் கூப்பி இவர்களைச்சேவிக்க இதைப்பார்த்துப் போகிறவர்கள் வருகிற வர்கள் எல்லாம் அத்தியந்த ஆச்சரியப்பட்டார்கள். இந்தச்சாதுக்கள் கபீரைப்பார்த்து இது என்ன ஆச்சரியம் முண்டமானது நம்மைக் கண்டு வணங்குகின்றது தலையில்லாமல் உடலில் பிராணன் எப்படி யிருக்கும்.மரத்தின்வேரைவெட்டிவிட்டால்தழைகளெப்படிச்செழிப் பாயிருக்கும்-தந்தியற்றவீணை யெப்படி வாசிக்குமென்றுசொல்லக்கபீ ரானவர் ஏசுவாமிகளே பீஷ்மரானவர் சரதல்பத்திலே விழுந்தும் பிராணனை ரக்ஷித்துவைத்துக்கொண்டு இருக்கவில்லையா- சடாயுவா னவர் ராவணனோடு போராடி வெட்டுப்பட்டும் ஸ்ரீஇராமச்சந்திர னைத் தரிசனம்பண்ணுகிறவரைக்கும் பிராணனை வைத்துக்கொண் டிருக்கவில்லையா அப்படிக்கு இந்த வைஷ்ணவ வீரனுைதிருடன் உங் களைத் தரிசனம் பண்ண வேண்டுமென்று ஆசையாயிருந்து அதற் குள்ளே என்ன குற்றத்தினாலேயோ தலை அறுப்புண்டும் தேவரீர் களைத் தரிசனம்பண்ணப் பிராணனை வைத்துக்கொண்டிருக்கிறவன் போலகாணுகின்றது. இப்பொழுது அவன் மனோரதம் நிறைவேறிய படியால் அக்ஷயமான பரமபதத்தை அடைவானென்று சொல்ல அவர்கள் இதன் பூர்வோத்தரமென்னவென்று மிகவும் ஆசையாய்க் கேட்கும்போது கபீருக்குச் சொல்ல மனம்வந்து நடந்தவற்றை யெல்லாம் சொன்னார். அந்தப்பக்தர்கள் கேட்டு அதிசயமாய் இப்படி யெல்லாம் செய்யலாமாவென்று கேட்டதற்குக் கபீர்காணப்படுகிற உருவெல்லாம் நாசத்தை அடையுமானபடியினாலே நானு மிப்படி செய்தேனென்றுசொல்ல உடனே அந்தச் சாதுக்களுக்குக் கிருபை வந்து கபீருடைய ஸ்திரீயைப்பார்த்து அந்தச்சிரசைக் கொண்டுவரச்

சொல்லிக் கழுமரத்திலிருக்கிற முண்டத்தை இறக்கி இந்தச் சிரசை அதின்பேரிலே வைத்து மஸ்தகத்திலே அபய அஸ்தத்தை வைத்து ஆசீர்வாதம்பண்ணினார்கள். அப்போது கமால்பக்தன் உடனே யுயிர் பெற்றெழுந்தோடிவந்து சாதுக்களுடையகாலிலே சாஷ்டாங்கமாய்ச் சேவித்துநின்றான். அப்பொழுது இந்த அதிசயத்தைவாரணாசியென் கிற காசிப்பட்டணத்தில் உள்ள சமஸ்த ஜனங்களும் பார்த்து ஆனந் தத்தையடைந்து இந்தக் கபீரானவர் லோகஉத்தாரணமாயவதரித்த மஹாபாக்கியசாலியென்று ஒருவருக்கொருவர் நானாவிதமாய்ச் சொல் லிக்கொண்டிருந்தார்கள். இந்தச்சாதுக்கள் கபீர் கமால் கபீர்பெண் சாதி மூன்றுபேரையும் வீட்டுக்குஅனுப்பிவிட்டுத் தீர்த்தயாத்திரைக் குப் போய்விட்டார்கள். இந்தத்திவ்விய சரித்திரமாகிய ஆறும் அத்தியாயத்தைச் சிரவணம் பண்ணின புண்ணிய சாலிகளுக்குத் தேகாந்தியத்திலே பண்டரிபுர க்ஷேத்திரத்தில் இடுப்பிலே கையை வைத்துக்கொண்டு செங்கல்லின்பேரிலே நின்றுக் கொண்டிருக்கிற பகவான் அக்ஷயமான பரமபதத்தைக் கொடுப்பார். இந்த அத்தியா யம் சம்பூரணம். ஸ்ரீவாசுதேவஜயசூயனேநம: ஸ்ரீகிருஷ்ணயபரமகுர வேநம: ஸ்ரீரங்கபரபிரம்மணேநம: ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஏழாவதுஅத்தியாயம்.

# கபீர்தாசர்சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரம்மணேநம:. கேளுங்கள் பாக்கிய சாலிகளே சாதுக்களின் சரித்திரமென்கிற க்ஷீரசாகரத்தில் பக்தர்க ளென்கிற மேகம்வந்து பானம்பண்ணித் திருப்தியாகிப் பூமியிலே திரிவித தாபத்தினாலே சூழப்பட்ட ஜனங்களென்கிற பயிர்களின் மேலும் வருஷித்து ஆனந்தமடையப் பண்ணுகிறது. ஆதலால் கபீர்தாசருடைய சரித்திரத்தில் மேல்நடந்த விருத்தாந்தங்களைக் கேளுங்கள். ஒருநாள் கபீரானவர் ராமநாமஸ்மரணை பண்ணிக் கொண்டு கடைத்தெருவழியாகப் போகும்போது ஒரு பெண்பிள்ளை மாவரைத்துக் கொண்டிருக்க வதைப்பார்த்துச்சற்று யோசனையாய் நின்று பெருங்குரலிட்டு அழத்தலைப்பட்டார். அப்போது சகலரும் ஏனய்யா அழுகிறீர். என்னவிசனம். உம்மையார் என்னசெய்தார்கள். உமக்கு இந்தத்துக்கம் வரக்காரணமென்னவென்று கேட்டதற்குக்

கபீரானவர் இவர்கள் நம்முடைய துக்கத்தைப் பரிகரிக்க வல்லவர்களா அது துக்கமுடையவனிடத்தில் ஒருவன் தன் துக்கத்தைசொன்னால் அவனுக்கு அதிகதுக்கம் வளருவதுபோல அறிவீனராகிய இவர்களோடு நமது எண்ணத்தைச்சொன்னால்நமக்குப்பிரயோசனமில்லை. சகோரத்துக்குத் தாகமுண்டானால் அந்தத்தாகம் சந்திரோதயத்தினால்தான் நீங்கும் அதுபோல நமதுதுக்கம் பரமாத்மாவைக்கண்டு நீங்கவேண்டுமேயொழிய வேறில்லையென்று எண்ணி ஆனந்தபரிதராய் உத்தரவுகொடாமல் நின்றுகொண்டு இருந்தார். அப்போது நிரஞ்சனனென்கிற பக்தன் அவ்விடத்திலே வந்து கபீரைப் பார்த்து சுவாமி ஏன் இப்படி அழுதுகொண்டு நிற்கிறீரென்றுகேட்கக் கபீரானவர் கண்ணைத் திறந்து பார்த்துச் சந்திரனைக்கண்ட சமுத்திரம் போலே சந்தோஷமாய்ச் சிஷனானவன் குருவைக்கண்டவுடன் தன் சங்கையைப்பரிகரித்துக் கொள்ளத்தாராளமாய்ச் சொல்வதுபோல அவரைப்பார்த்து ஓ சுவாமி நானிவ்விடத்தில் வந்துகொண்டிருக்கையில் ஒருபெண்பிள்ளை திரிகையைவைத்து மாவரைத்துக் கொண்டிருந்தாள் அதைப்பார்த்த உடனே சாதுக்கள் சொல்லியிருக்கிறபடி உலகமானது நிரந்தரமாக நடந்து கொண்டிருக்கிறதையும் அதில் அளவற்ற பிராணிகள் பாவத்தைச்செய்து எமவாதனைக்குள்ளாவதையும் பிரத்தியக்ஷத்தில் கண்டது போல மேற்கல்லை ஆகாசமாகவும் கீழ்க்கல்லைப் பூமியாகவும் அவற்றிற்குள்ளகப்பட்ட அரிசியைப் பிராணிகளாகவும் சுத்துகிறவளை எமனாகவும் எண்ணி நாமுமிப்படித்தானே துன்பத்திற்குள்ளாவோமென்று' மிகவும் துயரப்படுகிறேனென்றுசொன்னதை அந்தநிரஞ்சனன் என்கிறவர்கேட்டு நீர் எண்ணினதுசரிதான் ஆனால் அந்தத்திரிகையின் அடிமுளையினிடத்தில் சுற்றிலும் இரண்டு மூன்று விரலளவு தூரத்திலுள்ள தானியம் மாவாகாமல் இருக்கிறதே பார்க்கவில்லையாவென்று சொல்லிக்காண்பித்து ஆகாசத்திற்கும் பூமிக்கும் நடுவேயிருக்கிற சமஸ்த பிராணிகளையும் யமன் காலதண்டத்தால் வதைத்தாலும் அடிமுளை என்னப்பட்ட ராமநாமத்தை விடாமலிருக்கிற தானியமென்கிற ஜீவராசிகளுக்கு ஒருநாளும்பயமில்லை யென்றுசொல்ல உடனே துயரம் நீங்கி அவரைச்சேவித்துக்கொண்டு வீடுவந்து சேர்ந்தார். அவரும்அவருடைய ஜாகைக்குப்போனார்.

அப்பால் கபீர் அனேக பிரபந்தங்களும் ராமநாம பஜனையும் பண்ணிக்கொண்டிருக்கிற நாளையில் கபீரானவர்சற்குருவைத்தேடிச் சரண்மடையாமல் இருக்கிற சமுசாரி பிரேதந்துக்குச் சமானம் பின்னும் பிரேமையில்லாத கீர்த்தனம்போலும் - பூததயவில்லாத ஞானம்போலும்-வைராக்கியமில்லாத சந்நியாசிபோலும்-தீபமில்லாத வீடுபோலவும்-அவன் எந்தகாலமும் விளங்கமாட்டானென்று மனதில்

நிச்சயம்பண்ணிச் சத்குருவைத் தேடுகிறபோது அவ்விடத்தில் இருந்தராமானந்தசுவாமியென்னும் சந்நியாசியிடத்தில்சரணமடைய வேண்டுமென்று விருப்பங்கொண்டு ஜனகராஜன் குமாரத்தியாகிய சீதாதேவி சகல ராஜாக்களையும் தள்ளிவிட்டு ஸ்ரீ இராமச்சந்திரனை வரித்தது போலவும் பீமராஜா குமாரத்தியான ருக்குமணிதேவி ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமாவை வரித்தது போலவும் ஸ்ரீ ராமானந்த சுவாமியினிடத்தில் அத்தியந்தபிரியத்தோடு அவரைச் சரணடைய எண்ணி அவருடைய ஆச்சிரமத்திற்குவந்து தூரநின்று கையைக்கட்டிக்கொண்டு சாஷ்டாங்கமாய்ச்சேவித்து சுவாமி என்பேரில்இலேசம் கடாக்ஷம் வைத்து ஞானோபதேசம்பண்ணக்கிருபைபண்ண வேண்டுமென்றார். அந்தவசனத்தை ராமானந்த சுவாமிசேட்டுக் காதிலே விரலையிட்டுக்கொண்டு ஒருமூலையில்போய் உட்கார்ந்துகொண்டார். கபீர வெளியிலே நின்றுகொண்டு பின்னும் ஓ சுவாமி நான்தீனன். அநாதி யெனக்குக் கிருபை பண்ணவேண்டுமென்று நிரம்பவும் ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது உள் இருந்தபடியே ராமானந்த சுவாமி அடே துலுக்கா உனக்குஉபதேசம்பண்ணலாகாது. பூமியைப் பார்த்து விரைவிரைக்கவேண்டும். சத்பாத்திரமறிந்துதானங்கொடுக்க வேண்டும் ஆகையால்நான்உனக்குஉபதேசம்பண்ணமாட்டேனென்று சொன்னதற்குக் கபீரானவர் சுவாமி என்னுடையமனசானது தங்களுடைய திருவடியில் பற்றியிருக்கிறது. சகோர பக்ஷியின்பேரிலே சந்திரனுக்குப் பிரியமில்லாமலிருந்தாலும் அது அந்தச் சந்திரனுடைய அமிர்த சொருபத்தைவிரும்பிப்பசிதீர்வதுபோலும். கமலத்தின்பேரிலே சூரியனுக்குப் பிரியமில்லாமலிருந்தாலும் அந்தச் சூரியகாந்தியை விரும்பிக் கமலம் மலர்வதுபோலும். துரோணாசாரி விரும்பாவிட்டாலும் ஏகலைவனென்னும் வேடன் அவரிடத்தில் வைத்த விசுவாசத்தினாலே சகல அஸ்திரத்தையும் வரப்பண்ணிக் கொண்டது போலும் - சுவாமி தேவரீருடைய திருவடிகளிலே யென்மனசுபற்றி நான்கடைத்தேற நினைத்திருக்கிறேன். தேவரீர் அநாதரவுபண்ணினாலும் நான்விடத்தக்கதில்லை யென்றுசொல்லிவிட்டு வீட்டுக்கு வந்து இருந்தார். பிறகு ஒருநாள் கபீரானவர் ராமானந்த சுவாமியினுடைய முகத்திலேநின்றும் ராமநாமத்தைக் கேட்கவேணும். அவருடைய பாதத்தூள்என்னுடையசிரசில் எப்படியாவது விழவேண்டும்இதற்கு என்ன உபாயம்செய்யலாமென்று நினைத்து ராமானந்தசுவாமி ஸ்நானத்துக்குப் போகிற வழியில் கழுத்து மட்டுக்கும் குழிகெல்லி அதிலேஉட்கார்ந்துகொண்டு சிரசும் நெற்றியும் தெரியும்படிசெய்து கொண்டு சூரியன் வரவைப் பார்த்துக் கொண்டிருக்கிற கமலம்போலும் மேகத்தின் வரவைப் பார்த்துக் கொண்டிருக்கிற சாதகப்பக்ஷி போலும் சந்திரோதயத்தைப் பார்க்கிற சகோரபக்ஷிபோலும் ராமா

8

னந்தசுவாமிவருகையைக் கபீர் பார்த்துக் கொண்டிருக்கையில் ராமா னந்தசுவாமி பிராம்ய முகூர்த்தத்தில்கங்காஸ்நானத்துக்குப்புறப்பட்டு வழியோடு சீக்கிரமாய்வருகிறபோது கபீருடைய சிரசில்திருவடியை வைத்து ஓஹோ ஆர்பேரிலேயோ கால்பட்டுவிட்டதேயென்றுராமா ராமாவென்றுசொல்லிக்கொண்டு தாண்டிநடந்தார். அப்போது கபீ ரானவர் எழுந்திருந்து நின்று சாஷ்டாங்கமாய்ச் சேவித்து சுவாமி யின்றைக்குக் கிருதார்த்தனானேன் எனக்குத்தேவரீர் திருவடியைச் சிரசிலே வைத்து ராமநாமத்தையும் உபதேசம் பண்ணி விட்டீர்கள் என்னைப் போலே பாக்கியசாலி இந்த மூன்று லோகத்திலேயும் காணேன். அனந்தஜன்மாந்திரங்களில் என்ன சுகிர்தம்பண்ணி யிருந் தேனோ அதினுடையபலங்கள் இன்றைக்கு எனக்குப் பிராப்தமாயிற் றென்று ஸ்தோத்திரம்பண்ணி ஆனந்தமாய்நடனம்பண்ணினார். அநா விருஷ்டி தேசத்திலே மேகம்சலிக்கவருஷித்தால் அந்தத்தேச பிரஜை களுக்கு எத்தனை சந்தோஷமோ- ஜன்ம தரித்திரனுக்குத் திரவிய ராசிகள்ஏகாஏகிஅகப்பட்டால் எத்தனைசந்தோஷமோ- பகீரதனுக்குத் தேவலோககங்கையைப் பூமியிலே அழைப்பித்து சகராதிகளுக்கு விமோசனமானஉடனே என்ன ஆனந்த மாயிற்றோ- வனத்திலே நார தரைக்கண்ட சத்தியவதி குமாரனை வியாசரிஷியென்ன சந்தோஷத் தைஅடைந்தாரோ அப்படிக்கபீரானவருக்கும்அதிகஆனந்தமாயிற்று. ராமானந்தசுவாமி மவுனமாய் ராமஸ்மரணையோடு ஸ்நானத்துக்குப் போய்ச் சகலகர்மங்களையும் முடித்துக்கொண்டுஆச்சிரமத்துக்கு வந்து கபீரைப்போல மகாபாகவதோத்தமனை நாம்கண்டதில்லை ஆனால்மாற் றுயர்ந்தபொன்னைக் காய்ச்சி யிழுத்துப் பரிக்ஷை பார்ப்பதுபோலும் வயிரத்தை பட்டடையில்வைத்துத் தட்டிப்பார்ப்பதுபோலும் இன் னும் பரிக்ஷைபார்க்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டிருந்து விட்டார்.

அப்படியிருக்கையில்ஒருநாள்கபீரானவர்கடைத்தெருவிலேகீர்த் தனம்பண்ணிக்கொண்டு ஆனந்தரூபமாயென்னுடையராமானந்தசுவா மியின்கிருபையினாலே யிந்தராமநாமத்தை அடைந்து தன்னியனானே னென்று ஆனந்தமாப்ச்சொல்லி நாட்டியம்பண்ணிக்கொண்டிருக்கை யில்சிலபிராமணர்களுக்குஅசூயைஉண்டாகிராமானந்தரிடத்தில்வந்து சொன்னார்கள். ராமாநந்தர்கோபமாய்க் கடைத்தெருவுக்குவந்தார். அவர் தூரமாய்வருகையிற்றானேகபீரோடிவந்துசேவித்துக்கைகட்டிக் கொண்டுநின்றார். அப்போதுராமானந்தர் அடேதுலுக்காவினைகானு னக்குஉபதேசம்பண்ணினேனென்றும்என் னுடையசிஷனென்றும்ஏன் தப்பும்தவறுமாய்ச்சொல்லிக்கொண்டுதிரிகிறாய். நானுனக்குஉபதே சம் பண்ணினதற்குச் சாக்ஷியாரென்று சொல்லிப்பாதரக்ஷையை யெடுத்துக்கொண்டுபிள்ளைபிழைக்கவேண்டுமென்றுதகப்பன்உள்ளே

பிரியமாயும் வெளியேகோபமாயும் அடிப்பதுபோலக் கபீர்சிரசிலே பரீக்ஷிமித்தமாயடித்தார். அப்போது தலையுடைந்து இரத்தப்பிரவாகமெடுத்தும் கபீரானவர் மஹாசந்தோஷத்துடனே சுவாமி தேவரீர் எனக்கு உபதேசம்பண்ணினபோது சாக்ஷிவைக்கிறதற்குஒருவருமில்லையென்று இப்போது தேவரீரேயெல்லாரும் பார்த்துக்கொண்டிருக்கையில்தானே திருவடியினால் ஸ்பரிசம்பண்ணிவிட்டீர்கள்.ஹேசகலமானஜனங்களேயெனக்குக் கிருபைபண்ணினஆண்டவர் இவர்தானென்று இப்போதுஉங்களுக்குத்தெரிந்ததேயென்று சொல்லிவிட்டு ராமானந்தசுவாமிகளைப்பார்த்து ஓ சுவாமி முன்னேசாக்ஷிஆரென்று கேட்டீர்களே முன்னமே பஞ்சபூதங்களையும்-பூதங்களின் தன்மாத்திரைகளையும்-தன்மாத்திரைக்குச்சாக்ஷியானநாராயணமூர்த்தியையும் சாக்ஷிவைத்துத் தங்களுடைய திருவடியைச் சேவித்துக்கொண்டேன் இப்போது அனுக்கிரகம்பண்ணினதைச்சகலரும்பார்த்தார்களென்று சொல்லி விட்டுக்கைகட்டிக்கொண்டு மஹாவணக்கமாய் நிற்கையில் ராமானந்தசுவாமி அதிகசந்தோஷமாய்த் தன்னுடையஅபயஅஸ்தத்தைக்கபீருடையசிரசின்மேல்வைத்து இனிமேல் ராமகிருஷ்ணநாமமந்திரங்களை இடைவிடாமல் செபித்துக்கொண்டிருவென்று ஆக்ஞாபித்துவிட்டு ஆச்சிரமத்துக்குவந்துவிட்டார்.

கபீர் ஆனந்தபரிதனாய் நானாவிதமாய் ஸ்ரீஇராமச்சந்திரனுடைய அனந்தகல்யாணகுணங்களை வர்ணித்துக்கொண்டும்கீர்த்தனநாட்டியங்கள்பண்ணிக்கொண்டும் வாரணாசியென்கிற காசிப்பட்டணத்தில்சகலரும்கொண்டாடும்படியிருக்கையில்சிலதுஷ்டர்கள்உதாரியுடைய நடத்தையைக்கேட்டு லோபிஅசங்கிதப்படுவதுபோலவும் பதிவிரதாதர்மத்தைக் கேட்டு விபசாரஸ்திரீயானவள் லச்சையாவதுபோலவும் கபீருடைய குணாதிசயங்களைக்கேட்டு மனஞ்சகிக்காமல் அசூயையாகியெல்லாரும் ஓரிடத்திலே கூடித்தேசதேசங்களிலிருக்கிற பகவத்பக்தர்களைஒரேதினத்திலே வரத்தக்கதாகக் கபீர்பேராலேஓலைகளெழுதி அவர்கள் ஒருமிக்க ஒரே தினத்தில் வந்து சேரும்படியாய்ப் பண்ணுவோம் அப்போது கபீரென்ன செய்வார். ஆருக்கென்று உபசாரம் பண்ணுவார் அப்போது அவர்களுக்குக் கோபம்வந்து கபீரைச்சபிப்பார்கள். நாம்தூரநின்று கவுரவபாண்டவர்களுக்குக் கலகமுண்டாக்கிவிட்டு நடுவேநின்று வேடிக்கைபார்த்த சகுனியைப்போலே வேடிக்கைபார்ப்போமென்று நிச்சயம்பண்ணிக் கபீருடைய பேராலே தேசதேசங்களுக்கு ஓலையெழுதி அனுப்புவித்தார்கள். அந்த ஓலைகளைப் பார்த்துக்கொண்டு கோகுலம் பிருந்தாவனம் துவாரகை மதுரை முதலான பட்டணங்களிலிருக்கிற லக்ஷாலக்ஷம் பக்தர்கள் ஒரேகாலையில் கூடிவந்தார்கள். அப்பொழுது இந்தத் துஷ்டர்கள் திரியோதனன் பாண்டவர்களுக்கு அபாயம்வரத்தக்கதாகத் துர்வாசரிஷியை அவர்க

ரிடத்திற்குவிருந்துன்னை அனுப்பிவிட்டுப் பார்த்துக் கொண்டிருந் ததுபோலும்-ராவணன் காலநேமியென்கிற ராக்ஷதனை அனுப்பிஅநு மாருக்கு விகாதம் பண்ணச்சொல்லிவிட்டுச் சந்தோஷமா யிருந்தது போலும்மஹாத்துமாக்களை அழைப்பித்துவிட்டுகைகொட்டிக்கொண்டு எப்படி முடியுமோவென்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கை யில் கபீரானவர் வந்த பகவத் பக்தர்களுக்கு எதிர்கொண்டு போய் ஆலிங்கனம் சாஷ்டாங்கமுதலானவைகளை அவரவர்களுக்குத்தக்கபடி பண்ணி உபசாரமாயழைத்துக்கொண்டு அனேகமாயிரம் பகவத்பக் தர்களுடைய தரிசனம் நமக்கு இன்றைக்குக்கிடைத்ததென்று இருக் கையில் அயோத்தியாதிபதியான ஸ்ரீ ஜானகிரமணன் பக்தர்கள் சங் கடத்தை நிவாரணம் பண்ணப் புறப்பட்டுச் சாக்ஷாத் கிருஷ்ணன் அனந்தமான கோபிகாஸ்திரீகளுக்கு அனந்தகிருஷ்ணரூபமெடுத்தது போலும் ஒருதுரோபதையானவள் பரிமாறுதற்கு அனேகம் துரோ பதையானது போலும் அனந்த மாயிரம் கபீராக ரூபம் எடுத்துக் கொண்டு கங்காதீரத்தில் இறங்கி யிருக்கிற பாகவ தோத்தமர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொருகபீராகவந்து மிகுதியும் உல்லாசமாய் யெங்கேபார்த்தாலும் சாதுக்களுடைய யோக க்ஷேமங்களை விசாரித் துக்கொண்டுவருவார். ஒருவிடத்தில் சாதுக்களுடைய பாதம் கழுவு கிறதும் ஒருவிடத்திலே ஸ்நானம்பண்ணுவிக்கிறதும் ஒருவிடத்தில் பூஜைக்கு இடம்பண்ணுகிறதும்ஒருவிடத்தில் உபசாரவார்த்தைகளைச் சொல்லுகிறதும் ஒருவிடத்தில் சாதுக்களுடைய பாதசேவைபண்ணு கிறதும் ஒருவருக்குச்சாதம் பரிமாறிக்கொண்டிருக்கிறதும் ஒருவ ருக்குச்சாதம்ஊட்டுகிறதும் ஒருவருக்குத்தாம்பூலம்பிடித்துக்கொண் டிருக்கிறதும் ஒருவர்முன்னே பகவத்கல்யாணகுணத்தை வர்ணிக்கிற தும் ஒருவரைக்கட்டிலின்பேரிலே படுக்கவைக்கிறதும் ஓரிடத்தில் விசிறிக்கொண்டிருக்கிறதும் ஒருவிடத்திலே சந்தனம்பூசுகிறதும் ஒரு விடத்திலே புஷ்பாரங்களைப்போடுகிறதும் ஒருவிடத்திலே வஸ்திர பூஷணங்கள்கொடுக்கிறதும் ஒருவிடத்திலே உபசாரமாய் என் வீட் டுக்கு வாருங்களென்று அழைக்கிறதும் ஒருவிடத்திலே யென்பேரில் இடைவிடாமல்பிரீதியாயிருக்கவேண்டுமென்று சொல்லுகிறதும் ஒரு விடத்திலே வைகுண்டவாசியானவர் எனக்கு ஏதாகிலும் ஊழியங்கட் டளையிடவேண்டுமென்றுசொல்லுகிறதும்பின்னும்எவர் எவர்களுக்கு என்னென்னஇஷ்டமோ அவைகளைக்கொண்டுவந்துகொடுத்துக்கொண்டு மொக இப்படிநானுவிதமாய் உபசாரங்கள் மூன்றுநாள் பரியந்தம் பண்ணி அவர்அவர்களுக்கு உத்தரவுகொடுத்துவிட்டு அதிரிசியமா னார். கபீரானவர் ஆனந்தபரிதராய் ராமநாமத்தைச்செபம்பண்ணிக் கொண்டிருக்கையில் இந்தத்துஷ்டர்கள் தாங்கள்பண்ணினஎத்தனங் கள் எல்லாம் உவர்ப்பூமியிலே விதைத்தவிதையைப்போல வீணா

படியால் இலச்சையாகிக் கபீருக்குச் சாஷ்டாங்கமாகச் சேவித்துச் சுவாமிவிட்டிற்பூச்சியினாலே தீவட்டிப்பிரகாசமணையாததுபோலும் மின்மினிப்பூச்சியினாலே சூரியன்ஒளிகுன்றாததுபோலும் துரியோதனன்பண்ணின சகலசங்கடங்களாலும் ஸ்ரீகிருஷ்ணனுடைய சகாயத்தையுடைய பாண்டவர்கள்சிறிதும் துன்பமடையாததுபோலும் நாங்கள்பண்ணினதுஷ்ட எத்தனங்களுக்கு ஸ்ரீ ஜானகிரமணனுடைய சகாயத்தினாலே அதிகயஸஸோடுகூடினீர்கள்.நாங்கள்பாமரர்கள்ஆதலால் அறியாமையாற்செய்த குற்றங்களைப்பொறுத்துஎங்கள்பேரிலே கிருபைபண்ணவேண்டுமென்று ஸ்தோத்திரம் பண்ணிவிட்டுத் தங்களுடையதுஷ்ட சங்கல்பத்தைவிட்டு ஸ்ரீ ராமநாமபஜனமே பண்ணிக்கொண்டிருந்தார்கள். இந்த அத்தியாயம்சம்பூரணம். இந்தஏழாமத்தியாயத்தைச் சிரவணம்பண்ணினமாத்திரத்திலேசகலமனோரதமும் பூரணமாகும். ஸ்ரீ வாசுதேவஜபிரியபிரவேநம: ஸ்ரீ கிருஷ்ணயபரமகுரவேநம: ஸ்ரீரங்கபரப்பிர்மணேநம: ஸ்ரீராமானுஜாயகுரவேநம:.

எட்டாவதுஅத்தியாயம்.

## நிவர்திதேவர் - ஞானதேவர் - சோபானுதேவர் - முக்தாபாயி

### இவர்கள் உற்பத்தி சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரமகுரவேநம:. கேளுங்கள் புண்ணியசாலிகளே யிந்தத்திவ்விய சரித்திரத்திற்கு அமிர்தத்தைத் திருஷ்டாந்தம் சொல்லுவோமென்றால் அந்த அமிர்தம் தன்னைச்சாப்பிட்ட இந்திராதி தேவர்களுக்கும் அக்ஷயமான பரமபதத்தை பிராப்தியாக்கவில்லை. இந்தச்சாதுக்களின் சரித்திராமிர்தம் சிரவணத்துவாராபானமானவுடனே ஜீவன்முக்திநிலை பிராப்தியாகிறது ஆகையால்இந்தச் சரித்திரத்திற்கு உபமானம்சொல்ல இந்தச் சரித்திரத்தைத் தவிர வேறேகாணேன். அதன் இரசத்தைச்சாதுக்களேபானம் பண்ணுவார்கள். முன்னொருகாலத்தில் க்ஷீரசாகரவாசியான ஸ்ரீமந்நாராயணனுடைய தரிசனத்திற்குப்பரமசிவன் பிரமதேவர்முதலான தேவதைகள் வந்திருந்தபோதுஅவர் அவர்களைப்பார்த்து நாம் மூன்றுபேரும்என்

னுடையமாயையும்பூலோகத்திலேஓரிடத்தில் நிவர்திதேவர் - ஞானேசுவரர்-சோபானர்- முக்தாபாயிஎன்ற நாமதேயங்களோடே அவதரித்துப்பாமரர்கள் பண்டிதர்கள் முதலானசமஸ்த பிரஜைகளும் கடைத்தேறும்படியாய்லீலைகளைச்செய்வோமென்றுசொல்லிவிட்டுஅந்தப்படியேவந்துஅவதரிக்க ஆரம்பித்தார்கள். அது அவ்வாறிருக்கையில் கங்காதீரத்தில் அப்புவென்கிறகிராமத்தில்கோவிந்தபண்டிதரென்றொருவைஷ்ணவோத்தமரிருந்தார். அவருடையஸ்திரீக்கு நிராபாயியென்று பெயர். அவர்களிருவரும் புத்திரனில்லாமையால் வருந்திப்பகவானைச் சந்ததிகொடுக்கவேண்டுமென்று கேட்டுக் கொண்டிருக்கையில் பகவத் கிருபையினாலே அவள் கர்ப்பமாகி ஒன்பதுமாதம் சென்றபிறகு பக்தி ஞானவைராக்கிய இராசியே ஆகாரமாய்ஒருகுழந்தைபிறந்தது - அந்தக்குழந்தைக்குப் பன்னிரண்டாநாள் விட்டோபாவென்று பேர்வைத்துத்தாயும் தகப்பனும் பிரியமாய் வளர்த்துக்கொண்டு வந்தார்கள் - எட்டாம்வருஷம் உபநயனம் பண்ணி வேதசாஸ்திரங்கள் காவியம் புராணம்தர்க்கம்மீமாம்சம்இவைகளைச்சாங்கோபாங்கமாய்கற்கவைத்தார்கள். அந்த விட்டோபாவுக்குத் தீர்த்தயாத்திரைபண்ணவேண்டுமென்று இச்சைபிறந்து மனதில் வைராக்கியமாய்த் தாய்தந்தையரிடத்தில்உத்தரவுகேட்டு வாங்கிக்கொண்டுவிட்டல் ஸ்மரணைபண்ணிக் கொண்டு வைராக்கியத்தோடே புறப்பட்டார்.ஒருவைராக்கியமுமில்லாமல் தீர்த்தஸ்நானமுதலான புண்ணிய கர்மங்களைப் பண்ணுகிறது வீணைபடியால் இவர்வைராக்கியத்தோடே அரிகீர்த்தனம்பண்ணிக் கொண்டு முன்னே துவாரகைக்குவந்து கோமதியில் ஸ்நானம்பண்ணிக் கிருஷ்ணபரமாத்துமாவைத் தரிசனம் பண்ணிக்கொண்டு அவ்விடத்திலே மச்சாவதாரம்பண்ணின சுவாமியைத்தரிசனப்பண்ணிப் பிண்டகாஸ்தலத்திற்குவந்து அவ்விடத்திலிருந்து சுதாம்பரஸ்தலத்திற்குவந்து அவ்விடத்திலிருந்து மாதவக்ஷேத்திரத்திற்கு வந்து ருக்குமணிதேவியின் விவாகம்பண்ணின ஸ்தானத்தைப் பார்த்துவிட்டு பிரபாலிங்க ஸ்தலத்திற்குவந்து சோமனாதரைத் தரிசனம் பண்ணி முசுகுந்த க்ஷேத்திரத்திற்குவந்து காலயமனை பஸ்மம் பண்ணினவிடத்தைப்பார்த்துவிட்டுப்பின்னும்வழியில்அனேகதீர்த்தஸ்நானதேவ தரிசனங்களைப் பண்ணிக்கொண்டு சப்த சிங்கத்துக்கு வந்து சேர்ந்துஆதிமாயையைச்சேவித்துக் கொண்டு அருணைவருணையென்கிற பிரயாகையில் ஸ்நானம்பண்ணி அவ்விடக்திலிருந்து கோதாவரிக்குவந்து ஸ்நானம்பண்ணிக் கபாலீசுவரனைத் தரிசனப்பண்ணி அவ்விடத்திலிருந்து திரியம்பக க்ஷேத்திரத்திற்குவந்து கவுரதிகையில் ஸ்நானம்பண்ணி கங்காதுவாரத்துக்குவந்து அவ்விடத்திலிருந்து பிர்மகிரிக்குவந்து அவ்விடம்விட்டு பீமாசங்கமத்துக்குவந்துஸ்நானம பண்ணிப் பிறகு அழகாவதிக்குவந்து அவ்விடத்திலிருக்கிற தீர்த்தங்

களில் ஸ்நானம்பண்ணி விட்டுச் சக்கா தீர்த்தத்துக்கு வந்து ஸ்நானம் பண்ணிச் செபம்பண்ணிக்கொண்டிருக்கையில்- அந்த க்ஷேத்திரத்தி லிருக்கிற சித்தோபண்டிதரென்கிற பிராமணன் அவ்விடத்திற்குஸ்நா னம்பண்ணுவதற்குவந்து இந்தப் பிரமசாரியினுடைய நிஷ்டையைப் பார்த்து நமஸ்காரஞ்சொல்லி ஓ புண்ணியரே நீரிருப்பது எவ்விடம் யாதுகருதி யிவ்விடம் வந்தீர் உமக்குத் தாய் தகப்பன்மாரிருக்கிறார் களாவென்றுகேட்க-அதற்கு விட்டோபா நானிருப்பது கங்கா தீரத் தில் அப்புவென்கிற கிராமம் அவ்விடத்தில் என் மாதா பிதா சுகமா யிருக்கிறார்கள். நான் தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுத் துவாரகை யைத்தரிசனம்பண்ணிக்கொண்டு அவ்விடம்விட்டு வழியிலுள்ள தீர்த் தங்களில் ஸ்நானம் பண்ணிக்கொண்டு இங்கே சக்கா தீரத்துக்கு வந் தேனென்று சொல்லக்கேட்டுச் சந்தோஷமாய்அவரைப் பிரார்த்தித் துத் தம்முடைய ஜாகைக்கு அழைத்துக் கொண்டுபோய்ச் சோட சோபசாரஞ்செய்து ஷட்ரசான்னங்களோடு போஜனம்பண்ணுவித்து அன்றைக்கு அவ்விடத்திலேயே வைத்துக் கொண்டிருந்தார். அன் றைய ராத்திரி சித்தோபண்டிதருடைய சொர்ப்பனத்தில் பாண்டுரங் கன் கிருபை கூர்ந்து ஹே சித்தோபண்டிதரே இந்தப் பிரமசாரிக்கு உம்முடைய புத்திரியை அலங்காரம் பண்ணிக் கன்னிகாதானம்பண் ணுமென்று சொல்லியருள சித்தோபண்டிதர் உடனே விழித்துக் கொண்டு மஹாசந்தோஷமாகி இந்தச்செய்தியை பிரமசாரியிடத்தில் சொன்னார். அதற்குப்பிரமசாரி நல்லது பகவான் விவாகம்பண்ணிக் கொள்ளென்று எனக்குக் கட்டளை பண்ணினால் நானுமந்தப்படியே செய்கிறேனென்று சொன்னான். மறுநாள் அவ்விடத்திலே யிருந்து இராத்திரி நித்திரைசெய்கையில் அவனுக்கும் அப்படியே சொர்ப் பனத்தில் விசுவ வியாபகனான பண்டரிநாதன் வந்து ஓ விட்டோபா உன்னிடம் நான்குதிவ்வியமூர்த்திகள் அவதாரமாக வேண்டியதாக நியமித்திருக்கிறபடியினாலே நீ என்னுடைய ஆக்கினைப்படிக்கு இந் தக்கன்னிகையைவிவாகம் பண்ணிக் கொள்ளென்று சொல்லி விட்டு அதிரிசியமானார். உடனே பிரமசாரி நித்திரைநீங்கிச் சந்தோஷப்பட் டுச் சித்தோபண்டிதரோடு தன்கனவில் பகவான்வந்து சொன்னவை களைச் சவிஸ்தாரமாய்ச்சொன்னான். சித்தோபண்டிதரும் சந்தோஷ மாய் அந்தக்ஷணமே பிராமணர்களை அழைப்பித்துப்பொருந்த நிமித் தம்பார்த்து முகூர்த்தம்வைத்துக்கொண்டு சகலசாமான்களும் சேக ரித்து விவாகமண்டப மலங்காரம்பண்ணிப் பெண்ணையும் பிள்ளை யையு மலங்கரித்து அதில் உட்காரவைத்துக்கொண்டு நல்ல திவ்விய முகூர்த்தவேளையில் திரைபிடித்து ஜயஜயா முகுந்தா - முராரே- புராணபுருஷோத்தமா- மாதவா- ஜனார்த்தனா- வாசுதேவா- பெண் ணையும் பிள்ளையையும் ரக்ஷியும்; ஜயஜயா மச்ச- கூர்ம- வராக-

நரசிம்ம-வாமன-பரசுராம-ரகுராம-பலராம-கிருஷ்ண-கலிக்காவ தாரா-பெண்ணையும் பிள்ளையையும்ரக்ஷியும்; ஜயஜயா ஸ்ரீவச்சகவுஸ்து வசக்கிரதாரி-சாரங்கதரா-ஜகந்நிவாசர-சர்வாந்தரியாமி-சகலலோகா தாரா-பிரபோ-பக்தஜனபூஷணு-பக்தவச்சலா-பெண்ணையும் பிள் ளையையும் ரக்ஷியும்; ஜயஜயா தயித்தியாந்தகா-தர்மஸ்தாபனு-அப் பிரமேயா-மாயாதீதா-ஷட்குணபரிபூரணமூர்த்தே-லீலாமானுஷ விக்கிரகா-அனந்தாவதாரா-அனந்தசயனு-பெண்ணையும் பிள்ளையை யும் ரக்ஷியும் என்று இந்தப்படி மங்களாஷ்டகத்தைச் சொல்லிப் பாணிக்கிரகணம்பண்ணிக்கொடுத்தார். இந்தமஹோற்சவம் முடிந்து ஐந்தாறுதினங்களுக்குமேல் சமுசாரத்தையும் மகளையும் மருமகனை யும் அழைத்துக்கொண்டு பண்டரிபுரத்துக்கு வந்து சேர்ந்தார். அந் தப்பண்டரிபுரக்ஷேத்திரத்திற்குச் சமானம் வேறு ஒரு க்ஷேத்திரத் தைச்சொல்லக்கூடாது. காசிக்ஷேத்திரமோக்ஷதாயகமென்று சகல சாஸ்திரங்களும் சொல்லிளுலும் அந்தக்கங்கைமுதலான நதிகளிலே ஸ்நானம்பண்ணிஞல் பிராணிகளுக்குத் தேகாபிமானம் அதிகமாய் வளருகிறது. பண்டரிபுரத்தைக்கண்ட மாத்திரத்திலே தேகாபிமா னம்போய் நிர்லச்சையாய் அரிகீர்த்தனமும் நாட்டியமும் பண்ணுகி ருர்கள். தேகாபிமானம்போனமாத்திரத்திலே அக்ஷயமானபரமபதப் பிராப்திக்கு ஹேதுவாகிருர்கள். ஆகையால் பண்டரிபுர க்ஷேத்திரம் மகாமகிமையுள்ளது யென்று எண்ணிக்கொண்டு அந்த க்ஷேத்திரத் திற்குவந்து சேர்ந்தவுடனே பண்டரிநாதனை ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு உற்சவங்களைப் பார்த்தபிற்பாடு சித்தோ பண்டிதரைப் பார்த்து மருமகனுன விட்டோபா நான் ராமேஸ்வரயாத்திரை பண் ணிவிட்டுச் சீக்கிரமாய்வருகிறேனென்று சொல்லி உத்தரவு வாங்கிக் கொண்டு புறப்பட்டார். சித்தோபண்டிதர் சமுசாரத்துடனே அழகா புரிக்குப்போய்ச்சேர்ந்தார்.

அப்போது விட்டோபா பாண்டுரங்கனைச் சேவித்துக்கொண்டு புராணபிரசித்தமான ஸ்தலமாகிய ஸ்ரீசைலம்-மல்லிகார்ச்சனம்-நிவிர்த்திசங்கமம். அஹோபிலம்-கெடிகாசலம்-நாரசிம்ஹம்-வேங் கடாசலம்-காஞ்சி-அருணுசலம்-சிதம்பரம்-கோகரணம்-அட்ட கேஸ்வரம்-மைந்தபர்வதம்-ஜநார்த்தனம்-அநந்தசயனம் முதலான ஸ்தலங்களில் தீர்த்தஸ்நானம்-ஸ்தலவாசம்-தேவதரிசனம் முதலிய பண்ணிஅவ்விடம்விட்டுப்புறப்பட்டுக் கோகுலா புரத்துக்குப்போய் லக்ஷ்மிதரிசனம் பண்ணிவிட்டுக் கிருஷ்ணுதீரத்துக்குவந்து ஸ்நானம் பண்ணிமானவிசங்கமத்துக்குவந்து தீர்த்தஸ்நானம் தெய்வதரிசனம் முதலியவைகளைப் பண்ணிக்கொண்டு அழகாபுரிக்குப்போய் மாமனு ரைக்கண்டுசேவித்துக்கொண்டு அவ்விடத்தில் நாலுநாள் வாசம்பண் ணிச்சித்தோபண்டிதரைப்பார்த்துக்கங்காதீரத்திலுள்ளஎன்னுடைய

தாய்தந்தையரைப்பார்க்கவேண்டுமென்கிறவாசையுண்டாயிருக்கிறது. உத்தரவு கொடுங்கள் போய் வருகிறேனென்று கேட்டதற்கு - அப்போதுசித்தோபண்டிதர் இந்தப்பிள்ளைக்கு நம்முடையகுமாரத்தியை விவாகம்பண்ணிக் கொடுத்திருக்கிற செய்தியிவருடையதாய் தந்தையருக்குத்தெரியாதாகையினாலே நாமும் சமுசாரத்துடனே போய்க் கண்டு செய்திசொல்லிவிட்டு வருவோமென்று நிச்சயம் பண்ணிக் கொண்டுபெண்ணையும் அழைத்துக்கொண்டு புறப்பட்டு அவரோடு அப்புபுரமென்கிற கிராமத்துக்கு வந்துசேர்ந்து கோவிந்தபண்டிதரைக்கண்டுசேவித்துக்கொண்டுஉடனேஅவருக்கும்அவருடையஸ்திரீ ஙிராபாயிக்கும் நடந்தவைகளை யெல்லாம்சொல்லி நாட்டுப்பெண்ணையும்பிள்ளையையும் சேவிக்கச்சொன்னார். அதைக்கண்டுஇருவரும்ஸ்ரீராமச்சந்திரனுக்கும் சீதாதேவிக்கும் விவாகமான உடனே அவர்களிருவரும்வந்து பாதங்களில்நமஸ்காரம்செய்யக்கண்டகௌசல்லியாதேவியையும் தசரதரையும்போல ஆனந்தமானார்கள். சித்தோபண்டிதர் கொஞ்சநாள் அவ்விடத்திலிருந்து பிறகு தம்முடைய பெண்ணுக்கு அனேகபுத்திகள் சொல்லிவிட்டுத் தம்முடைய மனைவியை அழைத்துக்கொண்டு அழகாபுரிக்குவந்து சேர்ந்தார். விட்டோபா தன்னுடைய ஸ்திரீயுடன் தாய் தகப்பன்மாருக்கு வேண்டிய சிசுருஷை பண்ணிக்கொண்டிருக்கிற நாளையில் கொஞ்ச நாளைக்குப்பிறகு அம்முதியோரிருவரும் பரமபத மடைந்தார்கள். விட்டோபா சுகதுக்காதிகளுக்குச் சமான சித்தத்தை யுடையவராதலால் சொஸ்தமாயிருந்துவிட்டார். இந்தச்சேதியைச் சித்தோபண்டிதர் கேட்டு மனதில் விசனமாயவ்விடத்திற்குவந்து வைராக்கிய சீலனாய்ச் சமரசானந்த முடையவனாயிருக்கிற மருமகனைப்பார்த்து நீர் இவ்வாறு விரக்தனாயிருந்துகொண்டு சம்சாரம் நடத்தல் முடியாதாகையால் நீங்களிருவரும் என்னுடைய ஜாகைக்கு வந்து இருந்தால் ஸ்ரீ ஹரியினுடையகிருபையால் சுகமாயிருக்கலாமென்று சொல்லி யிருவரையும அழைத்துக்கொண்டுவந்து சேர்ந்து அவ்விடத்தில் ஹரிகீர்த்தனமும பண்டரிநாதனுடைய நித்திய தரிசனமும் ஆடிமாதம் கார்த்திகைமாதங்களில் மகோற்சவதரிசனமும் பண்ணிக்கொண்டு இருந்தார்கள்.

இப்படிச் சுகமாயிருக்கிற நாளையில் புத்திர சந்தானமில்லாமையால் விட்டோபாவுக்கு வைராக்கியம்அதிகரித்துஸ்திரீயைப்பார்த்து நமக்கு வெகுநாளாகியும் புத்திரசந்தானமில்லை. பின்னும் எனக்குக் காசிக்குப்போய்ச் சந்நியாசம் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று மிகவும் ஆசையுண்டாயிருக்கிறதாதலால் அவ்வாறுசெல்ல நீ உத்தரவு கொடுக்கவேண்டுமென்றுகேட்டார். அந்த வசனத்தை ருக்குமாபாய் கேட்டு மிகவும் சிந்தாகிரந்தையாய் உத்தரமொன்றும் சொல்லாமல் தன்னுடைய தாய்தகப்பன் மாரைப்பார்த்து அய்யா வென்னுடைய

பிராணநாதன் சந்நியாசம் வாங்கிக்கொள்ளப் போகிறேனென்று உத்தரவுகேட்டார் நானென்னசெய்வேனென்றுவிசனப்படப்பெண்ணைப் பார்த்துச்சித்தோபண்டிதர் இவர் சந்நியாச மெப்படிவாங்குவார் சந்தானமில்லாதவன் சந்நியாசம் வாங்கக்கூடாதென்று வேதம்சொல்லுகிறது. ஆதலால் நீ உத்தரவுகொடுக்காமல் சும்மாவிருவென்றுசொன்ஞர். அவளுமப்படியேயிருக்கப் பின்னும் கொஞ்சநாள்சென்றவுடன் விட்டோபா தன்பெண்சாதி நித்திரைமயக்கமா யிருக்கிறபோது கங்கையாத்திரைக்குப் போய் வருகிறேனென்று சொல்ல அவளும் நல்லது என்றுசொன்ஞள். விட்டோபாவானவர் உடனே கருடன்கையிலகப்பட்ட சற்பமானது தப்பிப் புற்றுக்குள்ளேபோய் நுழைந்துகொண்டாற்போலும்- கூட்டிலகப்பட்டகிளியானது தப்பிக்கொண்டு ஆகாசமார்க்கத்திலே கிளம்பி மரத்தின்பேரிலேபோய் உட்கார்ந்துகொண்டதுபோலும்- சாரஸ்திரீ கூட்டத்திலிருந்து நீங்கிப் பதிவிரதையானவள் தன்கணவனை யடைந்ததுப்போலும்- வலையிலகப்பட்ட மாஞனது தப்பிக்காடு சேர்ந்ததுபோலும்- சம்சாரத்தை விட்டுக் காசிக்ஷேத்திரத்திற்கு வந்து திருவெணிசங்கம் பிரயாகை ஸ்நானம் பண்ணிப்பிந்துமாதவரைப் பூசைபண்ணிப் புட்கரக்ஷேத்திரத்திற்கு வந்து அவ்விடத்திலே வைஷ்ணவர்கள் ஹரிகீர்த்தனமும் கீதைசாஸ்திரமும் வாசித்துக்கொண்டிருப்பதைக் கேட்டுக்கொண்டு தானும் ஹரிகீர்த்தனம்பண்ணிக்கொண்டிருக்கையில்- ஒருநாள் கீதையிலே சந்நியாசக்கிரமத்தைச் சொல்லுகிறபோது- அந்த அத்தியாயத்தை விட்டோபா கேட்டு வைராக்கியமாய் ஹா - ஹா - இந்தச் சம்சாரம் மஹாபொல்லாதது இந்தச்சம்சார மென்கிற காட்டிலே ஆசையென்கிறவலையில் சிக்கிக்கொண்டு நாம் ஜனனமரணமென்கிற பிரவாகத்தில் முழுகிப்போய் விட்டோம் - இனிமேலாகிலு மிந்தவேதனையை அறுத்துவிட்டு ஜனனமரணப்பிரவாகத்தில் விழாமலிருக்க வேண்டுமென்றெண்ணி- ஸ்ரீ ராமானந்தசுவாமி ஆச்சிரமத்திற்குவந்து அவரைச்சரணமடைந்து மிகவும் பிரார்த்தித்து எனக்குச் சந்நியாசம் கொடுக்கவேண்டுமென்று கேட்டார். அப்பொழுது அவர் இவனுடைய பூர்வோத்திரத்தைக் கேட்டதற்கு எனக்கு ஒருவருமில்லை ஒருஆசையுமில்லையென்று சொன்னபடியால் இவனுடைய வைராக்கியத்தைப்பார்த்து சந்நியாசம் கொடுத்துவிட்டார். அந்தச்செய்தி அழகாபுரியிலே யிருக்கிற பெண்சாதிக்கும் மாமஞருக்கும் தெரியப் பெண்சாதியான ருக்குமாபாய் உடனே மூர்ச்சை யடைந்து பிறகு சற்றுத்தெளிந்து மிகுந்த சிந்தா கிரந்தையாய் நளச்சக்கிரவர்த்தியின் வியோகத்திஞலே தமயந்தி விசனப்பட்டது போலும் அரிச்சந்திரனுடைய வியோகத்திஞலே சந்திரமதியானவள் கஷ்டப்பட்டதுபோலும் மகாதுக்கசாகரத்தில் முழுகிஞள். பெண்ணுடைய

விசனத்தைப்பார்த்துத் தாய் தகப்பன்மார் நானுவிதமான சமாதா னம்பண்ணியும் அந்தருக்குமாபாய் இனிமேல்நானென்னசெய்வேன்- அநாதியானேன்- பிராணநாதர் இப்படி மோசம் பண்ணிவிட்டார். ஆதலால் ஜன்ம மெடுத்ததற்கு யாதேனுமொரு சத்கிரியையைச் செய்து கடைத்தேற வேண்டுமென்று நிச்சயம்பண்ணி- அசுவத்த நாராயணனுடைய பூசையைப் பிரதிதினம் மஹாநியமமாய்ப் பண் ணிக்கொண்டுவந்தாள்.

இப்படிச்செய்கிற பூசையினுலே அச்சுவத்தநாராயணனுக்கு சந் தோஷம்வந்து இவளுக்குக் கிருபை பண்ணும்படியான புண்ணியகா லம்வந்தது. அதாவது இவள் புருஷனுடையகுருவாகிய ராமானந்தர் ராமேசுரயாத்திரைக்குப்புறப்பட்டுவரும்போது இந்த அம்மாள்பூசை பண்ணுகிற அச்சுவத்தமரத்தடியில் வந்து வெயிலுக்கு உட்கார்ந் திருந்தார். அப்பொழுது அச்சுவத்தநாராயணபூசைசெய்துவிட்டுப் பிரதக்ஷணம்பண்ணிக்கொண்டிருக்கிற ருக்குமாபாய் இந்தச்சந்நியாசி யைக்கண்டு ஓடிவந்து பிரதக்ஷண நமஸ்காரம்பண்ண அவளுக்குச் சுபுத்திரர்களைப்பெற்றுக்கொண்டு வெகுசம்பத்துடனே தீர்க்க சுமங் கலியாய் இருவென்று ஆசீர்வாதம் பண்ணினர். அதற்கு ருக்குமா பாய் புன்சிரிப்புச் செய்தாள். அப்பொழுது சந்நியாசி யேனம்மா சிரித்தாய் நான்பண்ணின ஆசீர்வாதம் உனக்குவிரோதமாய்த்தோன் றிற்ருவென்றுகேட்க- சுவாமி பர்த்தா அன்றி அஷ்ட ஐசுவரியமும் புத்திரசம்பத்தும்தீர்க்க சுமங்கலித்துவமும் எப்படிவாய்க்குமென்று ஆச்சரியமாய்ச்சிரித்தேன்- தேவரீர்பண்ணின ஆசீர்வாதம் பொய்யா காது-ஆனுலும்தேவரீர் ஆசீர்வாதம்பண்ணினது வறுபட்டவிதையை முளைக்கப் போட்டதுபோலும் குருடனுக்கு கண்ணுடி காட்டினது போலும் செவிடன்முன்னே பாடினதுபோலும் மூக்கு இல்லாதவ ளுக்குச் சகலஆபரணங்களும்தரித்து அழகுபார் என்றதுபோலும் இருக்கின்றது. தேவரீர் என்னுடைய பர்த்தா சந்நியாசம் வாங்கிக் கொண்டசங்கதியை விசாரியாமல் ஆசீர்வாதம்பண்ணினீர்கள். இந்த ஆசீர்வாதம் அவரைஅன்றி யெப்படிவாய்க்குமென்றுசிரித்தேனென் ருள். அப்பொழுது அவர் பிள்ளையில்லாதவன் சந்நியாசம் வாங்க லாகாது என்பது சாஸ்திரவிதியாதலா லப்படிச்சந்நியாசம் வாங்கின வனுக்கும் சந்நியாசம் கொடுத்தவனுக்கும் பிராயசித்தமுண்டே யென்று சொல்லிவிட்டு உனது பூர்வோத்திரத்தைச் சொல்லென்று கேட்டார். அப்படிக் கேட்கிறபோது அந்தத்தோஷமவருக்கே வந்து லபித்தது. உடனே அவர் தோஷம்நம்மிடத்திலிருக்கக் கண்ணுடியின் பேரிலே தோஷம்வைத்ததுபோல நாம் தானே பூர்வோத்திரத்தை நன்ருய் விசாரியாமல் செய்துவிட்டு இந்தத்தோஷத்திற்குப்பாத்திர மானேமேயென்றெண்ணிக்கொண்டு உனக்குத் தாய்தந்தையர் இருக்

கிறார்களாவென்று கேட்டார். தாயார் தகப்பனார் அண்ணன்மார்தம்பிமார் உறவின்முறையார்முதலிய சகலரும்இருக்கிறார்கள். ஆரிருந்தும் என் பிராணநாதனில்லாதபடியினாலே அநாதியும் பரதேசியுமானேனென்று சொல்ல - நல்லது உன்னுடைய தகப்பனாரண்டையில் என்னை அழைத்துகொண்டுபோவென - அவள் சீக்கிரமாய் நானே அவரை இங்கு அழைத்துக்கொண்டு வருகிறேனென்று போய்த் தகப்பனாரோடு நடந்த விருத்தாந்தமெல்லாம் சொல்லித் தகப்பனாரை அழைத்துக்கொண்டு வந்தாள். சித்தோபண்டிதர் ராமானந்த சுவாமிக்குச்சாஷ்டாங்கமாய்ச்சேவித்துச்சுவாமிகளேயெங்கேஇருந்து வருகிறீர்கள் எவ்விடத்துக்குப் போகிறீர்கள் என்று கேட்டதற்கு அவர் நம்முடைய ஆச்சிரமம் மஹாக்ஷேத்திரம் ஆகிய காசியில் இருக்கிறது. ராமேஸ்வர யாத்திரைக்குப்புறப்பட்டு இவ்விடம் வந்தேன். வந்தவிடத்தில் உம்முடைய குமாரத்தி தன்னுடைய பூர்வோத்திரங்களைச்சொன்னாள். அதினாலே காசிக்கு மறுபடியும் போகவேண்டியதாயிற்று. இந்தப்பெண்ணை அழைத்துக்கொண்டு நீரும் என்னோடுகூட வாருமென்றுசொல்லச் சித்தோபண்டிதர் சந்தோஷமாய் நல்லது சுவாமியென்று கூடப்புறப்பட்டு இருவரும் காசிக்ஷேத்திரத்துக்குப் போய்ச்சேர்ந்தார்கள். பிறகு ஸ்ரீ ராமானந்தர் தன்னுடையநூதன சிஷ சந்நியாசியாகிய விட்டோபாவை யழைத்து உனக்கு ஆருமில்லையென்று சொன்னாயே- உண்மைதானா இப்பொழுதாவது உள்ளதைச் சொல்லென்றுநயமாய்க்கேட்கஅப்பொழுதுவிட்டோபாவானவர்ராஜாநியாயம் கேட்கிறபோதுவந்துநிற்கின்ற குற்றவாளிபயப்படுதல்போலவும் நாடியைப்பரிக்ஷித்தவைத்தியன்கேட்கிறபோது அவபத்தியம்பண்ணினரோகியானவன் பயப்படுதல்போலவும் பிள்ளையினுடைய குற்றத்தைப் பார்த்துத் தகப்பன்தாய் கண்டிக்கிறபோது அந்தப்பிள்ளை பயப்படுதல் போலவும் விட்டோபா பயந்து ஸ்வாமி நான் பூர்வாசிரமத்தில் எனது எவ்வர்ணமான காலத்தில் ஸ்ரீக்குச் சந்தானமில்லை. அவளை த்துறந்துவந்து இவ்விடத்தில் சரண மடைந்தேனென்றார். அதற்கு ராமானந்தர் நல்லது நான் உன்னுடைய ஸ்திரீயை அழைத்துக்கொண்டு வந்திருக்கிறேன். அவளை நீ கூட அழைத்துக்கொண்டு சுவயஸ்தானுக்குப் போய்ச் சுகமாயிரு. இதுவிருத்தமாயிருக்கிறதே யென்று மனதிலே யெண்ணமலேதோ- காரணமிருக்கிறது என்றெண்ணிக்கொண்டு என்னுடைய ஆக்கினைப் பிரகாரமாக நடந்துகொள் உன்னையிருஷிகேசன் ரக்ஷிப்பானென்று சொல்லி உத்தரவு கொடுத்து அனுப்பிவிட்டார்.

அப்போது சித்தோபண்டிதர் மருமகனையும் மகளையும் ஊருக்கு அழைத்துக்கொண்டுவர இந்தச் செய்தியை உறவின் முறையார்கள் கேட்டுச்சிரித்து இவன் சந்நியாசியாகி மறுபடியும் சம்சாரத்தில்

எப்படிவரலாமென்று சொல்லுவாரும்அவனுடையபூர்வபாவம்மறுப டியுமவனைச் சம்சாரத்தில் இழுத்ததுஎன்பாரும்- இவன்மிகுந்தவிஷய இச்சையுள்ளவனென்பாரும்- அமிர்தபானம் பண்ணினவன் மறுபடி யும்விஷபானம்பண்ணஆசரித்தானென்பாரும்துரியமானஆசிரமத்தை விட்டுக்கோரமான சம்சாரமென்கிற காட்டிலே வந்து விழுந்தானென் பாருமாக இப்படிஅவரவர்களுக்குத் தோன்றினபடியெல்லாம்சொன் னாலும் விட்டோபாவானவர் சற்குருவாக்கினைச் சிரசில்வகித்துச் சித்தம்சலியாமல் பர்வதம்போலே யிருந்துவிட்டார். அவர்கள் இவர் களைச் சாதிப்பிரஷ்டர்களாக்கி விட்டார்கள். பிறகு ஆரணியத்தில் ஒருகுச்சுக்கட்டிக்கொண்டு உஞ்சவிர்த்திபண்ணி ஸ்ரீ ராமநாமதியா னம் பண்ணிக்கொண்டு பன்னிரண்டுவருஷம் சுகமாயிருக்கிற நாளை யில் ருக்குமாபாய் வயிற்றில் மூன்று பிள்ளைகளும் ஒருபெண்ணும் பிறந்தார்கள். அவர்களுள் முதல்பிள்ளை கைலாசவாசியான சிவன் அவதாரம். அவருக்குப்பெயர் நிவர்த்திதேவர். இரண்டாம்பிள்ளை வைகுண்டவாசியான ஸ்ரீமந்நாராயணன்அவதாரம். அவருக்குப்பெயர் ஞானதேவர். மூன்றாவதுபிள்ளைசத்தியலோகவாசியான பிர்மாவின் அவதாரம். அவருக்குப்பெயர் சோபானுதேவர். நாலாவது பெண் ஆதிமாயையின் அவதாரம். அவளுக்குப்பெயர் முக்தாபாய். இப் படிக்கு நால்வர்க்கும் லோகபாவனமான நான்குபெயர்வைத்தார்கள். இந்தஅத்தியாயம் முற்றுப்பெற்றது. இனிமேல்வருகிற அத்தியாயம் அத்தியந்தரசமுடையது. ஸ்ரீகிருஷ்ணயபரமகுரவேநம: ஸ்ரீரங்கநா யகீநம: ஆழ்வார் திருவடிகளேசரணம்.



ஒன்பதாவதுஅத்தியாயம்.



## ஞானதேவர் எருமைக்கடாவை வேதஞ்சொல்லுவித்தது முதலானசரித்திரம்.



ஸ்ரீ ராமானுஜ ஜகத்திரய குரவே நம: இந்த அத்தியாயத்தின் பிரசங்கத்தைக் கேட்கிற பாக்கியசாலிகளே தன்னியர்கள் ஏனென் றால் ஒருவனுக்கு அனந்தஜன்மாந்தரங்களில் செய்தபுண்ணியங்களி

ஞலே சாதுக்களின் சரித்திரங்களைக் கேட்க மனதுண்டாகும். அப்போது அவனுடைய விகற்பங்களெல்லாம் துடைபட்டுச் சித்தசுத்தியும் சாந்தியும் ஞானமும் வைராக்கியமும் உண்டாகும். ருக்குமணி காந்தனும் அவர்கள் சமீபத்தில் அகண்டமாய் வாசம்பண்ணுவன். கேளுங்கள் சாதுக்களே நிவர்த்திதேவர்-ஞானதேவர்-சோபானுதேவர்-முக்தாபாய் இவர்கள் நாலுபேரும் அவதரித்து நாளுக்குநாள் வளர்ந்துகொண்டு வந்தார்கள். அப்பொழுது லோகத்தார் இவர்களை மிகவும் நிந்தித்து இவர்கள் முகத்தைப்பார்க்கலாகாதென்றும் இவர்கள் அவகுலத்திலே ஜனித்தார்களென்றும் நானுவிதமாகச்சொல்லி ஜாதிப்பிரஷ்டம் பண்ணிவிட்டு இருந்தார்கள். இப்படியிருக்கிறசமயத்தில் விட்டோபாவினுடைய ஸ்திரீ ருக்குமாபாய் தன் புருஷனைப் பார்த்துச்சுவாமி நம்முடைய புத்திரர்களுக்குப் பிராமணகர்மம் இல்லாமலிருக்கிறது எனக்கு மிகவும் விசனமாயிருக்கிறதென்று சொல்ல அந்தப் பிராமணன் பிள்ளைகளை அழைத்துக்கொண்டு பிராமணர்களுடைய சபையிலேபோய்ச் சேவித்துச் சுவாமிகளே யென்பேரில் கிருபைசெய்து நான்பண்ணின அபராதங்களை க்ஷமைபண்ணி அடியேனைத் தங்களுடைய தாசனுக்கித தர்மசாஸ்திரதறின்படிக்கு எங்களுக்குப் பிராயச்சித்தம் கொடுக்கவேண்டுமென்று சொல்லத் தர்மசாஸ்திரவல்லவர்கள் இந்த வசனத்தைக்கேட்டு உங்களுக்குப்பிராயச்சித்தம்தேஹாந்தியத்திலல்லாமல்இப்போதுஒன்றையுங்காணேம். உங்கள் தேகத்தைக்கொண்டுபோய்த் திருவணிசங்கமத்திற் போடவேண்டுமென்றுசொல்ல அந்த வார்த்தையைக்கேட்டுப்பிராமணன் மனதிலே விசனத்தையடைந்து தன் ஸ்திரீயையும் புத்திரர்களையும் விட்டுவிட்டுப் புறப்பட்டு போய்விட்டார். பிராமணர்கள் ஆச்சரியப்பட்டு இவர் அனுதாபத்தினுலே யெல்லாவற்றையும் துறந்து போய்விட்டார். அனுதாபத்துக்குமிஞ்சினபிராயச்சித்தமில்லையென்றார்கள். மறுநாள் நிவர்த்திதேவர் முதலானவர்கள் பிராமணர்களண்டைக்கு வந்து எங்கள் தகப்பனுர்தான் போய்விட்டாரே யெங்களுக்கென்ன பிராயச்சித்தம் உண்டென்று கேட்டதற்கு நீங்கள் பைட்டிணிபுரத்துக்குப் போய்ச்சேருங்கள் அவ்விடத்திலே பலசாஸ்திரிகள் இருக்கிறார்கள். அவர்கள்தான் உங்களுடையபாபத்திற்குவிமோசனம்சொல்லச் சமர்த்தர்களாதலால் அவர்கள் கைப்பட ஒரு நிருபம் வாங்கிக் கொண்டுவந்தால் நாங்களும் அந்தப்படி நடந்துகொள்ளுகிறோமென்றார்கள். அப்பொழுதுநிவர்த்திதேவர்ஞானதேவரைப்பார்த்துப்பைட்டிணிபுரத்திற்குப் போய் நாம் என்ன ஜாதியென்று சொல்லுவோம். நாம் பிர்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரனுமல்லாமல் அவிநாசியமாய்ப் பரிபூரணமாய் நிஜப்பிரபோதரூபமாயிருக்கின்றோம். நாம் பிரிதிவி - அப்பு - தேயுவு - வாயுவு - ஆகாசமாகியபஞ்சபூதமுமன்று பஞ்சதன்

மாத்திரைகளுமன்று - விராட்டு இரண்ணியகர்ப்ப அவ்வியாகிர்த ரூப முமல்ல - நிராகாரமுமல்ல - ஸாகாரமுமல்லவென்று சொன்னதற்கு ஞானதேவர் ஞானவானுனாலும் ஜீவன்முக்தனுனாலும் விதிதர்மங்களை விடலாகாது. விதிதர்மங்களை ச்சிரத்தையோடிருந்து அனுசரித்துப் பிறனுக்கும் காட்டவேண்டும். ஸ்ரீமந்நாராயணமூர்த்தி வேதத்தில் பிரம்ம - க்ஷத்திரிய - வைசிய - சூத்திராராகிய இந்த நாலு வர்ணத்தா ரும் அவரவர்கள் வர்ணாசிரம தருமங்களின்படியே செய்யவேண்டு மென்று நியமனம்பண்ணியிருக்கிறூர். தர்மசாஸ்திரங்களிலுமிப்படி யேவிதிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லச் சோபானுதேவர் நமக்குச் சாதிகுல வர்ணாசிரமங்களையிட்டு ஆகவேண்டியதென்ன இருக்கின் றது ஸ்ரீ ஹரியினுடைய சரணாரவிந்தபக்தியைத்தவிர வேறு ஒன்றும் கொஞ்சமும் வேண்டியதில்லை - தூர்வாசர் - வசிஷ்டர் - வால்மீகர் - கௌதமர் - வியாசர் - வாமதேவர் - அகஸ்தியர் - மாண்டவர் முதலா னவர்கள் புண்ணிய சுலோகர்கள் - மகாசாதுக்கள் - பக்தியினுலேயே மேன்மையடைந்தவர்கள். இவர்கள் உத்தமகுலமென்று எந்தச்சாஸ்தி ரத்திலே சொல்லியிருக்கிறது - இல்லையே. ஆகையால் ஸ்ரீஹரியினுடை யசரணாரவிந்தத்தை அடைகிறதற்குப் பகவத்பக்தியைத்தவிர வேறு ஒரு சாதனமுமில்லை. உத்தமமான குலத்தில் பிறந்து சகலசாஸ்திர மும் வந்து ஒரு ஹரிபக்தியில்லாமல் போனுல் அவர்கள் கடைத்தேற மாட்டார்கள் என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டு பிறகு பிரா மணர்களிடத்திலிருந்து பைட்டிணிபுரத்துச் சாஸ்திரிகளுக்கு ஒரு ஓலையும் வாங்கிக்கொண்டு அவர்களைச் சேவித்துவிட்டு அவ்விடம் விட்டுப்புறப்பட்டுக் கோதாவரி தீர்த்தத்திற்குவந்து ஸ்நானம்பண்ணி பைட்டிணிபுரத்தூருக்குச் சமீபத்தில் பிரமசபுரிக்குவந்து பிராமணர்களை நமஸ்காரம்பண்ணி ஓலையைக்கொடுத்தார்கள். அவர்கள் சகல விருத் தாந்தங்களையும் அறிந்துகொண்டு இவர்கள் சந்நியாசி ஆசிரமத்தில் பிறந்தபிள்ளைகளானபடியினுலேயிவர்களுக்குப்பிராயச்சித்தம்கூடாது ஏனெனில் சூத்திரன் கங்காஸ்நானம் பண்ணினுல் அவன் பிராமணு வானு - ஓட்டிலே பரிசக்கல் பட்டால் பொன்னுகுமோ - வறுத்தவிதை பயிராகுமோ - ஆயுசு ஈனத்திற்கு ஔஷதம் பலிக்குமோ, இல்லையே. அப்படிப்போலே தீர்த்த விரதங்களினுல் உங்களுக்குப் பிராயச்சித்தம் இல்லையென்று சொல்லிவிட்டு ஆனுலிப்படிக்கொத்தவர்களுக்கு வேத சாஸ்திர கர்ப்பத்திலே ஒரு உபாயம் சொல்லியிருக்கிறது. அந்தப் படியே யிவர்கள் நடந்தால் பிராயச்சித்தம் தேவையில்லை. அதென்ன வென்றுல் ஸ்ரீ ஹரியின் சரணுகதி புகுந்து சர்வ பூதங்களிடத்திலும் சமானமாயெண்ணி பஜனையும் வந்தனமும் பண்ணவேண்டுமென்ப தாம் ஸ்ரீ ஹரியானவர் சகல பூதங்களிலும் வியாபகனுய்ப் பரிபூரண னுய் நிச்சயமாய் இருக்கிறுரென்று எண்ணவேண்டுமென்பதுமா

மென்றுசொன்னார்கள். இந்த வசனத்தை யிவர்கள்நாலுபேருங்கேட்டு எங்கள் மனதிலிருந்தபடியே விதிக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லிச் சந்தோஷமடைந்தார்கள். பிறகு பிராமணர்கள் உங்களுடைய நாமதேயமென்னவென்றுகேட்க இவர்களுடைய நாமதேயங்களைச்சொன்னார்கள். அப்பொழுது அவர்கள் ஆச்சரியப்பட்டு உங்களுக்குள்ளென்ன நிமித்தம்ஞானதேவரென்றுநாமகரணம்பண்ணியிருக்கிறது. வேதாப்பியாசம்பூரணமாய் வருமா? ஷட்சாஸ்திரசம்பத்தையுடையவர்களா? வித்பந்நர்களா? அப்படியில்லாமல் நீங்களிவ்விதமானபெயரை வைத்துக்கொண்டிருத்தல் விரக்தியில்லாத ஞானம்போலும் சவுரியமில்லாத சூரன்போலும் வீண்பெரியதனமாகத் தோற்றுகிறதே என்று நானாவிதமாக சொல்லிக்கொண்டிருக்கையில் ஒரு துலுக்கன் ஓர்எருமைக்கடாவின்பேரில் பக்காளி போட்டுக்கொண்டு வந்தான். அதைப் பிராமணர்கள் கண்டு ஞானதேவரைப் பார்த்து நீங்கள் ஞானதேவரென்று பெயர் வைத்துக்கொண்டிருப்பதுபோல இதோ வருகிறதே யிந்தக்கடாவுக்கும் நாங்கள் ஞானேஸ்வரனென்று பேர் வைக்கிறோமென்றார்கள். அதை ஞானேஸ்வரர் கேட்டுக்கைகூப்பிக்கொண்டு வினயத்துடனே ஓ சுவாமிகளே அப்படியே செய்யலாம் அந்த எருமைக்கடாவுக்கும் எங்களுக்கும் கொஞ்சமாகிலும் பேதமில்லை. ஸ்ரீதரனென பரமாத்துமா ஒருவனே சர்வ தேகங்களிலும் சர்வ பூதங்களிலும் வியாபகமுடையவன். பொன் ஒன்றே பலவித பூஷணங்களாகத்தோற்றுகிறதுபோல அவனே சர்வசிருஷ்டிகளாகவுமிருப்பானென்று சொல்ல - இந்தவார்த்தையைப்பிராமணர்கள் கேட்டு இது வாசாஞ்ஞானம் - நல்லது அப்படியானால் இந்த எருமைச்கடாவை அடித்தால் உனக்குத் தழும்பு காணவேண்டுமே என்று சொல்லித் துலுக்கனைக்கொண்டு கடாவை யடிக்கச்சொன்னார்கள். அப்பொழுது ஞானேஸ்வரர் முதுகிலேயடிபட்டதுபோலத்தத்தளித்துநடுங்கினார். தழும்புங்கிளம்பிற்று. இவைகளைப் பிராமணர்கள் பார்த்து உனக்கும் கடாவுக்கும் லேசமும் பேதமுமில்லாதபொழுது இதின் வாயினாலே வேதத்தையுஞ் சொல்லுவிக்கவேணடும் அப்பொழுது முற்றுமுண்மைதானென்றார்கள். அப்போது ஞானேஸ்வரர் எருமைக்கடாவருகில் வந்து தனது அஸ்தத்தை அதின் சிரசில் வைத்து அப்பா வேதங்களைச் சாங்கோபாங்கமாய்ச் சொல்லி இந்தப் பிராமணர்களைச் சந்தோஷப்படுத்தென்று சொல்ல உடனே அந்த எருமைக்கடாவானது நாலு வேதங்களையும் வியாக்கியானத்தோடு சொல்லிற்று- சகலரும் ஆச்சரியப்பட்டுச் சந்தோஷமாய் இப்படிக்கொத்த அதிசயத்தைப் பார்த்ததுமில்லை கேட்டதுமில்லையென்று ஒருவரோடொருவர் சொல்லிக்கொண்டார்கள். அந்தச் சமயத்தில் ரோகிக்கு அமிர்தங்கிடைத்ததுபோலும் - அந்தனுக்குச் சூரியோதயம் காணப்பட்டதுபோலும் - ஊமையனுக்குச

சரஸ்வதி பிரசன்னம் போலும் இந்தப்பிராமணர்கள் அஞ்ஞானம்போய் ஓ! ஓ! நாம் வேதசாஸ்திரங்கள் புராணங்கள் தர்க்கமீமாம்சங்கள் ஆகிய விவற்றையெல்லாம் படித்திருந்தோமானாலும் இந்த எருமைக்கடாவுக்கு அநுக்கிரகம் செய்யும் சாமர்த்தியத்தை யடையவில்லையே-இவர்கள் பண்ணின அதிசயம் பிரமதேவனாலும் ஆகாது-இவர்கள் மூன்று பேரும் அவதாரமூர்த்திகள்-அந்தப் பெண்குழந்தை ஆதிமாயை இவர்களைக்கண்டால் சகல மகாபாபங்களும் ஓடிப்போய்விடும். கங்கா தீர்த்தத்திற்கு இவர்களுடைய பாதஸ்பரிசத்தினாலேயே பவித்திரமாம். இப்படிக்கொத்தவர்களுக்குப் பிராயச்சித்தமில்லை. இவர்களே இந்த மூன்று லோகத்திலேயும் சிரேஷ்டர்கள் பிராமணோத்தமர்கள். இவர்களைப் பெற்றவர்களே தன்னியர்கள். இவர்கள்தான் நிசப்பிராமணர்கள். நாம் சம்சாரமென்கிற காட்டிலே ஆசையென்கிற கொடியினால் சிக்குண்டு வாசாஞானமும் பரதிரவிய அபகார எத்தனங்களுமாகிய சேஷ்டையோடு கிடக்கிறோமென்று சொல்லி ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது ஞானதேவர் ஓ சுவாமிகளே! நாங்கள் அஞ்ஞானிகள் இவையெல்லாம் சுவாமிகளுடைய திருவடிப் பிரபாவத்தினாலேயே நடந்தகாரியங்களா மென்றுசொல்லப் பிராமணர்கள் எல்லாரும் பிரேமள பக்தியோடு இவர்களே தன்னியர்கள் இவர்களே விஷ்ணு பக்தர்கள் இவர்களே மகா விரக்தர்களென்று ஸ்தோத்திரம் பண்ணிக் கூடவே வைத்துக்கொண்டு அன்பாய் நடத்தி வந்தார்கள்.

அவ்விடத்திலே ஒரு வீட்டில்குடி யிருந்துகொண்டு ஹரி கீர்த்தனம் பண்ணிச் சகல சனங்களுக்கும் ஹரி பக்தி வரும்படியாகச் செய்துகொண்டிருக்கிற நாளையில் ஒரு அதிசயம் நடந்தது. அதாவது இவர்கள் நான்குபேரும் குடியிருந்த வீட்டுப்பிராமணன் சுசீலன் சாது சங்கமப்பிரியன் அவன்தன்னுடைய பிதிர்க்களுக்குச் சிரார்த்தம் செய்ய வேண்டிய நாள்வந்தது. அப்பொழுது அந்தப் பிராமணன் சாப்பாட்டுக்கு அந்த ஊர்ப் பிராமணர்களை அழைத்ததற்கு அவர்களில் சில அஞ்ஞானிகள் உன் வீட்டில் சந்நியாசி புத்திரர்கள் குடியிருக்கிறபடியினாலே நாங்கள் சாப்பாட்டுக்கு வரமாட்டோமென்றார்கள். சில பிராமணர்கள் சஞ்சலத்தினாலே வரமாட்டோ மென்றார்கள். இதனாலே அந்த வீட்டுப் பிராமணன் விசனப் பட்டுக் கொண்டிருக்கையில் ஞானதேவர் ஏனய்யா விசனமா யிருக்கிறீரென்று கேட்டதற்கு ஓ ஞான சிரோமணி நான் இன்றையத்தினம் என்னுடைய பிதிர்க்களுக்குச் சிரார்த்தம் செய்யவேண்டியது. அதனால் பிராமணர்களைச் சாப்பாட்டுக்கு வரச் சொல்லி அழைத்தால் வரமாட்டோ மென்கிறார்கள். அதனிமித்தம் விசனப் படுகிறே னென்றார். அதற்கு ஞானதேவர் ஐயா நீர்

விசனப்படாதேயும் சந்தோஷமாய்ச் சமையல் பண்ணச் சொல்லும். உம்முடைய சாக்ஷாத் பிதிர்க்களே வந்து சாப்பிடுவார்களென்று சொல்லப் பிராமணன் அதை நம்பி அந்தப்படியே சமையல் பண்ணுவித்துக் கொண்டு ஞான தேவருக்குச் சொல்லினுன். ஞானதேவர் மந்திராக்ஷதையை யெடுத்து ஜபித்துப்போட அந்தப் பிராமணனுடைய தகப்பன் பாட்டன் முதலான பிதிர்க்கள் நிசரூபமாய் வந்து விட்டார்கள். உடனே அவ்வீட்டுப் பிராமணன் பயபக்தியோடு அவர்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் பாத'பூஜை முதலியவைகளைச் செய்து இஷ்டான்னங்களைப் பரிமாறப் பிதிர்க்கள் சாப்பிட்டுக் கொண்டிருக்கிற சமயத்தில் ஊரிலேயிருக்கிற பிராமணர்கள் இன்றைக்குப் பிதிர்க்களுக்கு இந்தப் பிராமணன் என்ன செய்கிறுன் நேரமாயிற்றே யென்று பக்கத்திலேவந்து விசாரிக்கிறபோது சாக்ஷாத் பிதுர்க்களே வந்து சாப்பிடுகிறதாகக் கேள்விப்பட்டு ஆச்சரியமடைந்து உள்ளே வந்து பிதிர்க்கள் பந்தியாயிருந்து சாப்பிடுகிறதைப் பார்த்து ஊரிலேயிருக்கிற பிராமணர்க ளனைவருக்கும் சொல்ல அவரவர்களும் வந்து பிரத்தியக்ஷமாய்ப் பார்த்து ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கையில் பிதிர்க்களனைவரும் பரிபூரணமாய்ப் போஜனம் பண்ணிப் பிற்பாடு தாம்பூலசந்தன புஷ்ப தெக்ஷிணைமுதலானவைகளைப் பெற்றுக்கொண்டு கர்த்தாவானவன் பிரதக்ஷணம் வந்து நமஸ்காரம் பண்ணி ஸ்தோத்திர மந்திரத்தைச் சொன்னவுடனே அதிரிசியமானுர்கள். இந்த அதிசயத்தைப் பார்த்துக்கொண்டு பைட்டினிபுரத்திலேயிருந்த பிராமணர்களனைவரும் ஆச்சரியப்பட்டு ஞானதேவர் அகடிதமான கிரியையைப் பண்ணினுர். சாக்ஷாத் பிதிர்க்களையே அழைப்பித்துப் போஜனம் பண்ணுவித்தார். இந்த ஆச்சரியத்தைக் கண்டதுமில்லை கேட்டதுமில்லை. நாம் கர்மத்தின் அபிமானத்தினுலே கெட்டோம் நைவேத்தியத்தைச் சுவாமியேவந்து சாப்பிட்டால் குருக்கள் எப்படி அன்னத்தை இழந்து போவானே அதுபோல அந்தப்பிராமணன் வீட்டில் சிரார்த்தத்திற்குப் பிதிர்க்களே வந்துவிட்டபடியால் நாம் நம்முடைய போஜனத்தை யிழந்தோம். இது என்ன அதிசயம்-இவர்கள்தான் பாக்கியசாலிகள். இவர்கள் மூன்றுபேர்களும் திரிமூர்த்திகள் முக்தாபாய் விஷ்ணுவின்மாயையே இவர்கள் மூன்று லோகத்தையும் பவித்திரம் பண்ணுகிறவர்கள் இவர்களுக்குப் பிராயச்சித்தமே வேண்டியதில்லை என்று சகல விருத்தாந்தங்களையும் பிராமணர்களுக்குத் தெரியும்படியாக யெழுதி அந்தஓலையைச் சோபானுதேவர் கையிலே கொடுத்து விட்டார்கள். அந்த எருமைக்கடாவானது அன்றுமுதல் வேதங்களைச் சொல்லுகிறதென்று ஞானதேவ ரறிந்து நிவர்த்திதேவரோடு இந்த எருமைக் கடாவானது மகாரகசியமான வேத வேதாந்த அர்த்தங்களை யெல்லாம் பகிரங்கமாய்ச் சொல்லுகிற படியினுலே கர்மிகள் கெட்டுப்போ

வார்கள். எக்கியம் யாகம் முதலியவை முழுகிப்போம். ஆகை யால் அந்த எருமைக்கடாவை நாம் கூடவே வாங்கிக்கொண்டு போகவேண்டுமென்று சொல்லிவிட்டுத் துலுக்கனண்டையில் போய் எருமைக்கடாவை வாங்கிக்கொண்டு பிராமணர்களிடத்திலே வந்து உத்தரவு கேட்கப் பிராமணர்களும் ஒரு நாழிகை வழிதூரம் வந்து ஆனந்தத்தோடு வழிகூட்டி அனுப்பிவிட்டார்கள்.

இவர்கள் நாலுபேரும் எருமைக்கடாவின்மேல் மூட்டைகளை ஏற்றிக்கொண்டு ஹரியினுடைய கல்யாணகுணத்தை வர்ணித்துக்கொண்டு காலயக்ஷேத்திரத்துக்குவந்து வாசம் பண்ணினார்கள். அவ்விடத்தில் சிலநாள் பிரவரததீர்த்தத்தில் ஸ்நானம் பண்ணிக்கொண்டிருக்கையில் மோஹன ராஜனைக்கண்டு ஞானேஸ்வரர்பகவத் கீதைக்கு ஜடமூட அஞ்ஞானிகளுக்குச் சுலபமாய்த் தெரியும்படியாய் உரைபண்ணினார். அது முன்னமே தங்கம் அதிலே ரத்தினம் இழைத்ததுபோல் இது எல்லாருககும் தெரியும்படியாகச் செய்யப்பட்டிருந்தது. அஞ்ஞானிகளும் பக்த ஜனங்களும் கடைத்தேறும் பொருட்டு ஞான தேவர் நிவர்த்தி தேவருடைய அனுமதியினாலே சுவாத்தும புத்தியை விசாரித்து பிர்மதேவருடைய அகம்போகிற நிமித்தம் ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமா எப்படிப்பசுக்களையும் கன்றுக்களையும் கோபாலப் பிள்ளைகளையும் ரக்ஷித்தாரோ அப்படி லோகத்திலிருக்கிற உன்மத்த பாஷாண்டாதி மதஸ்தர்களுடைய அகங்கார நிவர்த்தியைக்குறித்து அமிர்தானுபவகிரந்தம் பண்ணினார். அந்தஸ்தலத்தில் மாலசாதேவியை நமஸ்காரம் பண்ணிவிட்டு ஸ்வய தேசத்துக்கு வருகிறபோது அயான்முகையென்கிற கிராமத்திலே அந்த எருமைக்கடா பரமபதமடைந்தது. அதற்குச் சாமாதி வைத்துப் பூசையும்பண்ணிச் சோபாவென்று பேரும் வைத்துவிட்டுப் போனார்கள். அந்தச் சமாதியின் இடம் இப்பொழுதுமிருக்கிறது. அந்தச் சாதுக்கள்நால்வரும் பின்ஜனன பூமியான அழகாபுரிப் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார்கள். அவ்விடத்திலேயிருக்கிற பிராமணர்கள் பைட்டினி புரத்திலே நடந்த அற்புதங்களைச் சவிஸ்தாரமாய்க் கேட்டிருந்தபடியாலனைவருமிவர்களை எதிர்கொண்டுவந்து யோகக்ஷேமங்களை விசாரித்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டார்கள். சோபானுதேவர் அவர்கள் கொடுத்தநிருபத்தைக் கொடுக்க வாங்கிப் பார்த்துக்கொண்டு இவர்கள் அவ்விடத்திலே காண்பித்த அகடிதமானகாரியங்களை முன்னமே கேட்டிருந்தாலும் பத்திரமுகமாய்ச் சவிஸ்தாரமாய்த் தெரிந்துகொண்டு மஹா சந்தோஷத்தோடும் ஆச்சரியத்தோடும் பிரஹஸ்பதியினுடைய ஆக்ஞையை யிந்திராதி தேவர்கள் மானித்து நடப்பதுபோல விந்தப் பிராமணர்கள் பைட்டினி புரத்திலேயிருக்கிற பிராமணர்களுடைய நிருபத்தை ஏற்று அதின்படி நடந்து இவர்கள் நாலுபேரையும்

ஈசுவர அவதாரமென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு ஹரி கீர்த்தன பஜன பக்திசிரவணாதிகளைப் பண்ணிக்கொண்டுவந்தார்கள்.

இப்படியிருக்கும் நாளில் அவ்வூரிலுள்ள விசோபாகேசனென்கிற பிராமணன் மஹாகுடிலன் அவன் மாத்திரம் இவர்கள் நாலுபேரையும் சந்நியாசி பிள்ளைகளென்று தூஷணம்பண்ணிக்கொண்டு வருவதன்றிப் பிரகலாதனைக் கண்டமாத்திரத்திலே இரண்யகசிபன் மனதிலே தப்த மாய்ப்போவதுபோலவும்-பாண்டவர்களுடைய கீர்த்தியைக் கேட்ட வுடனே துரியோதனன் அசூயைப்படுவதுபோலவும்-பூரண சந்திரனைப் பார்த்த சோரர்கள் தத்தளிப்பதுபோலவும் இந்த விசோபாவென்கிற சவுளிக்காரன் இவர்கள் நாலுபேரையும் பார்த்த உடனே அசூயையி னாலே தாபப்படுவான். எந்நேரமும் துவேஷித்து நிந்தனைகளையே சொல்லிக்கொண்டிருப்பான். இப்படி யிருக்கிறபோது ஒரு காலத்தில் தீபாவளிப் பண்டிகைவந்தது. அப்பொழுது நிவர்த்தி தேவர் முக்தாபா யோடு ஓ அம்மணி இன்றைக்குப் பண்டிகையானபடியினாலே பக்ஷணங்கள் பண்ணிவைக்கவேண்டுமென்று சொன்னார். நல்லதென்று முக்தாபாயானவள் சகல சாமான்களையும் சேகரம்பண்ணிவிட்டுப் புதுப் பாண்டங்கள் வாங்கிக்கொண்டு வருகிற நிமித்தம் குயவன் வீட்டுக்குப் போனாள். போகும் வழியில் விசோபாவைக்கண்டு ஓட அவன் வந்து மறித்துக்கொண்டு ஏன்ஓடுகிறாய் என்ன காரியமாய்ப்போகிறாய் சொல் லென்று அதட்டிக்கேட்க முக்தாபாயானவள் புலியைக்கண்ட பசுவைப் போலும்- ராஜாளியைக்கண்ட கொக்கைப்போலும்- வேடனைக்கண்ட மானைப்போலும் - சிம்ஹத்தைக்கண்ட ஆனையைப்போலும் - நடுங்கிக் குயவன் வீட்டுக்குப் போய்ப் பாண்டம் வாங்கிக்கொண்டுவந்து மூத் த தமையன் ஆக்கினைப்படிக்குப் பக்ஷணம் பண்ணப்போகிறேனென் றாள். அதைக் கேட்டு விசோபாவானவன் அவளைத் தாடையிலே அடித்து விட்டுக் குயவன் வீட்டுக்குப்போய் இவளுக்குப்பாண்டம் கொடுக்காதே. நீ கொடுத்தாயானால் உன்மேல் எனக்கு வரவேண்டிய திரவியத்தை எல்லாம் இப்போதே கொடுக்கச்சொல்லித் தொந்தரவு செய்வேனென்றான். இந்தச்செய்தியைக் குயவன் கேட்டு விசன மாய்வரவுக்குமேல் கடன் வாங்கிச் செலவழிக்க நேரிடுகிறதும் சரீ ரத்தில் வியாதி வருகிறதும் ஈசுவரனுடைய செயலே யொழிய வேறில்லை. அன்றியும் கிரகஸ்தாச்சிரமத்தில் தரித்திரமும் விருத்தாப் பிய திசையில் புத்திர சோகமும் துஷ்டனிடத்தில் கடன் வாங்குகிற தும் பொல்லாதது. ஆதலால் விதி உள்ளபடியே நடக்கிறதென்று விசோபாவுடைய வார்த்தைக்குப்பயந்து முக்தாபாய் பாண்டம் கேட் டதற்குக் கொடுக்காமல் இல்லையென்று சொல்லிவிட்டான். முக்தா பாயானவள் பாண்ட மகப்படாமையினாலேவீட்டுக்கு வந்து விசனப்

பட்டுக்கொண்டிருக்கிறபோது ஞானேஸ்வரர் பார்த்துக் கண்களைத் துடைத்து ஏனம்மாள் அழுகிறாயென்றுகேட்க - நிவர்த்திதேவர் பக்ஷணம் பண்ணச்சொன்னதும் நவபாண்டம் வாங்கப்போகும் வழியிலே விசோபா வந்து கன்னத்திலே அடித்ததும் பாண்டம் கொடுக்க வேண்டாமென்று குயவனுக்குச் சொன்னதுமாகிய விவைகளைச் சொல்லி விசனப்பட்டாள். அந்த வேளையிலே விசோபாவென்கிறவன் பக்கத்திலே மறைவாயிருந்து இவைகளைக் கேட்டுக்கொண்டிருந்தான். ஞானேசுவரர் தங்கைக்குச் சமாதானமாக அம்மணி அவனுடைய சுபாவ குணத்துக்கு நாமென்ன செய்யலாம்-நாமனுபவிக்க வேண்டிய விதியிருந்ததென்றெண்ணிக்கொண்டு நீ பண்ண வேண்டிய பக்ஷணங்களை எல்லாம் என் முதுகின் பேரிலே பண்ணு என்று சொல்லித் தன் யோக மார்க்கத்தினாலே ஜடராக்கினியைக் கிளப்பி வாயிலே சுவாலை புறப்படவும் கண்கள் சிவக்கவும் முதுகு கொதிக்கவும் செய்து கொண்டு குனிந்தார். அந்த அம்மாள் பக்ஷணங்களை முதுகின்மேல் பண்ணிப்போட்டுப் பக்குவமாயெடுத்து அடுக்கி வைத்துக்கொண்டாள். இவர் ஜாடராக்கினியை அடக்கி விட்டபிறகு மற்றவர்களும் வந்துசேர்ந்து சுவானு போகமென்கிற நல்ல பாத்திரத்தில் சத்பிரேமள பக்தி யென்கிற பாலைவிட்டுச் சாந்தி சுகமென்கிற சர்க்கரையைக் கலந்து சுவானந்த மென்கிற ரொட்டியை நொருக்கிப் போட்டுச் சுற்றிலும் உட்கார்ந்துகொண்டு ஆனந்தமென்கிற ருசியை பக்ஷிக்க ஸ்ரீ ஹரியே போக்தாவென்று கவளத்துக்குக் கவளம் கோவிந்தஸ்மரணைப் பண்ணிக்கொண்டு சாப்பிடத்தொடங்கினார்கள். பக்கத்திலே நின்று இந்த ஆச்சரியங்களைப் பார்த்துக்கொண்டிருந்த விசோபாவென்கிறவன் மனதிலனுதாபமாய் ஓ! ஓ! நாம் மூடன் அபாக்கியன் இவர்கள் ஈஸ்வரமூர்த்திகளென்று அறியாமல்போனோம். இரத்தினராசிகளை அபாக்கியன் வளையற்கல்லென்று நினைத்ததுபோலும்- கற்பகவிருக்ஷத்தை மூடனானவன் கள்ளியென்று வெட்டினதுபோலும்- அமூல்லியமான ரத்தினம் குருடன்கையிலகப்பட்டு அவன் கல்லென்று எறிந்ததுபோலும்- ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமாவைத் துரியோதனன் நம்முடையபந்துவானயாதவன் என்று எண்ணினதுபோலும்-உன்மத்தனும் மூடனும் அஞ்ஞானனுமாகிய நான் இந்தப் புண்ணிய சுலோகர்களைப்பிழைபடுத்தினேனென்று எண்ணி அவர்களைச் சரணம் புகுந்து அவர்களுடைய கிருபைக்குப் பாத்திரனாகவேண்டுமென்று நிச்சயம் பண்ணிக்கொண்டு உள்ளே சாப்பிடுகிறவர்களுக்குமுன்னே வந்துசாஷ்டாங்கமாகச் சேவித்து நின்றான். அப்போது ஞானேஸ்வரர் தான் சாப்பிடுகிற போஜன பாத்திரத்தை மறைத்துக்கொள்ள விசோபாவென்கிறவன் பருந்து அறைந்துகொண்டுபோவதுபோல அந்தப் பாத்திரத்தைப் பறித்துக்கொண்டு அதிலேயிருந்தவைகளைப் பக்ஷித்து

விட்டான். ஞானதேவர் அவனைப்பார்த்து நீ கேசர நாமமுடைய வனாய்ப் போவென்றுசொல்ல இதுவே உபதேசமென்று எண்ணி-அவித்தையை வேரோடு அறுத்துச்சமரசமாய்ச் சொரூபத்தில் அபின்னமானான். பிறகு இத்தன்மையை யடைந்த இவன் கைகூப்பிக்கொண்டு ஞானதேவருடையசரணாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாய்ச் சேவித்தான். அப்போது ஞானதேவர் இவனுடைய அந்தரங்கமறிந்து அவன் சிரசில் அபய அஸ்தத்தை வைத்துக் கிருபை பண்ண அவன் மஹா சாந்த நிலையை யடைந்தான். அவனைப்பார்த்து ஜனங்கள் நாரதபகவானைக் கண்ட வேடனான வால்மீகர் தமோ குணத்தை விட்டு மூன்று லோகத்திலு மெப்படிப் பூசிதரானாரோ அப்படிக்கு இந்த விசோபா ஞானதேவருடைய பிரசாதத்தினாலே மேன்மையடைந்தானென்று சொல்லி அன்றுமுதல் பக்தகிரேசனனார் என்றும் விசோபாகிரேசனனென்றும் அழைக்கத்தலைப்பட்டார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியாயத்தைச் சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் பரமஞானத்தையடைந்து பாகவதோத்தமர்களாய் அளவற்ற பாக்கியத்தையடைவார்கள். ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிர்மணேநம:.

## பத்தாவது அத்தியாயம்.

# ஞானதேவர் நாமதேவருடன் தீர்த்த யாத்திரை செய்த சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரபிர்மணேநம: இந்தக்கதாமிர்தத்தைப் பானம் பண்ணினவுடனே ஆனந்தத்தால் பரவசமானால் அதன்தன்மையை யெவ்வாறு சொல்லக்கூடும். சாதுக்களின் சரித்திராமிர்தத்துக்குத் திருஷ்டாந்தம் ஒன்றுமில்லை யானாலும் ஒருதேசத்திலே துவாதச வருஷம் அனாவிருஷ்டியாய் அந்தத்தேசத்து ராஜாவும் பிரஜைகளும் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில் ஸ்ரீ ஹரியினுடைய கிருபையினாலே அத்தேசத்திலே மேகங்கள் அமிர்தவருஷம் அபாரமாய் வருஷித்து நதிகளெல்லாம் பூரணமாய்ப் பெருகிவந்து ராஜாவினுடைய தோட்டத்தில் கல்பகவிருக்ஷம் அகஸ்மீகமாய்வந்தால் உண்டாகும் ஆனந்தத்தை ஒப்புச்சொல்லலாம். கேளுங்கள் ஓ பாக்கியசாலிகளே ஞானதேவர் பண்டரிபுரத்துக்குவந்து நாமதேவரைக்காண வேண்டுமென்று அபேக்ஷையாகி அவர் வீட்டுக்குப்போக-அப்பொழுது

அவர் எதிர்கொண்டுவந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்து உபசாரமாய் உள்ளே அழைத்துக்கொண்டுபோய்ப் பூசைபண்ணிவிட்டு-ஓ ஞானத்துக்குக் களஞ்சியமான சுவாமிகளே சம்சாரமென்கிற சாகரத்தில் அழுந்திக்கிடக்கிற ஜீவராசிகளை உத்தாரணம்பண்ண அவதரித்த தேவரீர் நான் அனந்தங்கோடி ஜன்மாந்திரங்களில் செய்த சுகிர்தத்தினாலே என்னுடைய குடிசைக்கு வந்தீர். என்னுடைய பாக்கியமே பாக்கியம் நான் இன்றைக்குக் கிருதார்த்தனானேனென்று ஸ்தோத்திரம்செய்து ஆனந்தத்தோடு நமஸ்காரம் பண்ணினார். அப்போது ஞானதேவர் நாமதேவரையெடுத்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு அப்பா நாம தேவா உன்பாக்கியத்துக்கு அளவில்லை. பிரேமளபக்தியின் சுகம் உனக்கே பிராப்தமாயிருக்கிறது. காமக்குரோதலோபமோக மதமாச்சரியங்களை வேரோடுகளைந்துவிட்டு ஸ்ரீ ருக்குமணிகாந்தனிடத்தில் மஹாபிரேமையோடு கூடிப்பக்தி பண்ணிக்கொண்டுவருகிறாய். உன் பாக்கியமே பாக்கியம்- உன்னுடைய வம்சத்தின் பிதிர்க்களுடைய புண்ணியமே புண்ணியம் என்று சொல்லிவிட்டு உன்னோடு என்னுடைய மனோரதத்தை அந்தரங்கமாய்ச் சொல்லவேண்டியிருக்கிறபடியினாலே யேகாந்தத்தில் போவோம் வாவென்று கையைப்பிடித்து அழைத்துக்கொண்டுபோய்த் தீர்த்தயாத்திரையும் தெய்வ தரிசனங்களும் நாமிருவருமாய்ச்சேர்ந்து பண்ணவேண்டுமென்கிற ஆசையிருக்கிறது அதை நீ நிறைவேற்றவேண்டுமென்றுமிகவும்கெஞ்சிச்சொன்னார். நாம தேவர் அதைக்கேட்டு மனசிலே விசனமுடையவராய்ப் பண்டரிநாதனுடைய தரிசனத்தையும் இந்த க்ஷேத்திர வாசத்தையும் விட்டுவிட்டு மற்ற ஸ்தலங்களையும் தீர்த்தங்களையும் அபேக்ஷிக்கிறது கையிலிருக்கிற அமிர்தத்தை ஊற்றிவிட்டுக் காடித்தண்ணீரை வீடுவீடாய்க் கேட்பதுபோலும்- கங்கா நதியின் ஸ்நானத்தை விட்டுவிட்டுக் காட்டாற்று ஸ்நானத்துக்கு அபேக்ஷிப்பதுபோலும்- கஸ்தூரியையெறிந்துவிட்டுக் கோமயத்தைக் கட்டிக்கொள்வதுபோலும்- கற்பகத்தரு நிழலை விட்டு விட்டு இண்டஞ்செடியினிழலை அபேக்ஷிக்கிறது போலும்- இருக்கிறதென்றெண்ணி ஞான தேவரைப்பார்த்துச் சேவித்து ஓ சுவாமிகளே நான் பண்டரிநாதனுடைய ஆதீனம் நான் பிறந்ததும் வளர்ந்ததும் ஈடேறினதும் அவராலே ஆதலால் மனவாக்குக் காயத்தோடு அவருக்கே அடிமையாகி அவருடைய தரிசனத்தை இடைவிடாது செய்யக் கிருபைபண்ணவேண்டுமென்று மிகவும் பிரார்த்தித்ததற்கு ஞானதேவர் நாம தேவரை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு நாம தேவா உன்னுடைய வந்தரங்க பாவமெனக்கு நன்றாய்த் தெரிந்தது- அப்படியானால் பண்டரிநாதன் அண்டைக்குப் போவோம் வாவென்று அவர்கையைப்பிடித்து அழைத்துக் கொண்டு கோவிலுக்குப்போய்க் கருடகம்பத்தடியில் நமஸ்காரம்பண்ணி உள்ளே

செங்கலின்மேலே நிற்கிற சுவாமியை விதிப்படி பூஜைசெய்து ஸ்தோத்திரங்கள் பண்ணித் தம்முடைய வாஞ்சையைச்சொல்ல ஸ்ரீநிவாசன் கேட்டு மனது சந்தோஷித்து ஞானதேவரைப்பார்த்துச் சித்து ரூபமாயா நிர்மலஸ்படிகம்போல களங்கரஹிதமான உனக்குத் தீர்த்த யாத்திரையிலுள்ளவாஞ்சையானது சூரியன் சரீரத்துக்கு தேஜசை அபேக்ஷித்ததுபோலும்- சந்திரன் சீதளத்வம் வேண்டுமென்று அபேக்ஷித்ததுபோலும்- சகல வித்தைகளும் அதிஷ்டானமான சரஸ்வதி தேவி வித்தியாப்பியாசம்பண்ண அபேக்ஷித்ததுபோலுமென்றுசொல்ல- அதற்கு ஞானதேவர் சுவாமி தேவரீர்சொன்னது யதார்த்தமானாலும் ஞானத்தைப் பார்க்கிலும் பிரேமள பக்தி அத்தியந்தம் ஆனந்தமானது. இந்தப் பிரேமள பக்திக்கு ஆலயம் நாமதேவன்- இவனோடேகூடச் சஞ்சாரம் பண்ணிக்கொண்டு சத்பிரேமளாநந்தத்தைப் பானம் பண்ண இச்சித்துப் பிரார்த்திக்கிறேன். சுவாமி கிருபை பண்ணிப் பூரணம் பண்ணுவிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார். அப்பொழுது சுவாமி மந்தஹாசத்தோடு நாமதேவரைப்பார்த்து ஞானதேவர் பரபிர்ம மூர்த்தி அவர் உன்னுடைய சினேகத்துக்கு இச்சைப்படுகிறார்- ஆகையால் நீ கூடப்போய் அவருடைய சித்தானுசாரம் நடந்துகொள். போஜனம்பண்ணுகிற வேளையிலும் - சயனித்துக்கொள்ளுகிறவேளையிலும்- நடக்கிறவேளையிலும்- என்னை மறக்காதே என் பிராணனுக்கு பிராணனானவனே சீக்கிரமாய்த் திரும்பிவாவென்று சொல்லிவிட்டு ஞானதேவரைப்பார்த்து நீர் சத்துவகுணமுடையவர்- சர்வக்ஞர் - நானும்மைக் கேட்டுக்கொள்ளுகிறது என்னவென்றால்- நாமதேவனெனக்கு ருக்குமணியைப் பார்க்கிலும் அதிகப்பிரியமுள்ளவனானபடியினாலே அவனை உம்முடைய தாக்ஷிணிய நிமித்தம் உம்முடனே யனுப்புவிக்கிறேன். அவனை மஹா பிரியத்தோடு காப்பாற்றிக்கொண்டுவரவேண்டுமென்று சொல்லி நாமதேவன் கையைப்பிடித்து ஞானதேவர் கையிலே ஒப்புவித்து இரண்டு கண்களிலேயும் ஜலம் பெருக என்னுடைய பிராணபதமான நாமதேவனை ஜாக்கிரதையாகப் பார்த்துக்கொள்ளுமென்று சொன்ன வசனத்தை ஞானேஸ்வரர் கேட்டு ஆனந்த பரிதராய்ச் சுவாமியைச் சேவித்துக்கொண்டு நாமதேவனை கையிலே பிடித்துக்கொண்டு சந்திரபாகைக் கரையிலேவந்து இருவரும் ஸ்நானம் பண்ணிப் புண்டலீகர் சரணாரவிந்தத்துக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துவிட்டு அப்பால் போய்விட்டார்கள். பண்டரிநாதன் நாமதேவருக்கும் ஞானதேவருக்கும் வழி கூட்டி அனுப்பிவிட்டுக் கோவிலுக்கு வந்துசேர்ந்தார். அப்போது ருக்குமணி தேவி சரணம் அலம்புகிறதற்கு ஜலம் கொண்டுவந்து சுவாமியினுடைய கண்களிலே ஜலம் பெருகிக்கொண்டிருக்கிறதைப் பார்த்து ஆச்சரியப்பட்டுச் சேவித்துச் சுவாமி இப்படி விசனப்படுகிறீர் என்னகாரியமென்று கேட்கையில்

அதற்குப் பக்தவத்சலன் ருக்குமணியைப் பார்த்து ஓ ருக்குமணி என்னுடைய பிராணபதமான நாமதேவனுக்கு என்னைத்தவிரச் சுவாமி- சத்குரு- ஆசாரிய இஷ்டமித்திர ஸ்வய ஜனங்கள் ஒருவருமில்லை. எந்நாளும் என்னையேதன்னுடைய சகலமுமாக எண்ணிக்கொண்டிருக்கிறான் அவனை ஞானேஸ்வரர் பின்னாலே யனுப்பினேன். அவனை எவ்வாறு அழைத்துச்செல்லுவாரோ அறியேன் அதுவே எனக்கு மிகுதியும் கவலையாயிருக்கிறது. என்னிடத்தில் அத்தியந்த பிரேமையுள்ள ரத்தினமான நாமதேவன் என்னைவிட்டு ஒருநாளும் பிரிந்தவனல்லன். அவன் பிரிந்ததனால் என் மனமானது ஒன்றிலும் பற்றாமல் வருந்துகின்றது. நான் ஜகத்திற்கு மூலாதாரமான விருக்ஷம் இந்த விருக்ஷத்துக்கு ஆதாரமான ஜல ரூபம் நாமதேவன் அந்த ஜலத்தை ஞானேஸ்வரர் என்கிற மேகம்வந்து பானம் பண்ணிவிட்டுப்போய்விட்டது. அல்லது நான் பிரேமள பக்தி யென்கிற அமிர்தத்தையே சேவனம் பண்ணிக் கொண்டிருக்கிற விருக்ஷரூபம் அந்த அமிர்தம் நாமதேவரென்கிற மேகத்தினாலே கொடுக்கப்பட்டுக்கொண்டிருந்தது இப்பொழுது அந்த மேகத்தை ஞானதேவரென்கிற வாயுசிதறப்பண்ணிவிட்டதே என்று விசனப்பட-அப்பொழுது ருக்குமணிதேவி சுவாமியைப் பார்த்து ஹே ஜெகந்நிவாசா- பக்தவச்சலா - பக்தபராதீனா- தேவாதி தேவா- தேவரீர் பக்தனிடத்தில் பிரேமையினாலே சொன்ன வசனம் சரியானாலும் தேவரீர் சர்வ வியாபகன்- சர்வாந்தரியாமி- பக்தர்களுடைய ஹிருதயமென்கிற கமலத்தில் அம்ச ரூபமா யிடை விடாமல் இருக்கிறவர் அப்படியிருக்கையில் ஏனிப்படி விசனப்படுகிறீர் என்று சொல்லவதை அனந்த கல்யாண குணநிதியான பகவான் கேட்டு ஓ ருக்குமணி நான் அவியக்தநிராகார நிற்குணனாயிருந்தாலும் என்னுடைய பக்தர்கள் நிமித்தமாய் நான் சற்குண ரூபமாய் என்னுடைய விபவத்துக்குப் பாக்கியர்களான பக்தர்கள் வாசம்பண்ண வைகுண்டம் நிர்மாணம் பண்ணினேன். என்னுடைய பக்தர்களுக்கு என்னைத்தவிரவும் எனக்கு அவர்களைத்தவிரவும் வேறே சிறந்த பொருளில்லை. சூரியனுக்கும் சூரிய பிம்பத்துக்கும் எப்படிப் பேதமில்லையோ அப்படியே யெனக்கும் என் சாதுக்களுக்கும் பேத மில்லை யென்று மஹா சிந்தாகிராந்தனாய்ச் சொன்னார். பிறகு ருக்குமணிதேவி தானும் அனேக பக்தர்களும் கூடிக்கொண்டு சுவாமிக்கு நானாவிதமாய் ஆறுதலை பண்ணினார்கள்.

இவ்விடத்து விருத்தாந்தம் இப்படியிருக்க நாமதேவரும் ஞானதேவரும் போகிறபோது நாம தேவர் அடிக்கடி திரும்பிப்பார்த்துக் கொண்டு கிருபா சாகரனே- ஜகத் கர்த்தாவே- பண்டரிநாதா- என் பிராணநாதனான சுவாமி- எனக்குத் தாயும் நீ-தந்தையும் நீ- குருவும்நீ-

தெய்வமும் நீ- சகல சாம்பிராச்சியமும் நீ- உன்னைவிட்டுப் பிரியும்படி யாயிற்றே யென்று விசனப்பட்டு அடிக்கடி மூர்ச்சையாகி விழுந்து தாயை விட்டு பிறின்ற குழந்தையைப் போலப் பிரலாபித்து வருந்து வார். அவரைப்பார்த்து ஞானேஸ்வரர் ஹே பக்தஜனே பக்தசிகா மணியே ஸ்ரீவிட்டல நாதன் பரிபூரணனும் சர்வாந்தரியாமியு மாதலால் உன்னுடைய ஹிருதய கமலாசனத்தில் அனவரதமும் வாசம் பண்ணிக் கொண்டு சகலத்துக்கும் சாக்ஷியாயிருக்க நீ ஏன் விசனமென்கிற அக்கினிக்கு இடம் கொடுக்கிறாய் - அபாக்கியனுனவன் அவன்முன் ஞேர்கள் புதைத்துவைத்த தனத்தைச் சோதித்துப் பார்த்து எடுத்து அனுபவிக்கத் தெரியாமல்விருதாவிலே கஷ்டப்படுவதுபோலச்சாதுக்க ளால் காண்பித்திருக்கப்பட்ட மஹாரத்தினத்தை உன்னுடைய ஹிருதயத்தில் இடைவிடாமல் தரிசனம் பண்ணிக்கொண்டிராமல் ஏன் விருதாவிலே கஷ்டப்படுகிறாயென்று சொல்ல-அவரைப்பார்த்து நாமதேவர் ஹேசுவாமி ஞானதேவரே தேவரீர் நிர்க்குணரூபமாய்ச் சொல்லவருகிறீர் எனக்கு நிர்க்குணமும் ஞானமும் யோகமும் தெரி யாது. எனக்கு அனந்த கல்யாணகுண நிதியாய் அவாங்மானசகோ சர அனந்தமூர்த்தியாய் லீலாமானுஷவிக்கிரக ரூபமாய் பீதாம்பர தாரியாயிடுப்பிலே இரண்டுகைகளையும் வைத்துக்கொண்டு பக்தர்க ளுடைய சம்ரக்ஷணமே காரியமாய் ஜகத்தையெல்லாம் உத்தாரணம் பண்ணிக்கொண்டு சனகாதிகள் ரிஷிகள் சீவன்முக்தர் முதலான வர்களுடைய தியான மூர்த்தியாயும் ருக்குமணிகாந்தனும் தும்புரு நாரதர்களுடைய கானப் பிரியனும் புண்டலீகவரதனும் பீமாதீர வாசியாயுமிருக்கபட்ட பாண்டுரங்கனைத் தவிர வேறொன்றிலேயும் மனம்பற்ருது. சுவாமி தேவரீர் கிருபைபண்ணி அவருடைய திவ்விய திருவடிகளையே நான் அனவரதமும் தரிசனம் பண்ணும்படிசெய்ய வேண்டும் இல்லாவிட்டால் என் பிராணனில்லாது அவருடைய கீர்த்தனமும் தியானமும் தரிசனமுமே யென்பிராணனுக்கு ஆதாரம் என்றுசொல்லி ஞானதேவருக்கு மஹா ஆனந்தமுண்டாகும்படி பிர திதினமு மிப்படியே மஹா பிரேமளபத்தியைக்காட்டிக்கொண்டு போகையில்-ஞானதேவர் நாமதேவரைப்பார்த்துப் பிரேமள பக்தசி காமணியே யெவ்வாறு இந்த ரிஷிகேசனைக்கைவசம் பண்ணிக்கொண் டாய்-எந்தவிதமாய்ப் பஜனம்பண்ணிஞய்-என்னதியானம்பண்ணி ஞய்-உன்னுடைய ஆத்தியாத்மீக ஆதிபவுதீக ஆதிதெய்வீகமானதா பத்திரயாக்கினியை நீங்கலாக்கிக்கொண்டு ஜனனமரணப்பிரவாகத்தில் அவதிப்படுகிறதை விட்டு இளைப்பாறுகிறதற்கு ஆலயமான இடத்தை யெந்தவிதமாய்க் கைவசம் பண்ணிக்கொண்டாய் அந்த விதத்தை எனக்கும் தெரியப்படச் சொல்லவேண்டுமையாவென்று சொன்னர். அப்பொழுது நாமதேவர் அவருக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து

நான் பாமரன் மூடன் என்னைச் சவரக்ஷணை பண்ணும்படி தேவரீரு டைய கையில் பண்டரிநாதன் ஒப்புவித்தார் நான் ஒன்றும் தெரியாத வன் தேவரீர் திவ்விய ஞானனந்தமூர்த்தியாயிருந்தும் என்னை இப் படிக்கேட்டது கல்பகவிருக்ஷமானது ஒரு தரித்திரன் வீட்டில் யாச கத்துக்குப் போனதுபோலவும்-சூரியனானவன் என் வீட்டில் விளக் கேற்றிவையென்பதுபோலவும்-ஆகாசமானது நான் குடியிருக்க விசா லமாய் ஓரிடங்கொடு என்பதுபோலவும் ஆச்சரியமாயிருக்கிறதென்று சொன்னார். உடனே ஞானதேவர் ஓ நாமதேவா உன்னுடைய சித் தம் சமுத்திரத்திலும் ஆழமானது. உன்னுடைய சொற்கள் சுவானுப வானந்த ரசத்தைப் பார்க்கிலும் ஆனந்தமுள்ளவை நித்தமும் அமிர் தரசமாயிருக்கிற விவைகளைக் கேட்கவேண்டுமென்று ஆசைப்படுகி றேன். உன்னைப்போலொத்த அந்தரங்கமான பக்தர்கள் உலகிலில்லை. உன்னுடைய பிரேமள சுவானுபவானந்தத்தைக் கேட்டுத் திருப்தி யடையவேண்டுமென் றெண்ணியே உன்னுடைய சினேகத்தைப் பாண்டுரங்கனுடைய தயவினாலே அடைந்தேன். அளவில்லாத பக்தி சுகத்தை அடைந்த உனக்குச் சமானமாக ஒருவரையும் சொல்லக் கூடாது. உன்னுடைய ஞானம் ஜெகதோத்தாரம்பண்ணுகிற சூரியப் பிரகாசம்போலே விளங்குகிறது. ஆகையால் நீ சங்கோசத்தைவிட்டு விட்டு உன் அனுபவத்தைச் சொல்லி என் மனோரதத்தைப் பரிபூர ணம் பண்ணுவிக்கவேண்டுமென்று சொன்னார். உடனே நாமதேவர் சேவித்து விநயத்துடனே சுவாமி ஜகத்துக்குப் பிதாவாய் ஜகதோத் தாராய் அவதரித்திருக்கிற மூர்த்தியே தகப்பனானவன் தன் குழந் தையினுடைய மழலைச்சொல்லைக் கேட்கவேண்டுமென்று அந்தப் பிள் ளைக்கு ஆதரவுசொல்வதுபோல தேவரீர் என்னுடைய சுபானுபவத் தைக்கேட்க அபேக்ஷித்து இத்தனை உபசாரம் சொன்னீர்கள். சுவா மிகளே ஒருவர்க்கு உள்ளத்தில் சலியாதவைராக்கிய மிருக்கவேண் டும் இருந்தால் பூததயவு அதிகரிக்கும் அப்போது நீ நான் என்கிற விவஹாரம் அற்றுப்போம் இந்த ஸ்திதியெவனுக்கிருக்கிறதோ அவனே சுத்தபஜனம் பண்ணுகிறவனென்று சொல்லவேண்டும். இந்தச் சின்னமில்லாத பஜனம் ஈயுடன் சாப்பிட்ட அன்னம்போலாகும். என்னுடைய ஹிருதயத்தில் அபின்னமான ஞானமேதிருமேனியாக வுடைய விட்டலமூர்த்தியே சர்வவியாபகனென்று நிச்சயம் அப்படி யிருப்பதே எனக்குத்தியானம் என்றுசொல்லவேண்டும். இந்த ஞானமே எனக்கு ஆனந்தம் அதை நாசரஹிதமென்றும் சொல்லவேண்டும். சிரவணம் பண்ணுகிறதெப்படியென்றால் அசுணமானது தேகபாவத் தைவிட்டு நாதத்திலயமாகிறதுபோல சிரவணம்பண்ணவேண்டும். அதற்கே சிரவணபக்தியென்று சொல்லுவார்கள். மனனம்பண்ணுகிற தெப்படியென்றால் கிருபணனானவன் சித்தத்தை நாணுவித விவகாரத்

திலேவிட்டும் திரவியத்தைச் சேர்ப்பதிலேயே கருத்திருப்பதுபோல மனனம்பண்ணுகிறவசனத்தைவிட்டு ஸ்ரீமந்நாராயணனே அழிவில்லாததனமாக எண்ணவேண்டும். நிதத்தியாசமெப்படியிருக்கவேண்டுமென்றால் சாதகபக்ஷியானது ஆகாசத்திலேபறந்தாலும் அதினுடைய லக்ஷியம் மேகத்தினிடமிருப்பதுபோலவும் - பசுவானது காட்டிலும் மலையடிவாரங்களிலு மேய்ந்தாலும் மனம் கன்றினிடத்தி லிருப்பதுபோலும் - வெளிப் பார்வைக்குமட்டும் சம்சாரத்திலே யிருந்துகொண்டு உள்ளத்தில் சர்வ பாவங்களிலேயும் ஸ்ரீபாண்டுரங்கனையே பாவிக்க வேண்டு மென்றும் - ராஜச தாமச குணங்களை விட்டுச் சத்துவகுணசிலராய்ச் சத்பிரேமையான பக்தியோடு நியமமாய் ஏகாந்தமாய் உட்கார்ந்துகொண்டு ஸ்ரீஹரியைத் தியானம் பண்ணவேண்டும்-இதுவே சிரேஷ்டம் இந்தச் சாதனங்கள்தவிர மற்றச் சாதனங்களெல்லாம் பந்தனமென்று சொல்ல வேண்டும்-இப்படிக்கு என் மனவாக்கு காயங்களிலே செய்யப்பட்ட அனுபவங்களெல்லாம் ருக்குமணி காந்தனே சாக்ஷியென்று சொன்னார். இந்த அனுபவ வசனத்தை ஞானதேவர் கேட்டுச் சந்தோஷத்தை யடைந்து ஓ நாமதேவா விஷ்ணு பக்தர்கள் அனேகம் பெயர் முன் இருந்தார்கள் இப்பொழுதும் அனேகம் பெயரிருக்கிறார்கள் உன்னைப் போலொத்த பாக்கிய சாலியான பக்தன் ஒருநாளுமில்லை உன்னுடைய சொல்லென்கிற அமிர்த வருஷம் எனக்குக் கிடைத்ததுபோலக் கல்பாந்திரத்திலும் எவனுக்கும் கிடைத்திராது. மஹாயோகிகளும் ரிஷிகளும் நானாவிதமான யோகாப்பியாசங்கள் பண்ணுகிறவர்களாயிருந்தாலும் உன்னைப் போல பிரேமளபக்தர் ஒருவருமில்லையென்று சொன்னார். இப்படிப்பிரதிதினமும் ஒருவருக்கொருவர் ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டு அஸ்திஞபுரத்துக்குவந்தார்கள். நாமதேவர் ஸ்ரீஹரியினுடைய கல்யாண குணத்தை வர்ணித்துக் கொண்டிருக்கிற பிரேமளபக்தி ஆனந்தத்தை அந்தப்பட்டணத்திலிருக்கிற சகல ஜனங்களும் பார்த்து ஆச்சரியப்பட்டு அவர்களும் நாமகீர்த்தனங்களைப்பண்ணிக்கொண்டுஸ்திரீபுருஷர்கள் ஆகிய எல்லாரும் தேகபரவசர்களாயிருந்தார்கள்.

இந்தச்செய்தியை அந்தப்பட்டணத்தின் ராஜாகேட்டு நாமிதைச் சோதனைபண்ணுவோம். அந்தச் சோதனைக்குச் சரியாயில்லாவிட்டால் பாஷாண்ட மதக்காரரென்று அவமானம் பண்ணுவோ மென்று மனதிலே நிச்சயம்பண்ணிக்கொண்டு பிர்மசபையில் சண்டாளர்வந்தது போலவும் பிராமணபோஜன பந்தியில் சுவானம்வந்து புகுந்ததுபோலவும் எவ்வர்னதிசையில் ரோகம்வந்து சம்பவித்ததுபோலவும் வந்து நாமதேவர் தாளம் மத்தளம் தம்புருமுதலான வாத்தியசம்யுக்தமாய்க் கீர்த்தன ஆனந்தபரிதர்களாயிருக்கிறசமயத்தில்ஒருகோவைவதைத்துச்

சபையில் கொண்டுவந்துபோட்டு அவரைப்பார்த்து இந்தப் பசுமாட்டை யெழுப்பிவிட்டாயானால் நீபாடுகிறதும் ஆடுகிறதும் உண்மையான பக்தியினால்தானென்று நம்புவேன் இல்லாவிட்டால் இவையெல்லாம் வேஷமென்று சொல்லி உன்னை யென்கையினாலே கொன்றுவிடுவேனென்று சொன்னான். அப்பொழுது சிரவணானந்தத்தை அனுபவித்துக்கொண்டிருந்த சமஸ்தமான பேருக்கும் பஞ்சபக்ஷ்ய பரமான்னயுக்தமாய்ப் போஜனம் பண்ணுகிறவேளையில் விஷம்வந்து விழுந்ததுபோலும்-புராணம் வாசிக்கிறவேளையில் விளக்கை வண்டானது வந்து நிருத்தினதுபோலு மிருந்தபடியால் அவர்களனைவரும் சித்திரரூபம் போலேயிருந்து விட்டார்கள். அப்போது அந்தத் துலுக்கராஜன் நாமதேவரைப்பார்த்து இந்தப் பசுவை யெத்தனை நாளைக்குள்ளே எழுப்புகிறாயென்று கேட்க அவர் ஓ ராஜாவே யின்னம் நாலுநாளைக்குள்ளாக ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமா எழுப்பி விடுவாரென்று சொல்லினார். அதைக்கேட்டு ராஜா சிலரை அங்கே காவல் வைத்து விட்டு அரண்மனைக்குப்போய்விட்டான். அப்போது நாமதேவர் ஸ்ரீஹரியை ஸ்மரித்து ஜயஜயமங்கள மூர்த்தே - தீனதயாளுவே - பதிதபாவனனே - பக்தவச்சலனே - கிருபாசிந்தோ - சர்வாந்தரியாமி - கோவிந்தா - கோபிகாரமணா - ரக்ஷியும். பிரமதேவஜனகா - க்ஷீரசாகரவாசி - வைகுண்டவாசி - இருஷீகேசவா - அவிநாசா-ஜகத்குருவே -ரக்ஷியும் ரக்ஷியும்; சேஷசாயி - கருடவாஹனா-ஸ்ரீவச்சகவுஸ்துவதரா - தசரததனயா-ராவணாந்தகா-கம்சநாசனா-கவுரவவம்சநாசகரணா - பாண்டவசம்ரக்ஷணா - தத்பரா-சருணரூபானந்தா - ஸ்ரீருக்குமணிகாந்தா - கமலலோசனா-பக்தபூஷணா - பாண்டுரங்கா-அதிசுவிரைவாய்வந்து ரக்ஷியும் ரக்ஷியுமென்று பிரேமன உருக்கமாய் ஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டிருந்தார். அப்போது சிரவணம் பண்ணிக்கொண்டிருந்தவர்கள் எல்லாம் ஒருநாளிருந்து மறுநாள் சூரிய உதயமான உடனே தங்கள் தங்களிடத்திற்குப்போய் விட்டார்கள். அவர்கள் போனது இந்திரியங்கள் தளர்ந்த காலத்தில்போக யோக்கியமான விஷயங்களில் அபேக்ஷையற்றுப்போவதுபோலும் - ஒருவருக்குத் தரித்திரம்வந்த உடனே பற்றில்லாப் பந்துக்கள் அனைவரும் நீங்கிப்போவதுபோலுமிருந்தது. நாமதேவர் அந்தப் பசுவின் சிரசை தனது தொடையின்மேலேவைத்துக்கொண்டு உருக்கமாய்ப் பண்டரிவாசனே-ஸ்ரீ ஹரி யென்னய்யனே விரைவாய்வந்து கடாக்ஷியும் நெடுநேரமாகிறதே ருக்குமணிதேவியோடு விளையாடிக்கொண்டு இருக்கிறீரோ - பக்தர்களுடைய கீர்த்தனத்தைக் கேட்டுக்கொண்டிருக்கிறீரோ-யோகிகளுடைய இருதயகுகையில் அகப்பட்டுக்கொண்டிருக்கிறீரோ-பக்தர்களுடைய சங்கட நிவாரணம் பண்ணப்போனீரோ- [illegible] என்னைமறந்தீரோ-பண

டரிபுரத்துக்கு யாரேனுமொரு பிரேமள பக்தன் உன்தரிசனத்துக்கு வந்து அதினாலே யென்னை மறந்தீரோ- தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் யுத்தம் உண்டாகித் தேவதைகள் சங்கடத்தை நிவாரணம் பண்ணப்போனீரோ-சக்கிரபாணி-சர்வசாக்ஷி- சர்வாந்தரியாமியென்று நாலு நாள் பரியந்தம் தத்தளித்து உருக்கமாய்ச் சொல்லிக்கொண்டிருக்கிறவசனத்தைக்கேட்டு ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி பிரசன்னமாக நாமதேவர் எழுந்திருந்து இரண்டு சரணத்தையுங்கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அனாதபந்து-ஆபத்பாந்தவா-அதோக்ஷயா - யென்னகாரியார்த்தமாய் தேவரீர் நாலு நாளாய் அப்பியந்தரம் பண்ணிக்கொண்டிருந்தீர் என்னையிப்படிக்கைநழுவவிடலாமா-இது உனக்குத் தர்மமா வென்று கேட்க-நாமதேவரைப்பார்த்து பக்தபராதீனன் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி நாமதேவா என்பேரில் தோஷம் சொல்லுகிறாய் நீ நாலு நாளையில் எழுப்பிவிடுகிறேனென்று சொன்னாய் ஆகையால் நானிப்பொழுது வந்தேன் உடனே எழுப்பிவிடுகிறேனென்று சொல்லி யிருந்தாயேயானால் உங்களுடைய ஆதீனமான நான் உடனே வந்து எழுப்பிவிடுவேன். என்னுடைய பக்தர்களுடைய வாக்கிலே என்ன பிறக்குமோ அவைகளை நிறைவேற்றுகிறதேயென்னுடையவேலை. வால்மீகிரிஷியானவர் இனிமேல் நடக்கப்போகிறகாரியத்தைச் சொன்னார். அப்படியே நான் ராமாவதாரமெடுத்து நிறைவேற்றினேன். எவனெப்படிப் பாவிப்பானோ அப்படியே யிருக்கப்பட்டவன் நான்-நிஜபக்தர்களுக்குச் சுவாதீனமானவன் என்று சொல்லிவிட்டு அதரிசியமானார். பசுவானது எழுந்திருந்து நின்றது. இந்த அதிசயத்தை ராஜாவின் மனுஷர்கள் கண்டு ஓடிப்போய் ராஜாவோடு சொல்ல அவன் கேட்டு ஆச்சரியப்பட்டு அவ்விடத்துக்குவந்துதான் வெட்டிப்போட்டபசுவானது எழுந்து நிற்கிறதைத் தன் கண்ணினாலே கண்டு அளவில்லாத ஆச்சரியமாய் நாமதேவருடைய சரணாரவிந்தத்தில் அடியற்ற பனைமரம்போல் விழுந்து ஆனந்தபரவசனாய் நாமதேவரே நீரே தன்னியர் தன்னியர்-நீரே ஹரியினுடைய நிஜ தாசன்-பிர்மாதிதேவர்களுக்கும் உம்முடைய பக்தியின் அதிசயத்தைக்காண அரிதாகுமென்றுசொல்லித் தானும் நாமஸ்மரணைபண்ணத்தொடங்கினான். அப்போது நாமதேவரெழுந்திருந்து ஸ்ரீ கிருஷ்ணமூர்த்திக்கு மங்களார்த்தியைப் பண்ணினார். அப்போது சகலரும் லோகத்திலே பகவத்பக்தர்களுக்குள்ளே தன்னியர் நாமதேவர். இவரே பக்தசிரோமணி இவரே பாண்டுரங்கனைக் கைவசம்பண்ணிக்கொண்டார் என்று ஸ்தோத்திரம் பண்ணினார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியாயத்தைக்கேட்டவர்கள் சகலமான வியாகூலங்களினின்றும் நிவர்த்தியாய்ச் சகலசாம்பிராச்சியங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்து கடைசியிலே ஸ்ரீ வைகுண்டமான சாயுச்சியத்தை அடைவார்கள். ஸ்ரீஅரவணைச்செல்வனேநம:

## பதினோராவது அத்தியாயம்

# ஞானதேவரும் நாமதேவரும் கபீர் தாசர் வீட்டிற்குவந்த சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரபரமகுரவேநம: கேளுங்கள் சாதுக்களே இந்த அத்தியாயத்தினுடைய அமிர்தத்தைச் சிரவணத்துவாரபானம் பண்ணுங்கள். பிராமணன் வீட்டில் சமைத்த அன்னம் சகலஜாதிகளும் உண்ணத்தக்கதாகவிருப்பதுபோலவும்-ரத்தினகசிதமான பூஷணங்கள் சகலமான ஸ்திரிகளும் அணியத்தக்கதாயிருப்பது போலவும் - பக்த சரித்திரமானது யாவரும் சிரவணம்பண்ணி மேன்மையடையத்தக்க தாக இருக்கிறது. முன் அத்தியாயத்தில் சொல்லியபடி நாமதேவர் ராஜாவினால் வெட்டுண்டு மரித்துபோன பசுவையெழுப்பிவிட்டு எல்லாரும் ஸ்தோத்திரம்பண்ணி வணங்கும்படியாகச்சில நாள் அவ்விடு புரத்திலிருந்து ஞானதேவருடன் காசிக்ஷேத்திரத்திற்குவந்து சேர்ந்து பகீரதியிலே ஸ்நானம் பண்ணிக்கொண்டு விசுவேசுவரர்-பிந்துமாதவர் முதலானவர்களைத் தரிசனம் பண்ணிக்கொண்டு நாலுமாத பரியந்தம் அவ்விடத்திலேயே வாசம்பண்ணுகையில் ஒருநாள் இருவரும் கபீர்வீட்டுக்கு இராத்திரிப்பதினைந்து நாழிகை வேளையில்போக அப்பொழுது கபீரும் அவருடைய ஸ்திரீயும் வந்தவைஷ்ணவ வீரர்களுக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து உள்ளே அழைத்துக்கொண்டு போனார்கள் அந்தச்சத்துவசீலனுடைய வீட்டின் தரித்திரஸ்திதியைப்பார்க்கமனம் சகிக்காது. சொல்ல நாக்குஎழாது. அன்றைக்கு ஒருவருக்கும் சாப்பாடில்லை. குழந்தைகள்கூட உபவாசமாய் நித்திரைபண்ணுகிறார்கள். இப்படியிருக்கையில் - வந்தவர்களுக்கு ஆதரணை பண்ணவேண்டுமென்று கபீர் தன் பெண்சாதியைப் பார்த்துச் சொல்ல புருஷன் வார்த்தையைக்கேட்ட அந்தக்குணசாலி நல்லதென்று சொல்லிச் சம்மதித்து மனதிலே சிந்தாகிராந்தையாய் அந்த நிசிவேளையில் கடைத்தெருவுக்குத்தனியாய்ப்போனாள். அப்பொழுது ஒருகடைக்காரன் மட்டும் விழித்துக் கொண்டிருக்கிறதைக்கண்டு சமீபத்தில்போய் தீனவார்த்தையாய் ஐயாகடைக்காரரே சாதுக்கள் தீர்த்தயாத்திரை பண்ணிக்கொண்டு எங்கள் வீட்டிலேவந்திருக்கிறார்கள். அவர்களுக்குச் சாப்பாடு பண்ணுவிக்கவேண்டியிருக்கிறது. நீர் தயவுபண்ணி அரிசிபருப்பு

வெந்துகொடுக்கிறேனென்று சொல்லஅவன்தட்டியைத்தூக்கிப்பார்த்து இந்தவேளையில் தனிமையாய்வந்து சாமான்கள் கேட்கின்றநீயாரென்று கேட்கவதற்கு கபீருடைய பாரியாகிய உத்தமியானவள் நான்அவிந்தவம்சத்தில் அவதரித்திருக்கிற வைஷ்ணவவீரரான கபீரென்பவருடைய மனைவியென்றுசொல்ல இந்தவார்த்தையைக்கேட்ட வர்த்தகன் துற்புத்தியைமனதிலேகொண்டுநாளைக்காலையில்விலைகொடுப்பது இருக்கட்டும்இப்பொழுது உள்ளஎன்மனோரதத்தைப்பூரணம் பண்ணுவாயேயானால் உனக்கு வேண்டிய சாமான்களும் வஸ்திரபூஷணங்களும் கொடுக்கிறேன். இல்லாவிட்டால் நீவந்தவழியைப் பார்த்துக்கொண்டு போவென்று சொன்னான். இந்தத் துற்புத்தியுள்ளவனுடைய வார்த்தையைக்கேட்டு அந்த அம்மாள் மனம்வருந்தி இப்பொழுது நாமென்னசெய்யலாம் வந்த சாதுக்கள் உபவாசமாயிருப்பார்களே இந்தவர்த்தகனைத் தவிர மற்றவர்களெல்லாரும் நித்திரைசெய்கிறார்களேசமயத்துக்குத் தக்கபடியன்றோ நடக்கவேண்டும் -கேள்விக்குத் தக்கபடியன்றோ உத்தரவு கொடுக்கவேண்டும் - பூமிக்குத்தக்கபடியன்றோ விதைவிதைக்கவேண்டும் -இப்பொழுது இவன் அபேக்ஷைக்குச் சம்மதித்தாகிலும் சாமான்களை வாங்கிக்கொண்டுபோய்ச் சாதுக்களைப்பட்டினியாகப்போடாமல் பண்ணுகிறதே பெரியகாரியம். அரிச்சந்திரன் ஒருபொய்சொல்லமாட்டாமல் தானடிமைப்பட்டும் தன்னுடைய ஸ்திரீ சந்திரமதியைவிற்றும் நானாவிதக் கஷ்டப்பட்டும் கடைசியிலே உத்தம சுலோகனானானே. பிரவாகத்திலே விழுந்து முழுகிப்போகிற சமயத்திலே பறையன்வந்துகைகொடுத்தாலும் அந்தவேளையில் பறையனென்று பாராமல் அவன் கையைப் பிடித்துக்கொண்டு தானேகரையேறவேண்டும். இந்தக்கலிகாலத்தில்துன்மார்க்கமே அதிகம். இப்பொழுது இவன் வார்த்தைக்கு நாம் சம்மதிக்கிறது சாஸ்திரத்திற்கு விரோதமென்றாலும் என் பர்தாவுடைய ஆக்கினைப்படிக்கு நான் சாதுக்களுக்குப் போஜனம் பண்ணுவிக்கவேண்டியது முக்கியமாதலால் இவன் மனோரதத்தை நிறைவேற்றியாகிலும் அப்படிச்செய்யவேண்டுமென்று எண்ணி ஸ்ரீ இராமசந்திரனை ஸ்மரித்துக்கொண்டு வர்த்தகனைப்பார்த்து ஓ! வர்த்தகரே நீர் முன்னே யெனக்கு சாமான்களைக்கொடும் அதைக்கொண்டுபோய்ச் சாதுக்களுக்குக்கொடுத்துவிட்டு நான் உன்னிடத்திற்கு நிச்சயமாய் வந்து சேருகிறேன் என்று சொன்னாள். திருடர்கள் மற்றெல்லாரையும் திருடரென்றெண்ணுவது போலவும்-செவிடர் மற்றவர்களையும் செவிடரென்றெண்ணுவதுபோலவும்-பொய்யர் எல்லாரையும் பொய்யரென்றெண்ணுவதுபோலவும் இந்தவார்த்தையைக்கேட்டு அந்தவர்த்தகன்மெய்யென்று நினையாமல் அந்த அம்மணியைப் பார்த்து நீ சொல்லுகிறது சரியாயிருக்கலாம்

ணம் செய்துகொடுப்பாயே யானுமப்படிம் நான் நம்புவேனென்று சொல்ல- அப்படியேசெய்துகொடுத்துச் சாமான்கள் வாங்கிக்கொண்டு வீட்டுக்குவந்து புருஷனுக்குச்சொன்னாள். அவரித்தச்சாமான்களைச் சாதுக்களுக்கு முன்னேவைத்து உபசாரம்பண்ணினார். அவர்கள் எடுத்துக்கொண்டு பூசை நைவேத்தியங்களைப் பண்ணித் திருப்தியான பிறகு கபீருடைய ஸ்ரீயானவள் தன் கணவனைத் தனியே யழைத்து நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் சொன்னாள். கபீர் கேட்டுச் சந்தோஷமுடையவராய் நமக்குஉபகாரம்பண்ணின புண்ணியசாலிக்கு என்ன உபகாரம் பண்ணினாலும் தகும் - சாதுக்கள் நிமித்தத்திலே சரீரத்தை உபயோகம்பண்ணினாய் ஆனதால் நீயும் புண்ணியசாலி இப்போது ராத்திரிவெகுநேரமாயிற்று நடந்துபோனால் காலிலே சேறுபடும். ஆகையால் நான் தூக்கிக்கொண்டுபோகிறேன் வாவென்று சொல்லச் சுவாமி தேவரீர் ஏன் கஷ்டபடுகிறீர் நான்போய் அந்த வர்த்தகனுடைய மனோரதத்தை நிறைவேறப்பண்ணிவிட்டு வருகிறேனென்றுசொல்லக் கபீரானவர் நீ தனியாய்ப்போகப் பயப்படுவாய் வழியிலே சேறும் உளையுமாயிருக்கிறது. அதிலேவிழுந்தாயேயானால் உபகாரம் பண்ணினவர்க்கு விரைவில் உபயோகப்படாமல் நேரம்சென்றுபோமென்று சொல்லித் தோளிலே தூக்கிக்கொண்டு அந்தக்கடைக்குச் சமீபத்திலேகொண்டுவந்துவிட்டு விட்டு நான் வீட்டுக்குப்போகிறேன் ஒருவேளை சாதுக்கள் எழுந்திருந்து போய்விடுவார்கள். நீ வர்த்தகனுடைய மனோரதத்தை நிறைவேற்றுவியென்று சொல்லிவிட்டுப்போய் விட்டார். இந்த அம்மாள் காமாதுரனாய் வழியைப்பார்த்துக்கொண்டிருக்கிற வர்த்தகன் கடையிலேபோய் உட்கார்ந்தாள். அவளைப்பார்த்து அவ்வர்த்தகன் இந்த மழையிலும் இருட்டிலும் சொற்படி தவறாது வந்தாயே நீ சத்தியவதி. சேறு அதிகமாயிருக்கவும் நீ யெப்படிக்காலிலே சேறுபடாமல் வந்தாயென்று கேட்கச் செட்டியாரே நீர்கொடுத்த சாமான்களைக்கொண்டு சாதுக்களுக்குத் திருப்திபண்ணுவித்தோம். அது உன்னுடைய புண்ணியவசம் அப்பால் நானுனக்கு வார்த்தைகொடுத்து விட்டுப்போன விபரத்தை யென் பிராணநாதனுக்குச் சொன்னேன். அவர் சந்தோஷப்பட்டு நீர் பண்ணின உபகாரத்தின் பொருட்டு உம்மை மிகவும் புகழ்ந்துகொண்டு என்னையும் உமக்குநான் சுருக்கிலே உபயோகமாகும்படியாய்த் தம்முடைய தோளிலே தூக்கிக் கொண்டுவந்து விட்டுவிட்டுப்போனார். ஆகையால்தான்என்காலிலேசேறுபடவில்லை இப்பொழுது உன்னுடைய மனோரதத்தை நிறைவேற்றிக் கொள்ளுமென்றுசொல்ல - இந்தவார்த்தைகளை அந்த வர்த்தகன் கேட்டமாத்திரத்திலே சாதுசனப் பழக்கமுண்டாகி அவர்களுடைய பெருமையில் கொஞ்சம் வெளிப்பட்டபடியால் உடனே சூரியனைக்கண்டவுடன் இருட்டானது கண்ணிலே காணமல்போவதுபோல அஞ்ஞானம்போய்

விவேகம் பிறந்து நான் என்னதுற்புத்தியைக்கொண்டேன், வைஷ்ணவ பக்தசிரோமணி கபீர் - அவருடைய ஸ்திரீ மஹா பாக்கியசாலி-பதிவிர தாரத்தினம் - சாக்ஷாத்லோகமாதா - அப்படிக்கொத்த புண்ணியசாலி யைப் பிழைபடுத்த நினைத்தேனே என் ஜன்மம் வியர்த்தமாய்ப்போ யிற்றே எண்பத்துநான்கு லக்ஷம் ஜீவராசிகளிலேயும் அனேகமாயிரம் பிறப்புப்பிறந்து அந்த ஜன்மங்கள் தோறும் விஷயவாசனையினுலேயே கெட்டுப்போனேன். இப்பொழுது இந்த நரஜன்மத்துக்கு வந்தும் இப்படியாயிற்றே யென்றைக்குத்தான் நான் கடைத்தேறப்போகிறேன் இந்தப்பாக்கியசாலியை அபேக்ஷித்ததானது துளசிச்செடியைகத்தி யினுலே வெட்டினதுபோலும் - அமிர்தகுடத்தைக் கவிழ்த்தது போலும்-சாளக்கிராமத்தை உடைத்ததுபோலும்- பெரும்பாபம் எனக் குலபிக்கச்செய்ததேகோடாலிக்காம்புகுலத்துக்குக்கேடு என்பதுபோல என் வம்சத்துப் பிதிர்க்களை நான் ரவுரவாதிநரகத்தில் தள்ளநினைத் தேனே யென்று இப்படி அநுதாபப்பட்டு அழுது அந்த அம்மாளுடைய இரண்டு சரணத்தையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு ஓ அம்மணி யென்னைப்பெற்றவளே நான் பண்ணின அபராதத்தைப்பொறுத்துக் கடாக்ஷிக்கவேண்டும்- நான் அஞ்ஞானி-மகாபாபி-யெனக்கு அபயம் கொடுத்து யென்னை கபீருடைய சரணத்தில்போட்டு கிருபாதிருஷ்டி யினுலே பார்த்து கடாக்ஷிக்கச்சொல்லவேண்டும் அம்மாவென்று மகா விசனத்தோடேயும்வைராக்கியத்தோடேயும் சொல்லஅவ்வசனத்தைக் கபீருடைய ஸ்திரீயானவள் கேட்டுச் சந்தோஷமாய் அப்பா உன் மனது நிர்மலமானது. இப்படிக்கு நீ வைராக்கிய சீலனுனபோதே நீ விவேகி யும் புண்ணியசாலியும் ஆகிறாய்-உன்னுடைய வம்சத்து பிதிர்க்களும் அவினுசபதவியான வைகுண்டத்தை யடைவார்கள். உனக்கு யிந்தப் பவரோகம் நிவாரணமாயிற்று. இன்றைக்கு உனக்கு வைஷ்ணவ சிகாமணியான கபீருடைய தரிசனம் பண்ணுவிக்கிறேனென்றுசொல்லி அந்த வர்த்தகனையுமழைத்துக்கொண்டு வீட்டுக்குவந்து தன் புருஷ னுக்குநடந்தவிருத்தாந்தமெல்லாவற்றையும் விநயத்துடனே சொல்லி அந்த வர்த்தகனை ரக்ஷிக்கும்படியாகவும் சொன்னாள். அப்போது அந்த வர்த்தகன் கபீருடைய சரணத்தில் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து அநுதாபமான வார்த்தைகளைச் சொல்லக் கபீரானவர் இவர் வைராக் கியத்தின் மிகுதியை அறிந்து வர்த்தகனை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு ஓ வர்த்தகரத்தினமே நீயே தன்னியன் - நீயே விவேகி - ஸ்ரீ இராமச் சந்திரனைச் சதாதியானம் பண்ணிக்கொண்டும் - அவனுடைய நாமத் தையே உச்சரித்துக்கொண்டும் - அவனுடைய தாசர்களுடைய கைங் கரியத்தையே பண்ணிக்கொண்டும் - ஆனந்தமூர்த்தியாய் உலகில் அபேக்ஷித்தபடிக்கு விளையாடிக்கொண்டிரு அப்பா வென்று அருளிச் செய்தார். அந்தவர்த்தகன் அப்படியே அர்த்தஏஷணை-புத்திர ஏஷணை

தார ஏஷணைகளை வெறுத்து- ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்தியைத் தியானம் பண்ணிக்கொண்டு ஆனந்தபரிதனாய் ராமநாமத்தை ஜெபித்துக் கொண்டு இருந்தான். ஆகையால் சாதுசங்க தரிசனம் பண்ணின மாத்திரத்திலே சடமூட அஞ்ஞானிகளும் கிருதார்த்தர்களாவார்கள். இந்த அதிசயத்தை நாமதேவரும் ஞானதேவரும் கேட்டு ஆச்சரியப்பட்டார்கள். அவர்கள் தீர்த்தயாத்திரைசெய்து மறுபடியும் கபீர் வீட்டுக்குவந்தபொழுது கபீர் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து உபசாரமாய் உள்ளே அழைத்துக்கொண்டுபோய் ஆசனம்போட்டு உட்காரவைத்தார். அப்போது இவர்கள் சந்தோஷபரிதர்களாய் ஆனந்தாமிர்தப்பிரவாகத்தில் நீந்தி விளையாடிக்கொண்டிருக்கும்போது- ஞானதேவர் கபீருக்கும் நாமதேவருக்கும் பூர்வஜன்மத்தை ஞாபகபடுத்தினார். நீர்சுகர்-நீர்உத்தவர்- நீங்களிருவரும் சிப்பியிலே மூடப்பட்டுக் கங்காநதியிலேயும் பீமாநதியிலேயும் ஸ்ரீமந்நாராயணனுடைய ஆக்கினையினாலே வந்து அவதரித்தீர்கள். லோக உத்தாரணம்பண்ணுங்களென்று நினைப்புப் படுத்துகிற போது இருவரும் எழுந்திருந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சுவாமி ஞானமூர்த்தி யெங்களுக்கு ஞாபகம்வந்ததென்று சொன்னார்கள். ஞானதேவர் கபீர்தாசரைப்பார்த்து ஓ பக்த சிரேஷ்டரே பண்டரிபுரக்ஷேத்திரத்தில் புண்டலீக பக்தனுக்குத் தரிசனம்கொடுக்கிற நிமித்தம் வைகுண்டாதிபதியும் பரப்பிர்மமூர்த்தியும் ஆகிய ஸ்ரீமந்நாராயணன் சகளமூர்த்தியாய் லீலாமானுஷவிக்கிரகராய் செங்கல்லின் பேரிலே நின்றுகொண்டிருக்கிறார். அவர் இந்த நாமதேவருக்குப் பிராண சகாவானவர். சர்வசாக்ஷியான அந்தப் பண்டரிநாதனை நீர் வந்து தரிசனம் பண்ணவேண்டுமென்று சொல்ல-அவர் ஆனந்தபரிதராய்ச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சுவாமி தேவரீருடைய ஆக்கினைப்படிக்குக் கார்த்திகை மாதம் ஏகாதசி உற்சவத்துக்கு வந்து சேருகிறேனென்று சொன்னார். ஞானதேவரும் நாமதேவரும் உடனே சந்தோஷமாய் உத்தாரம்வாங்கிக்கொண்டு தீர்த்த யாத்திரைபண்ணப்போய்விட்டார்கள். இந்தஅத்தியாயம்சம்பூரணம். இந்த அத்தியாயத்தைச்சிரவணம் பண்ணினவர்களுக்குப் பக்தி ஞான வைராக்கியமுண்டாய்த் தேகாந்தியத்தில் குலகோடிசையுக்தர்களாய்ப் பரமபதத்தை அடைவார்கள்-ஸ்ரீஇராமச்சந்திரபரீமகுரவேநம:.

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

# ஞானதேவர் நாமதேவர் தீர்த்தயாத்திரையில் கிணற்றுநீர் பெருகியதும் நாகநாதர் சன்னிதி திரும்பியதுமாகிய சரித்திரம்.

ஸ்ரீஇராமச்சந்திர பரப்பிர்மணேநம: கேளுங்கள் பாக்கியசாலிகளே பக்த விஜயமென்னப்பட்ட மேகம் ஞானாகாசத்திலிருந்து சுகாநந்தாமிர்தவருஷத்தை வருஷிக்கிறது. சத்துவ சீலரானசாதக பக்ஷிகள் அதைப் பானம் பண்ணித்திருப்தியடைகின்றன. ஆதலால் அப்படிப்பட்ட பக்த விஜயத்தின் பன்னிரண்டாம் அத்தியாயத்தைச் சொல்லுகிறேன். முன் அத்தியாயத்தில் நாமதேவரும் ஞானதேவரும் கபீர்தாசர் வீட்டுக்கு வந்ததும் அந்தக்ஷேத்திரத்திலே நாலுமாதபரியந்தம் வாசம் பண்ணிக் கொண்டிருந்ததும் கேட்டீர்களே - அதற்குமேல் நாமதேவரும் ஞான தேவரும் கங்காதீரத்தை விட்டுப் பிரயாகைக்கு வந்துஸ்நானம் பண்ணி விட்டு அயோத்தி மதுரை கோகுல முதலியவற்றைப் பார்த்துவிட்டுத் துவாரகைக்கு வந்து அவ்விடத்திலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணி விட்டு தெய்வதரிசனமும் பண்ணிக்கொண்டு மாறுவாடுதேசத்துக்கு வருகையில் வழியிலே ஆரண்ணியத்தில் இரண்டுபேருக்கும் தாகமதிகமாய் ஜலத்தின்பேரில் அபேக்ஷையாகித்தேடிக்கொண்டுவந்தார்கள் அப்பொழுது வழியில் ஒரு கிணறு இருந்தும் அதிலேஜலம் வெகு ஆழத்திலேயிருந்தபடியால்கண்ணுக்குக்கூடதெரியவில்லை. அப்போது நாமதேவர்ஞானதேவரைப்பார்த்துஇந்தப்பாதாளத்திலேஇருக்கிறஜலத்தை யெந்த உபாயத்தினாலே யெடுத்துத் தாகசாந்தி பண்ணிக்கொள்ளலாமென்று கேட்க ஞானதேவர் எனக்கு சரீரம் பழக்கமதிகம் ஆதலால் உள்ளேபோய் ஜலத்தை சாப்பிட்டுவிட்டுவருவேனென்று சொல்லிக் கிணற்றுக்குள்ளே நுழைந்து தாகசாந்தி பண்ணிக்கொண்டு வந்துவிட்டார். அப்போது நாமதேவர் தாகத்தினாலே அவஸ்தைப்படுகிறதைப்பார்த்து ஏன் சிந்தைப்படுகிறாய் உனக்குச் சரீரம் இலகுப்பண்ணதெரியவில்லைதுயரத்தைவிட்டுவிட்டால் அப்பொழுதுதெரியும் நான் ஜலம் கொண்டுவந்து கொடுக்கிறேனென்று சொன்னார். அப்போது நாமதேவர் சர்வவியாபகனும்சர்வாந்தரியாமியுமான பண்டரிநாதன் என் தாகசாந்தியைப் பண்ணமாட்டானாஸ்வாமி யென்றுசொல்லி ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தார் சுவாமி கருடவாஹனா - காருண்ணிய

மூர்த்தே - ருக்குமணிபதியே - என்தாயும் நீ- தகப்பனும் நீ-உறவும் நீ-குருவும் நீ-எனது இஷ்டதெய்வமும் நீ-என்பாக்கியமும் நீ-என்குணமும் நீ-புத்தியும் நீ-சித்தமும் நீ- என்னுடையசகலவைபவமும் நீ - என்பிராணனும் நீ அன்றோ பண்டரிநாதாவென்று மிகவும்ஸ்தோத்திரம்பண்ணிச் சீக்கிரம் ஓடிவா சீக்கிரம் ஓடிவா வென்கிறபோது பண்டரிநாதனுக்கு இடக்கண் துடிக்கத்தலைப்பட்டது. அப்போது ருக்குமணியைப்பார்த்து இப்படித்துடிக்கக் காரணம் என்ன எந்த பக்தனுக்கு என்னகவலையோ என்னஆபத்து வந்ததோ நாமதேவனுக்கு என்ன அவஸ்தையோ தெரியவில்லையே யென்றுசொல்ல - ருக்குமணிதேவி சுவாமிநாமதேவர் ஆரண்ணியத்திலே தாகத்தினாலே அவதிப்பட்டுத் தேவரீரை ஸ்தோத்திரம்பண்ணிக் கொண்டிருக்கிறார் ஆதலால் சுவாமி சுறுக்கிலேபோய்த் தாகசாந்திபண்ணுவிக்க வேண்டுமென்று சொல்ல -உடனே பகவான் அங்கேஜலம் பெருக நினைத்தார். அந்தக்ஷணத்திலே அந்தக்கிணற்றினின்றும் ஜலம் பெருகிவழிந்தது. நாமதேவர் தாகசாந்தி பண்ணித்திருப்தியடைந்தார். அப்பொழுது ஞானதேவர் ஆச்சரியமாய் நாமதேவரை ஆலிங்கனம்பண்ணிக் கொண்டு நாமதேவா சக்கரபாணி உன்சுவாதீனம். பிரம்மாதிதேவதைகள் வேதவேதாந்தங்கள் அஷ்டாங்க யோகிகள் சித்தர்கள் முதலானவர்களுக்குத் துற்லபனான தேவாதிதேவன் உன்கைவசமாயிருக்கிறபடியால் நீ எந்த அதிசயத்தைத்தான் காண்பிவிக்கமாட்டாய். உன்னுடையபேரைச் சொன்னமாத்திரத்திலே சகல தீர்த்தங்களும் பாவனமாம். நீ ஒருதீர்த்தயாத்திரைக்கும் போக வேண்டியதில்லை யென்று இப்படிப் பலவாறு நாமதேவரை ஸ்தோத்திரம் பண்ணி அடிக்கடி ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு இருவரும் இளைப்பாறிவிட்டு அப்பால் போய்விட்டார்கள். அந்தத்தீர்த்தக் கிணறு அத்தியாபிமாறுவாடுதேசத்தில்நதியாய் ஓடுகிறது. மார்கழிமாதம்சகல ஜனங்களும் வந்து ஸ்நானம் பண்ணுகிறார்கள். அந்தக்கங்கைக்கு மகத்துவமதிகம். அதைத் தனித்தனி வர்ணிக்கவேண்டு மென்றால் இந்தக்கிரந்தம் அதிகமாய் வளரும்.

அதன்மேல் நாமதேவரும் ஞானதேவரும் புறப்பட்டு நானாதீர்த்தங்களில் ஸ்நானம்பண்ணிக்கொண்டும் ஆலயங்களைத் தரிசனஞ் செய்துகொண்டும் வந்தார்கள். அவற்றை எல்லாம் விரிவாய்ச்சொல்லி முடியாது. ஆனாலும் சம்க்ஷேபமாய்ச்சொல்லுகிறேன். பதரிகாசிரமத்துக்குவந்து அவ்விடத்திலிருக்கிற தீர்த்தங்களில் ஸ்நானம் பண்ணி இமாசல பருவதத்திற்கு வந்து ஸ்நானம்பண்ணிவிட்டு அங்கேயிருந்து தாரோஜெகந்நாதத்திற்குவந்து கிருஷ்ணபரமாத்துமாவைத்தரிசனம்பண்ணிவிட்டு அவ்விடத்திலிருந்து புறப்பட்டு ஓங்காரராமேஸ்வரம் வந்து தரிசனம் பண்ணிக்கொண்டுகேதாரத்துக்குப்போய்த்தரிசனம்பண்ணிவிட்டுஅவ்

விடத்திலிருந்துபுறப்பட்டு உச்சனிமாகாளியைப்பார்த்துவிட்டு வைத்தி யநாதத்திற்குவந்து அப்பால்சொரட்டீஸ்வரரைத்தரிசனம்பண்ணிவிட்டு மல்லிகார்ச்சுனத்திற்கு வந்து மல்லிகார்ச்சுனேஸ்வரரைத் தரிசனம் பண்ணிக்கொண்டு சையிலவாதீரத்திற்கு வந்து ஸ்நானம் பண்ணித் திரியம்பக்த்திலே வந்து பஞ்சமுக ஈஸ்வரரைத் தரிசனம்பண்ணிவிட்டு மேல் சமுத்திரக்கரைவழியாய் வரும்பொழுது அவ்விடத்திலிருக்கிற கேரளதேசத்தில் ஜநார்த்தனம் அனந்தபத்மம் திருக்குற்றாலம் பாப விநாசம் முதலான ஸ்தலங்களிலுள்ள தீர்த்தங்களில் ஸ்நானம் செய்து அவ்வவ் ஸ்தலதெய்வ தரிசனமும் செய்து கொண்டு ஸூமாசங்கமத் தில் ஸ்நானம்செய்து ராமேஸ்வரத்திற்குவந்து சேது ஸ்நானம் பண்ணி விட்டு அவ்விடத்தை விட்டுப் புறப்பட்டு ஆலிடைநாதன் ஸ்ரீரங்க தரி சனம் பண்ணிக்கொண்டு சந்திரபுஷ்கரணி அகண்ட காவேரி முதலிய தீர்த்த ஸ்நானம் பண்ணிவிட்டுச் சோழ தேசத்திலிருக்கிற சிவாலய விஷ்ணு ஆலய தரிசனமும் தீர்த்தஸ்நானமும் பண்ணிவிட்டுக் காஞ்சி- வேங்கடாசலம் - கெடிகாசலம் - காளஅஸ்தி முதலான ஸ்தலங்களை யும் தரிசனம் பண்ணிக்கொண்டு நாகநாத புரத்துக்கு மாசி மாதம் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசியாகிய மகா சிவராத்திரி தினம் வந்து சேர்ந் தார்கள். இவர்கள் அயோத்தி - மதுரை - மாயா - காசி - காஞ்சி - அவந்தி-துவாரகையாகிய விந்த ஸ்தலங்களை ஆரம்பத்திலேயே தரிச னம் பண்ணினார்களாகையால் அப்பொழுதே அசுவத்த விருக்ஷசேவை பண்ணின மாத்திரத்திலே சகல விருக்ஷங்களையும் சேவை பண்ணின பலனடைவது போலும்-ஆதிசேஷனை வந்தனம்பண்ணின மாத்திரத்தி லே சகல சர்ப்பங்களுக்கும் வந்தனம் பண்ணின பலனையடைவது போலும்-கருடனை ஆராதித்துச் சகல பக்ஷிகளையு மாராதித்த பலனை யடைவது போலும்-கேசவனைப்பூசித்துப் பிரமருத்திராதி தேவர்களை யெல்லாம்பூசித்த பலனையடைவதுபோலும் சகலதீர்த்தங்களிலேயும்ஸ் நானம்பண்ணிச் சகல ஸ்தலங்களையும்தரிசனம்பண்ணின பலனையடைந் திருந்தாலும் பின்னும் அந்த வழக்கத்தை விடாமல் ஸ்நானம் சந்தியா வந்தனம் முதலிய நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு அவ்வூரி லுள்ள நாகநாதர் கோவிலுக்கு வந்து சாஷ்டாங்கமாய்ச்சேவித்து ஸ் தோத்திரம் பண்ணிச் சந்திரமௌளியீசுவரனை ஆலிங்கனம் பண்ணிக் கொண்டு மகாமண்டபத்தில் வந்தவுடனே நாமதேவர் விநயமாய் தாள மத்தளங்களுடனே கீர்த்தனம்பண்ணத்தலைப்பட்டார். இவர்இப்படிவிட் டல நாதனைத் தியானம்பண்ணிக்கொண்டு ஹரி கீர்த்தனம் பண்ணுகிற போதுசமஸ்தமான ஜனங்களும் வந்து கூடி ஆனந்த பாஷ்பஞ்சொரிந்து கொண்டேயிருந்தார்கள். சிலருக்குத் தேகஸ்மரணை தப்பிப்போய்விட் டது. இப்படி யிருக்கிறசமயத்தில் அந்தக்கோவில் பிராமணர்கள் சுசிய ராய் ஸ்நான சந்தியாவந்தன முதலிய நித்திய கர்மங்களை முடித்துக்

கொண்டு கோவிலிலே சுவாமிக்குப் பூசை பண்ணும்பொருட்டுவந்து இந்தக்கூட்டத்தைக்கண்டு உள்ளேபோக வழியில்லாமையால் அவர்களைப் பார்த்து இதென்னகூட்டம் நாங்கள்உள்ளே போகிறதற்குவழிவிடுங்கள் எங்களைத் தொடாதீர்களென்று சொல்லிப்பின்னையும் அருமையினுலே யிதென்ன இரைச்சல் இந்தக் கூத்துக் கைத்தாளங்களெல்லாம்பண்டரி புரத்திலே செய்யவேண்டும் இவ்விடத்திலே சிவன் முன்னே ஹரிகீர்த்தனம் என்னகாரியத்திற்குப் பண்ணவேண்டுமென்று சொல்லியும் வழிவிலக்கப்படாமையால் பின்னையும் மிகவும்கோபமாய் நாமதேவரண்டையில் வந்து ஓய் இதென்ன ஆடல் பாடல் கோவிலுக்குப்போகிறவர்கள் வருகிறவர்களுக்குக் கூட வழியில்லையே -வேண்டுமானால் கோவிலுக்குப் பின்னாலேபோய்க் கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருமென்று சொல்ல- நாமதேவர் நல்லது சுவாமியென்று சாஷ்டாங்கமாய்ச் சேவித்துவிட்டுக் கோவிலுக்குப்பின்னாலேபோனார். அப்பொழுது கேட்டுக் கொண்டிருந்த ஜனங்களும்பாலிலே உப்புவிழுந்ததுபோலும் சந்தனத்திலேவெள்ளைப்பூண்டு தயிலம் விழுந்தது போலும் கதையின் ரசமுரிந்துபோனபடியால் ஷட்ரசான்னங்களைப் பரிமாறி அப்பால் இலையோடே யெடுத்துக்கொண்டு போய்விட்டால் எப்படி விசனமாமோ அப்படிக்கு விசனப்பட்டுக்கொண்டு எழுந்திருந்து சிவாலயத்துக்குப் பின்னாலே நாமதேவர் ஞானதேவரோடே கூடப்போய் உட்கார்ந்தார்கள். நாமதேவர் கீர்த்தனத்துக்கு ஆரம்பித்து ஆனந்த பரிதராய்ப் பண்டரிநாதா-ருக்குமணி ரமணா- ஜகஜ்ஜீவனா- கிருஷ்ணா- கோபாலா- கோவிந்தா- என் தாயேயென்று ஸ்தோத்திரம் பண்ணி அந்தப்பாண்டு ரங்கனை நினைத்துத் தாயைப்பிரிந்த கன்றுபோல நானாவிதமாக வர்ணித்து ஸ்தோத்திரம்பண்ணிக் கொண்டிருக்கையில்- ஆகாசத்திலே யிருந்து ஒன்பதுலக்ஷம் தேவர்கள் கீர்த்தனம் பண்ணுகிற விடத்தில் தேதீப்பியமாய் மின்னல் போலப் பிரகாசித்துக்கொண்டிருக்கிற கொடியைப்பிடித்துக்கொண்டு வந்து இறங்கினார்கள். அப்போது சகலரும் ஆச்சரியமாய் மலைத்துப்பிரமித்து ஸ்ரீவைகுண்டநாதன் வருகிறானோ வென்னமோ தெரிய வில்லை யென்று திக்பிரமையாய்ப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அப்போது நாமதேவருக்கு அதிக ஆனந்தமாய் ராமா கிருஷ்ணா வென்கிற நாமங்களை உச்சரித்துக்கொண்டு கீர்த்தனத்துக்கு ஆரம்பித்தார். இந்த ஒன்பது லக்ஷம் பதாகைகளும் ஒன்பது லக்ஷம் சூரியன் சந்திரன் பிரகாசம்போலே லோகமெல்லாம் பிரகாசித்தன. ஆகாசத்திலே யிருக்கிற இந்திராதி தேவர்கள் புஷ்ப வருஷம் வருஷித்தார்கள். அப்பொழுது கிழக்கு முகமாயிருந்த நாகநாதருடைய சந்நிதி மேற்கு முகமாக நாமதேவர் கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கிறதற்குச் சரியாய்த் திரும்பிப்போயிற்று. சகலரும் கைகொட்டிக்கொண்டு ஆனந்தகீர்த்தனம் பண்ணிக்கொண்டு விதேகஸ்திதியாய்ப் பரவசமானார்கள்.

அப்போது நாமதேவர் என் பிராண நாதா- பண்டரிநாதா - புரு ஷோத்தமா என் சொல்லையும் என்னுடைய பிடிவாதங்களையும் நிறை வேற்றிக்கொண்டிருக்கிற என் அன்பான தாயே- என் கருணைக்கடலே என்னிதியே-என்னுயிர்க்கமுதே-என் பெருஞ்செல்வமே-யென்றுசொல் லிக்கொண்டு ஆனந்த சமுத்திரத்தில் முழுகிப்போய் அன்று ராத்திரி முழுவதும் ஹரியினுடைய கலியாண குணாமிர்தத்தைச் சகலமான ஜனங்களாகிய பயிர்களுக்கு மேகம்போல்வருஷித்துச்சமஸ்தஜனங்களை யும்ஆனந்தபரிதர்களாக்கிக் கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கப் பொ ழுது விடிந்து சூரிய வுதயமாயிற்று. உள்ளேபோன பிராமணர்கள் நாலு ஜாமமும் சிவ பூஜை பண்ணிச் சூரியன் உதயமான உடனே வெ ளியே ஸ்நானத்துக்குப் புறப்பட்டார்கள். அப்போது சந்நிதியில் நாமதேவருடைய கீர்த்தனம் ஆனந்தமாய் நடந்துகொண்டிருக்கிறதைப் பார்த்துக் கொண்டுவருகிற இவர்கள் கண்ணுக்குச் சூரியன் மேற்கே உதயமானதுபோலே தோன்றியது. உடனே இது என்ன அதிசயம் சூரி ய நாராயணன் ஏன் இப்படி உதயமானார். அல்லது நமக்குத்தான் தி சை மோசமாய்த் தெரிகிறதோ. சிவராத்திரிமுழுதும் விழித்துக்கொண் டிருந்தோமே அந்த மயக்கமோ வென்று நன்றாய்ப் பார்க்கும்போது சூரி யன் கிழக்கிலேயே உதயமாயிருக்கிறார். தீர்த்தங்களெல்லாம் முன் னிருந்தபடியே யிருக்கின்றன. கோவில் மாத்திரம் சந்நிதி மேற்கு முக மாய்த் திரும்பிப்போயிருக்கிறது என்று அறிந்து இந்தநாமதேவருடைய பக்திக்காகத் திரும்பிப்போயிற்று. சந்திர மௌளீசுவரர் ஹரி கீர்த்தனப் பிரியராய் நாமதேவருக்குச் சமமுகமாகத்திரும்பினார். ஓ! ஓ! இது மிகுந்த அதிசயம். நாம் பாமரர்களானதால் இத்தன்மையான பாகவ தோத்தமனுக்கு அபசாரம் பண்ணினோம். கர்ம அபிமானத்தினாலே இவ ரைக் கோயிலுக்குப் பின்னாலே போகச்சொல்லினோமென்று எண்ணிப் பயந்து நாமதேவரண்டையில் ஓடி வந்து அவருக்கு மானசீகமாய்ச் சேவித்துக்கொண்டு ஓ நாமதேவரே நீரே பக்தசிகாமணி - நீரே வைஷ்ணவ வீரன் உன் குலமே குலம் உன்னைப்பெற்றவள் பாக்கிய மே பாக்கியம் உன்னைப்பார்க்கிறவர்களுடைய கண்களேகண்கள் உனக் குச் சகாவாயிருக்கிறவர்களுடைய புண்ணியமே புண்ணியம் உன்னைச் சேவிக்கிறவர்களே தன்னியர்கள் உன்னுடைய நாமத்தை ஸ்மரிக்கிறவர் களுடைய செல்வமே பெருஞ்செல்வம் உன்னுடைய ஆனந்தமே ஆனந் தம் திரிபுவனத்திலும் பிர்மாதி தேவதைகளுக்கும் உன் பிரபாவம் தெரியமாட்டாது. உன்னுடைய நிஜரூபமும் நீ முன்உத்தவராயிருந்து இப்போது நாமதேவராக அவதரித்ததும் நாங்கள் கண்டோம் உமது பாக்கிய வசத்தை வேதங்களும் வர்ணிக்கமாட்டாவாம். அகிலாண்டத் துக்கு ஆதாரமான ஸ்ரீமந்நாராயணனுடைய பதாகர்கள் உன் சவரக்ஷ ணார்த்தம் நிற்கிறார்கள், இதோ திவ்விய தேகத்தோடு விமானாரூடர்க

ளாய் புஷ்ப வருஷங்கள் வருஷித்துக்கொண்டு இருக்கிற இந்திராதி தேவதைகள் சமஸ்தமான பேர்களேயும்பாரும் உம்முடைய சரித்திரமே சரித்திரம் அதுவே பவித்திரம் ஞான தேவரைப் பிராமணர்கள் பிரஷ்டரென்று தள்ளிவிட அவர் சோதனையின் நிமித்தம் எருமைக்கடா வாக்கிலே யிருந்து நாலு வேதங்களேயும் சொல்லி லோகமெங்கும் பிரகாசம் பண்ணினதுபோல நீரும் அகடித காரியங்களேப் பண்ணுவித்தீரென்று ஸ்தோத்திரம்பண்ணிவிட்டுத் திடஸித்தமாய் நின்றுகொண்டிருக்கையில்- நாமதேவர் மங்களார்த்தி யெடுத்து ஜெய ஜெயா கோஷம் பண்ணினர். அப்போது இந்தப் பதாகைகள் ஸ்ரீ வைகுண்டத்திற்குப் போய்விட்டன. அந்தக்கோவில் இன்னமுமப்படியே மேற்கு முகமாய்த்திரும்பியிருக்கிறது. சகல ஜனங்களும் ஆனந்தபரிதர்களானர்கள். ஞானதேவர் நாமதேவரை ஆலிங்கனம் பண்ணி மார்போடு அணைத்துக்கொண்டு சரீரத்தைக் கருணையோடு அபய அஸ்தங்களினாலே நகசிகை பரியந்தம் தடவிக்கொடுத்தார். இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியாயத்தையும் இதில் விசேஷமாய் நாமதேவரை நாகநாதர்கோவில் பிராமணர்கள் ஸ்தோத்திரம் பண்ணினதையுங் கேட்டமாத்திரத்திலே திரிவிததாபங்களும் நிவர்த்தியாய்ப் பவரோகம் வேரோடு களையப்பட்டுச் சீவன் முக்தியடைவார்கள். பக்தவத்சலாய நம: ருக்குமணிமனோகராயநம:.

## பதின்மூன்றாவது அத்தியாயம்.

# பகவான் நாமதேவர் தீர்த்தயாத்திரையை உத்தியாபனம் பண்ணுவித்த சரித்திரம்.

ஸ்ரீஇராமச்சந்திர பரப்பிரமணேநம: கேளுங்கள்பாக்கியசாலிகளே இந்தச்சாதுக்களுடைய சரித்திரம் ருக்குமணிவாசனை பாண்டுரங்கனுக்கே அத்தியந்தம் பிரியகரத்தைப் பண்ணுவிக்கிறது. அந்தப் பீமாதீரவாசியானவர் தன்பக்தர்களுடைய சரித்திரத்தை வர்ணிக்கிறபோது சந்திரனைக்கண்டசமுத்திரம் பொங்குவதுபோலவும்- சிஷ்யனுடைய சற்குணத்தை வர்ணிக்கக்கேட்டகுருவுக்குச் சந்தோஷமுண்டாவதுபோலவும் அத்தியந்தம் சந்தோஷமடைந்துபடிக்கிறவர்களுக்கும் கேட்கிறவர்களுக்கும் அவரவர்கள் அபீஷ்டங்களைக் கொடுத்துத் தேகாந்தியத்திலே பரமபதத்தைக்கொடுக்கிறர். ஆனதினாலே அப்படிப்பட்ட சாதுக்களு

டைய சரித்திரமாகியவிதைக் கேட்டு ஸ்ரீமந்நாராயணனுடைய கிருபை யையடைவதே பூமியில் மனிதராகப் பிறந்ததற்குப்பலனாகும். இல்லாவிட்டால் பிறந்தும் பலனற்றவர்களேயாவர். முன்அத்தியாயத்திலே நாமதேவரை நாகநாதர்கோவில் பிராமணர்கள் ஸ்தோத்திரம்பண்ணின உடனே நாமதேவரும் ஞானதேவரும் கைலாசபதியைச் சேவித்துக் கொண்டு அவ்விடம் விட்டுப் புறப்பட்டுப் பண்டரிபுரத்துக்கு வந்து சேர்ந்து தேகபரவசர்களாய்ப் பண்டரிநாதனுடைய கோவில்ஸ்தூபியைக்கண்டுசேவித்துக்கொண்டு பிறகு ஆனந்தபரிதர்களாய் ஹரிகீர்த்தனம் பண்ணிக்கொண்டு தாயைப்பிரிந்த மான்குட்டி மறுபடியும் தாயைக் கண்டால் எத்தனையாசையாய்ஓடிவருமோ அவ்வளவாசையோடுகோவிலுக்குவந்து சந்நிதியிலே வணங்கி உள்ளேபோய்ச் சபாமண்டபத்திலே யெழுந்தருளியிருக்கிற சுவாமியைக்கண்டு சேவித்துக்கொண்டார்கள். அப்போதுபகவான் சிம்மாதனத்தைவிட்டுக்குதித்துத்தாயானவள்குழந்தையையெடுத்து மார்போடணைத்துக்கொள்வதுபோல ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மகாசந்தோஷத்தையடைந்தார். நாமதேவர் சுவாமியினுடைய பாதத்திலேவிழுந்து ஆனந்தபாஷ்பத்தோடு சுவாமி தீனதயாளா-பாண்டுரங்கா-அஞ்ஞானத்தினாலே நான் இந்தஸ்தலத்தை விட்டுஅலைந்தேனானாலும் என்னுடையமனசானது சந்திரபாகையிலேபற்றியிருந்தது. கருடத்துவஜமும்நிசான்களும் வைகுண்டநாதனும்எவ்விடத்திலேஇல்லையோ அவ்விடத்திலெல்லாம் உன்னுடைய ரூபத்தைத் தியானித்துக்கொண்டேயிருந்தேன். என்னுடையதாய்தந்தைகுலதெய்வம் இஷ்டமித்திரர்களாகிய சகலமும்நீயேயாதலால்அனாதையாகியஎன் பேரில்கிருபைசெய்யென்றுசொல்லி விட்டிருந்தார். அப்போது ருக்குமணிபதியான பண்டரிநாதர் அப்பா நாமதேவா உன்னுடையபஜனமே இராவும்பகலும் மகாஇன்பத்தைத்தந்து கொண்டிருந்தது. நீபிரிந்தபிறகு அவ்வாறுஇன்பங்கொடுக்கும்பிரேமளபக்தரில்லை அதினாலேஆகாரம்கூட இல்லாமல் உன்னுடையவழியையே பார்த்துக்கொண்டிருந்தேன். நீ வெகுதூரம் போனபடியினாலே இந்தபண்டரிபுரமும் என்திருஷ்டிக்குக் களைநீங்கியதுபோலிருந்தது. உன்னையே யெப்போதும்நினைத்துக்கொண்டிருந்தேன், என்னுடைய பிரேமளபக்தனே யினிமேல் என்னை விட்டுப்பிரியாமல் என்னிடத்திலேயிரு எனக்கு உன்னிடத்திலேயே பிரியம். சூரியனிடத்தில்கமலத்திற்கும் மேகத்தினிடத்தில்சாதகபக்ஷிக்கும் தாயினிடத்தில் பிள்ளைக்கும்இருக்கிறபிரியம்போலும்உனக்கும் என்னிடத்திலேயேபிரியம். எனக்குஉன்னைப்பார்க்கிலும்பிரியமானவர்சொர்ப்பனத்திலும் எங்குமில்லை. நீஉன்னுடையபசியிலேயும்இளைப்பிலேயும்சுகதுக்கங்களிலேயும் என்னையே நினைத்துக்கொண்டிருந்தாய் என்னை விட்டுப்பிரிந்து வெகுகஷ்டப்பட்டுவந்தாயென்று சொல்லிவிட்டுச் சகலமானபக்தர்களும் பார்த்துக்கொண்டிருக்கையில்நாமதேவரை மறுபடி

யும் ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு முகத்தைத்துடைத்துத்தம்முடைய கழுத்திலேதரித்துக்கொண்டிருந்த துளசிமாலையையெடுத்து அவர்கழுத்திலேபோட்டுத்தேகமாத்தியந்தமும் கிருபாதிருஷ்டியினாலேபார்த்தருளினார். அப்போதுவந்த வைஷ்ணவ வீரர்களாகிய நிவர்த்திதேவர்ஞானதேவர் சோபானுதேவர் வீசோபாகேசர் முதலான பலரும்கூடிக்கொண்டுவந்து பண்டரிநாதனைச் சாஷ்டாங்கமாகச் சேவித்து நாமதேவரையும் ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு சமுத்திரகோஷம்போல்ஜெயஜெயாகாரமாய் நாமகர்ஜனை பண்ணினார்கள். அப்போதுரிஷீசுரர் முனீசுரர்களும் ஆகாயத்திலே புஷ்பவருஷம் வருஷித்துக்கொண்டு பிர்மாதிதேவர்களும் நாமகெர்ஜனை பண்ணிக்கொண்டுபண்டரிநாதன் சந்நிதானம் வந்து சேர்ந்தார்கள். உடனே லோகமாதாவாகிய ருக்குமணித்தாயார் இவர்களுக்குப்பஞ்சாலத்தியெடுத்து நாமதேவருடையதாழ்வாய்க்கட்டையைப் பிடித்துக்கொண்டு முகத்தைப் பரிபூரணகிருபையோடு பார்த்து மகிழ்ச்சியடைந்தாள்.

பிறகு பகவான் நாமதேவரைப்பார்த்து நீ வெகு கஷ்டப்பட்டுத் தீர்த்தயாத்திரைப் பண்ணிவந்தபடியினாலே அதை உத்தியாபனம்பண்ணவேண்டும் பண்ணாவிட்டால் ஷட்ரசான்னம் பண்ணிப் போஜனம் பண்ணாவிட்டால் எப்படிப்பலனில்லையோ அப்படிப்போல யாத்திரை பண்ணி விட்டுச் சமாராதனை பண்ணாவிட்டால் பலனில்லை யென்று சொல்லிக் கையைப் பிடித்துக்கொண்டு அந்தப்புரத்திலுள்ள ஏகாந்த மண்டபத்துக்கு அழைத்துக்கொண்டுபோய்க் குஞ்சிரிப்புடனே ஸ்ரீசாரங்கதரன் ருக்குமணியைப்பார்த்துஒருக்குமணியென்பிராணசகாவான நாமதேவன்தீர்த்தயாத்திரை பண்ணிவந்தான் அதற்கு உத்தியாபனம் பண்ணவேண்டுமென்று சொல்ல-அதற்கு ஜகன்மாதாவான அந்த ருக்குமணிதேவி அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகா - தேவதேவோத்தமா- தேவதா சர்வபூமா-என்பிராணநாதா இந்தநாமதேவனுக்கு உம்முடைய திருவடிகளைத்தவிர வேறே ஒருஆதாரமுமில்லாதபடியால் அவனுடைய காரியங்களையெல்லாம் நீர்தான் செய்யவேண்டும். இவனுடைய பக்தி அற்புதமானது. இவனுடைய பிரபாவம் பிர்மாதி தேவர்களுக்கும் தெரியாது. ஆனதினாலே இப்போதே சீக்கிரமாய் நாமதேவரைக் கூட்டிக்கொண்டு ஊரிலேயிருக்கிற பிராமணர்களுக்கெல்லாம் விருந்து சொல்லிவிட்டுவாருமென்றுசொல்லிப்பின்னும்எதுதான்தேவரீருடைய சங்கல்பத்துக்கு தடையாயிருக்கும் இச்சாமாத்திரத்தில் யாவும்நடக்குமே தேவாதிதேவா சூரியனுக்கும் ஒன்றைப் பார்ப்பதற்கு விளக்கு வேண்டுமோவென்று சொன்னாள். அவ்வசனத்தை வைகுண்டவாசியானவர்கேட்டு சந்தோஷத்துடனே நிவர்த்திதேவர் ஞானதேவர் சோபானுதேவர் முதலானவர்கள் நிசான்பிடிக்கவும் சனகாதிமுனிகள் இந்த

அதிசயத்தைப் பார்த்துக்கொண்டு பின்னே நடக்கவும் நாமதேவரை முன்னேநடத்திக்கொண்டு தான் பின்னாலே போனார். அவரைச் சரணாகத வச்சலனென்றும் அடியவர்க் கெளியவனென்றும் பக்தபராதீனனென்றும் அனேகம் கிரந்தங்களிலே சொல்லியிருக்கிற படியினாலே நாமதேவருடைய பாதரேணு தன்மேல் விழவேண்டுமென்கிற அபேக்ஷையினாலே அப்படி நடந்தார் என்பதற்குச் சந்தேகமேயில்லை. அப்பால்பகவான் நாமதேவரை அழைத்துக்கொண்டு அர்தஊரிலேயிருக்கிற பிராமணர்கள் பார்திகாள் தீக்ஷதர்கள் சாஸ்திரிகள் முதலான சகலருக்கும் விருந்துசொல்லுகிறதற்குப் பட்டணப் பிரதக்ஷணம் வந்தார். அப்போது வைகுண்டவாசி பிராமணராய் வடிவெடுத்தாலும் அவருடைய சத்துவகுண உருவத்திற்கும் மற்றவர்கள் உருவத்திற்கு மொத்திருக்கவில்லை. ஆகையால் அவர் பக்தர்களுக்குள்ளே பிரேமளபக்தனைப்போலவும்- நதிகளுக்குள்ளே கங்கையைப்போலவும்- ரத்தினத்துக்குள்ளே வச்சிரத்தைப்போலவும்- நக்ஷத்திரத்துக்குள்ளே சந்திரனைப்போலவும்- வைஷ்ணவகூட்டத்தில் சேர்ந்து விளங்கி விருந்துசொல்லிக்கொண்டு வருகிறபோது பிராமணர்கள் இவர்முகத்தைப்பார்த்த உடனே ஒருவித ஆனந்தமும் அதிசயமுமடைந்து திரிவிததாபங்களும் சமனப்பட்டுச் சந்தோஷபரிதர்களாய்த் தேவரீர்எந்தவூர்தங்களுடைய நாமதேயமென்னவென்று கேட்க வதற்குச்சக்கரபாணி என்னுடைய பூர்வோத்திரம் நாமதேவருக்குத்தெரியும். என்னுடைய பிராணசகாவான இவர் தீர்த்தயாத்திரை பண்ணிவிட்டுவந்து பிராமணர்களுக்குச் சமாராதனை கோவிலிலே பண்ணுகிறார். அதற்கு நீங்கள் எல்லாரும் வரவேண்டும். என் பேர் அனந்தய்யன் சுருக்காய் வரவேண்டுமென்று உபசாரமாய்ச் சொல்லிவிட்டுக் கோவிலுக்கு வந்து ருக்குமணிதேவியைப் பார்த்துப் பிராமணர்களுக்கு விருந்துசொன்னதையும் அங்கே நடந்த அதிசயங்களையும் சொன்னார். அதை ருக்குமணிதேவி கேட்டுத் தேவாதி தேவா உம்மைப் பிரமாதி தேவர்கள்கூட அறிகிறது துர்லபம். அப்படியிருக்கக் கர்மாபிமானிகளாகிய இந்தப்பிராமணர்களுக்கு எவ்வாறு தெரியப்போகிறது. நாமதேவருடைய நிஜதெய்வமான நீர் இன்றைக்குப் பரவசமாயிருக்கிறீர் என்று சொன்னாள். இப்படி விசுவ ஜனனியான ருக்குமணி தேவி சொல்லிக்கொண்டிருக்கையில் அஷ்டமாசித்திகளும் காமதேனுவும் கல்பக விருக்ஷமும் கோவிலில் ஷட்ரசான்னத்தையும் பக்ஷணபோச்சியங்களையும் சந்தன புஷ்ப தாம்பூலங்களையும் ராசிராசியாய்க் குவித்து வைத்தன.

அதைக்கண்டு ருக்குமணி சத்தியபாமாஇருவரும் நாமதேவருக்கு அப்பியங்கனாதிகளைச் செய்வித்துப் புண்ணியாவாசனம் பண்ணி ஆலாத்தி யெடுத்தார்கள். பகவானை ஸ்ரீமந்நாராயணனும் பிராமண

வடிவாய் வந்து நாமதேவரை வஸ்திர பூஷணங்களினாலே அலங்க ரித்து உட்காரவைத்துவிட்டுச் சகலரும் கொண்டாடும்படியாக வந்திருக்கிற பிராமணர்கள் முதலான எல்லாருக்கும் ஆசனம் கொடுத்து உட்காரவைத்துப் பூசை பண்ணினார். அப்பொழுது தேவர்கள் எல்லாரும் பார்த்து மகா ஆச்சரியமாய் ஸ்ரீமந்நாராயணன் தங்களுக்கு அமிர்தமான அன்னத்தைக்கொடுத்தாரே யொழிய விந்தப்பிரேமாமிர்தம் கொடுக்கவில்லை என்று சொல்லி நானாவிதமாய்ப் பக்தர்களுடைய பிரபாவத்தை ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டிருக்கையில் ருக்குமணி நாதன் அந்தப்பிராமணர்களுடைய பாதங்களை அலம்பித்தன்னுடைய பீதாம்பரத்தினாலே துடைத்து அவர்கள் பாதத்தைத்தொட்டு நேத்திரத்திலே ஒற்றிக்கொண்டு அவர்களுடைய கழுத்துக்கு ஆரமும் நெற்றிக்குக் கஸ்தூரி திலதமும் போட்டு வஸ்திராபரணங்களும் கொடுத்துப் பந்தியாய் உட்காரவைத்துச் சுவர்னபாத்திரங்களை யெடுத்துக்கொண்டு நானாவித ஷட்ரசான்னங்களையும் பக்ஷிய போச்சியங்களையும் பரிமாறிச் சங்கல்பம் சொல்லி நாமதேவர் கையினாலே ஜலம் விடுவித்தார். அப்போது பிராமணர்கள் கர்த்தா போக்தா ஜனார்த்தன வென்று போஜனம் பண்ண ஆரம்பித்தார்கள். அப்போது வைகுண்டவாசர் பந்தி விசாரித்துக்கொண்டு கவளத்துக்கு கவளம் யாதுவேண்டும் சொல்லுங்களென்று கேட்டுப் பரிமாறப் பிராமணர்கள் திருப்தியாய்ச்சாப்பிட்டார்கள். உடனே ஜகன்மோகனர் ஜலம்கொடுத்துக் கை அலம்பினவுடனே அவர்களை ஆசனத்தில் உட்காருவித்துப் பதின்மூன்று விதம் சேர்த்த தாம்பூலம் கொடுத்துச் சந்தன புஷ்பங்கள் கொடுத்துக் கைகூப்பிக் கொண்டு உங்களுக்கு முன்பாக நான் பிரசாதம் வாங்கவேண்டுமென்று வெகுநாளாக அபேக்ஷையாயிருக்கிறபடியால் நான் பிரசாதம் வாங்கிக் கொள்ளுகிறபரியந்தம்எல்லாரும்சற்றேயிருந்துஅப்பால்தக்ஷிணைவாங்கிக் கொண்டு போகலாமென்று உபசாரத்துடனே சொல்லப் பிராமணர்கள் மந்திராக்ஷதையை ஆசீர்வாதம் பண்ணி இந்தப்படியே யெங்களைச் சம்ரக்ஷணைப் பண்ணிக்கொண்டு இருக்கக்கடவதென்று சொல்லிக்கொடுத்தார்கள். அதைஜகந்நிவாசன் பீதாம்பரத்திலே வாங்கிப்பிறகுகையிலே யெடுத்து நாமதேவர் சிரசிலே நீரும் அத்தியந்த பிரேமள பக்தியுடனே யிருக்கவேண்டுமென்று சொல்லிப்போட்டுவிட்டு அவரை அழைத்துக் கொண்டுவந்து நிவர்த்திதேவர் ஞானதேவர் சோபானதேவர் வீசோபா முதலானவர்களுடன் போஜனம் பண்ண உட்கார்ந்தார். அப்போது ருக்குமணி தேவி சுவர்ன பாத்திரத்திலே ஷட்ரசான்னமும் எடுத்துக்கொண்டு வந்து பரிமாறினாள். நாமதேவர் சாப்பிடும்போது திடஸித்தமாய்த் தியான ரூபமாயிருந்து விட்டார். அப்போது பகவான் எழுந்திருந்துபோய்க் கையைப்பிடித்துச் சாவதானம்பண்ணி அழைத்துக்கொண்டு வந்து தம்முடனே கூடஉட்காரவைத்துக்கொண்டு சரீ

ராத்தியந்தம் தடவிக்கொடுத்து சுவானந்தமென்கிற கவளத்தையும் அவர்கையிலே போடுகிறபோது நாமதேவர் தன் மயமாய் நிசபோத ரூபத்தி லைக்கியமானார். அப்போது பகவான் சாவதானம்பண்ணிச் சரீரத்தைத்தடவிக்கொடுத்து ஓ நாமதேவரே உமக்கும் எனக்கும் பேதமிலேசமும் கிடையாது. யானும் நீரும் துவைதம் என்கிற பேச்சையே விட்டுவிட்டு என்னோடு பேசும்-ஆகாசம்போல மேலுமில்லாமல்கீழுமில்லாமலெங்கும் பரிபூரணமாயிருக்கிற உம்முடைய தியானமெதுவோ அதுவேஎன்ரூபம் என்னுடையரூபத்துக்கும் உமதுதியானரூபத்திற்கும் பேதமில்லை. உம்முடையதியானரூபமாகவே பாரும். நிச்சயமாய் நான் அவ்வியக்தன் உம்மைக்காணுகிறதற்கு அத்தியந்தம் பிரேமளபக்தர்கள் உமது கிட்டவேயிருக்கிறார்கள். அவர்களுடனே பேசும் கேவலம் பிர்மாநந்த மூர்த்தி யெதுவோ அதுவே இந்த நிவர்த்திதேவரென்றறியும். சர்வ சுகமும் சாங்கமாய்க்கொடுக்கிறதெதுவோ அதுவே யிந்த ஞானதேவர்அவரைப்பார்த்துத் தத்துவமென்றறியும். பரமெதுவோ அதுவே யிந்தச் சோபானுதேவரென் றறியுமென்று சொல்லிவிட்டு ருக்குமணிவாஸன் கிருபா திருஷ்டியினாலே பார்க்கிறபோது நாமதேவர் பாதத்திலே விழுந்து ஜன்ம ஜன்மந்தோறும் இந்தப் பிரேமள பக்தியை யெனக்குக் கிருபை பண்ணவேண்டும் சுவாமி யென்றுசொல்லப் பகவான் அப்படியே கிருபை பண்ணிவிட்டு அவரை அணைத்துக்கொண்டு அவர் வாயிலே கொடுத்த கவளததில் கொஞ்சம் வாங்கித்தான் சாப்பிட்டார். அப்பொழுது சகலமான பக்தர்களும் ஆச்சரியப்பட்டுத் தேகபரவசமானார்கள். பிராமணர்கள் எல்லாரும் ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டு ஓ! ஓ! இன்றைக்கு நம்முடைய ஆசாரங்களெல்லாம் முழுகிப்போனாற் போலே காணப்படுகின்றன. இதோ பரிமாறிக்கொண்டிருக்கிற ஸ்திரீகள் என்ன ஜாதியோ தெரியவில்லை நமக்கு அன்னம் பரிமாறினவரைப்பார்த்தால் நாலுவர்னத்திலும் சேராமல் நாமதேவனுடைய தகப்பனைப்போலே காணப்படுகிறார். திரிவிதத்தினாலேயும் அவனிடத்தில் மெத்தவும் பிரியமாயிருக்கிறார். அவனைக்கொண்டு சங்கல்பத்திற்கு ஜலம்விட்டார். நாம் கொடுத்த அக்ஷதையை அவன் சிரசிலே போட்டார். ஆனதினாலே அவன் தகப்பனென்கிறதற்குச் சந்தேகமில்லை யென்று மனங்கலங்கி யோசனைபண்ணிக்கொண்டிருந்தார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இனிமேல் வருகிற அத்தியாயத்தில் பிராமணர்களுக்குப்பகவான் உத்தரவுகொடுக்கிறார். இந்த அத்தியாயம் படித்தவர்களும் சிரவணம் பண்ணினவர்களும் ஸ்ரீபாண்டுரங்கனுடைய கிருபா கடாக்ஷத்தினாலே சித்த சுத்தியடைந்து சத்குணசீலராய் இகத்திலே அபீஷ்டங்களை அனுபவித்துக்கொண்டிருந்து தேகாந்தியத்திலே பரமபதப்பிராப்தராவார்கள். ஸ்ரீ வாசுதேவ ஜகத்திரைய குரவேநம: ஸ்ரீ கிருஷ்ணாய பரம குரவே நம:.

## பதினொன்காவது அத்தியாயம்.

# ஸ்ரீமந்நாராயணன் பிராமணர்களிடத்தில் பிராயச்சித்தம் பெற்ற சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர ஜகத்திரைய குரவே நம: கேளுங்கள் புண்ணியவான்களே முன் அத்தியாயத்தில் பகவான் நிவர்த்திதேவர்- ஞானதேவர்- சோபானுதேவர்- கோராகும்பார்- சாவந்தன்- நரஹரி- முதலிய வைஷ்ணவ பக்தர்களைத் தன்னோடுகூட ஓரேபந்தியில் வைத்துக்கொண்டு சாப்பிட்டார் என்றால் அவர்கள்பெருமை ஒருவரால் அளவிடப்படும் தன்மையையுடையதோ- பூமியிலே எந்த விரையை விரைக்கிறோமோ அந்தப்பலனே மேலே வருகிறதுபோல- சாதுக்களுடைய கிருபையில் சிறிது நாமடைந்திருக்க படியினாலே- இந்தப் பக்தர்களுடைய சரித்திரமாகிய அமூலிய ரத்தினம் அகப்பட்டது. முன் அத்தியாயத்தில் சொல்லியபடி நாமதேவருடையஉச்சிஷ்டத்தைக்கேசவன் பிரீதியோடு சாப்பிட்டபடியால்- பிராமணர்கள் அந்தக்கோலத்தைப் பார்த்து பிர்மித்து- இவர் என்ன மகா அக்கிரமம்பண்ணுகிறார். இவர் ஆரோதெரியவில்லையே- இப்படிப்பட்டவருடைய வீட்டு அன்னம் சாப்பிட்டபடியால்நம்முடைய கர்மானுஷ்டானமெல்லாம் கெட்டுப்போயிற்றே-இனிப் பிராயச்சித்தம் அவசியம் பண்ணிக்கொள்ளவேண்டுமென்று ஒருவரோடு ஒருவர் சொல்லிக்கும்பல் கும்பலாய்ப் போகிறபோது- பகவான் எதிரே ஓடிப்போய் எல்லாரையும் போகவிடாமல் நிறுத்திச்சுவாமிகளே தக்ஷிணை வாங்கிக்கொண்டு போகலாமென்று சொல்லி அழைத்துக்கொண்டு வந்து உட்காரவைத்து- சுவர்னம் நவரத்தினம் துளசிதளம் முதலியவற்றையெல்லாம் ஒன்றாய்க்கலந்து எல்லாருக்கும்கொடுத்து- நாமதேவரை அவர்களுடைய பாதத்திலே நமஸ்காரம் செய்யும்படி செய்து- இவன்பேரில் நீங்கள் பூரணமாய்க் கிருபைவைக்க வேண்டுமென்று சொல்லிவிட்டு- உங்கள் முகத்தைப்பார்த்தால் உங்களுடைய மனதிலே ஏதோ கலக்கமிருக்கிறதாகத் தெரிகின்றது அதைச்சொல்லுங்களென்று கேட்டார். அப்பொழுது பிராமணர்கள் ஓ புருஷோத்தமரே நாமதேவர் சிப்பிய ஜாதி யென்று சகலமானபேருக்கும் தெரிந்திருக்கிறது. அப்படிப் பட்டவனைப் பிரத்தியக்ஷமாய்க் கூட வைத்துக்கொண்டு சாப்பிட்டதல்லாமல் அவனுடைய உச்சிஷ்டத்தையும் பிரியத்தோடு உண்டீர். ஆனதால் உம்மைப்பார்த்தால் வேஷதாரி போலும்

கண் கட்டு வித்தைக்காரன் போலும் காணுகிறது. உம்முடைய வர்ணாசிரமம் இன்னதென்று தெரியவில்லை. நிமிஷத்துக்கொருவிதமா யிருக்கிறீர். சீதள காலம் உஷ்ணகாலம் இரண்டும் ஆகாசத்துக்குச் சமமாயிருப்பதுபோல நிந்தனையும் வந்தனையும் உமக்குச் சரியாயிருக்கிறது நீர் பிராமண வேஷம்போட்டுக்கொண்டு வந்தபடியினாலே நாங்கள் உம்முடைய சமாராதனைக்கு வந்து சாப்பிட்டோம். பிராமண கருமத்துக்கு வேத வசனத்தின்படியே நடக்கவேண்டாமா உம்மைப் பார்த்தால் சர்வக்ஞராய்த் தோன்றுகிறதே. அப்படிச்செய்யாமல் நாமதேவனிடத்திலே பிரியமாயிப்படிச் செய்தீரே யென்று சொன்னார்கள். அதைக்கேட்டுப் பகவான் ஓ பிராமணர்களே நான் நாமதேவருடனே பந்தியிலிருந்ததும் அவன் உச்சிஷ்டத்தை யுண்டதும் என்பேரில் தோஷம் என்று சொல்லுகிறீர்களே- அவை தோஷமா- பரமாத்துமா எல்லாருக்கும் ஒருவன்தானே- அவனுக்கு உயர்ந்த ஜாதியென்றும் தாழ்ந்த ஜாதியென்றும்-நிந்தையென்றும் வந்தனமென்றும்-பாபமென்றும் புண்ணியமென்றும்-வித்தியாசமுண்டோ-நாமதேவன் அச்சுதன்- முத்தன்- நிரஞ்சனன்- சர்வவியாபகன்- சர்வாந்தரியாமியுமாயிருக்கிறான். அவன் தேகத்தைச் சிப்பியனென்று சொல்லுவீர்களானால் எந்த அவயவத்துக்குச் சிப்பியனென்று சொல்லுகிறீர்கள்- அதை எனக்குச்சொல்லுங்கள். ஆகாசத்திலே நிறம் தோற்றப்பட்டாலும் அதெப்படிப் பொய்யோ அதுபோலச் சாதி யென்பது பொய்தான்- சிப்பியனென்று ஆத்துமாவுக்குச் சொல்லுவீர்களானால் ஆத்துமாவுக்கு ரூபமேயில்லாமையால் சிப்பியனென்கிற ஜாதி தோஷம் அதற்கில்லை. தேகத்துக்குத்தான் சொல்லுவோமென்றால் தேகம் பஞ்சபூதங்களினுடைய காரியமாகையால் சிப்பியனென்று அதற்கும் சொல்லக்கூடாதே. வேதவிற்பன்னர்களும் சகல சாஸ்திர நிபுணர்களுமான உங்களுக்கு வேத சாஸ்திரத்திற்சொல்லிய கருமம் பிரதானமென்கிற பிரமைபோகவே யில்லை. அது நிற்க முன்னமே நாமதேவன் கையினாலே ஜலம் விடுவித்தபோது ஏன் விசாரியாமல் சும்மா யிருந்துவிட்டீர்கள். பின்னும் நீங்கள் கொடுத்த மந்திராக்ஷதையை அவன் சிரசிலே போட்டதையும் ஏன் சும்மா பார்த்துக்கொண்டிருந்தீர்கள். நான் நிராலம்பமாயிருக்க என்னை சாலம்பனம் பண்ணினீர்கள். நான் அகர்த்தாவாயிருக்க என்னைக் கர்த்தாவாக்கினீர்கள். என்னுடைய வசனம்கேட்டும் இன்னம்நீங்கள் என்னுடைய குறியை அறியவில்லை. ஞானவான்களுக்குக் கருமானுஷ்டானமுண்டா? நான் நாமதேவனுடைய உச்சிஷ்டத்தைச் சாப்பிட்டதற்குப் பிராயச்சித்தமுண்டாயிருந்தால் சொல்லுங்கள். மூன்று லோகங்களிலேயும் எக்கியம்- யாகம்- யோகம்- தீர்த்தம்- தானம்- தபசு-இவைகளைப்பார்க்கிலும் தங்களுடைய பாததீர்த்தமும் அரிதாசர்களுடைய பாததூளி

றேன். நான் இன்னமும் சத்தியமாய் ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள் தாயானவள் குழந்தையை யெந்த ஆபத்திலேயும் மறக்காதது போலும் கிருபணன் தனத்தை எந்தச்சங்கடத்திலும் விடாதிருப்பது போலும் நானும் என்னுடைய பக்தர்களையே நினைத்துக்கொண்டு அவர்களிடத்திலேயே வாசம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். என்னுடைய பக்தர்களும் என்னிடத்திலே பேயர்களைப் போலே அகண்டமாய் அநுராகத்துடனே நிர்ப்பயமாய்த் தர்மார்த்த காமிய மோக்ஷங்களை விட்டுச் சதுர்விதமுக்தியும் த்ரணமாயெண்ணி யென்னுடைய நாமத்தை ஆனந்ததத்தோடே பஜனைபண்ணிக்கொண்டு வைராக்கிய சீலராய் என்னை விட்டு நீங்காதிருக்கிறார்கள். அப்படிக்கொத்த பக்தர்களை யாராய்ந்து பார்க்குமிடத்தில் சிப்பிய சாதியி லவதரித்த நாமதேவனே யெல்லாரிலும் சிறந்தவன், என் உள்ளத்துக்குப் பிரியமானவன். ஆகையால் அவனுடைய உச்சிஷ்டம் சாப்பிட்டேன். அது பிர்மானந்த ரசத்தைப் பார்க்கிலும் அதிகானந்தமாயிருக்கிறது. இந்தப்பண்டரிபுர க்ஷேத்திரத்திற்கு உவமையாக ஒரு க்ஷேத்திரமும் கிடையாது. சீவன் முக்தர்களும் ஞானிகளும் யோகிகளுமாகிய பக்தர்களுக்குள்ளே சிறந்த புண்டலீகமுனி பரத்துவத்தையடைந்த ஸ்தலமிது. இந்த க்ஷேத்திரத்தில் பீமாநதி தெக்ஷண வாகினியாகச்செல்லுகின்றது- அதன் ஜலம் அமிர்த சஞ்சீவி யென்று சொல்லலாம். அன்றியும்சுவானந்த ஜீவனமாய் விளங்குகிற இந்தச்சந்திரபாகைத் தீர்த்தத்தைத் தூரத்திலிருந்து கண்ணாலே பார்த்தாலும் உடனே கெர்ப்பவாசம் நீங்கிவிடும். சந்திரபாகையைப பார்த்து வெட்கப்பட்டுத்தான் மந்தாகினி நதியானது மெதுவாகச்செல்லுகின்றது. வேகவதியென்கிற நதியும் வேகமாய்ப் பாதாளத்திலே போய் ஒளித்துக்கொண்டாள். இப்படிப்பட்ட மகா க்ஷேத்திரத்திலே என்னுடையதாசர்கள்அகோராத்திரியும் என்னுடைய கீர்த்தனங்களைப் பண்ணிக்கொண்டு நிற்பார்களா யிருக்கிறார்கள். நானும் அவர்களோடு கூடவே யிருந்து அவர்களைப் பூசித்துக்கொண்டு அவர்களுடைய உச்சிட்ட சேஷம் அகப்பட்டால் கிடையாதது கிடைத்ததுபோலே யெண்ணிக்கொண்டு சாப்பிடுவேன். அதினாலே என்னுடைய தேகம் ஆரோக்கியமாய்ச் சுகமாய் இத்தனைபெரிய தனத்துக்கும் அதிஷ்டானமாயிருக்கிறதென்று சொல்லப்- பிராமணர்கள் ஓ மகானுபாவா நீர் அனந்த கல்யாண குண நிதியென்று இப்பொழுது எங்களுக்கு நிச்சயமாய்த் தெரிய வந்தது. ஆனாலும் நீர் இப்பொழுதுகொண்ட வடிவத்திற்குத் தகுதியாக வேதத்திலே சொல்லியிருக்கிற வருணாச்சிரம தர்மங்களை ஆசரிக்க வேண்டும். பிராமணர்கள் தங்களுக்குச் சுயதர்மமாகிய சத்தியம்-சமம்-பூத தயவு- பச்சாதாபம் - கோஸ்வரூப அனுசந்தானம்- அகண்டாகார விர்த்தி- ஸ்நான சந்தியாவந்தனம்- வேதார்ச்சனை - அக்கினிஹோத்திராதி ஹோமங்கள்- போசனம்- அத்தியயனம்- அதிதி அப்பியாகத

பூசைகள் முதலிய கர்மங்களை வழுவுதலில்லாமல் பண்ணினால்தான் அதோக்ஷயன் சந்தோஷமடைவானாகையால் இந்தச்சுயதர்மத்தைவிட லாகாது. விட்டால் பிராமணத்துவத்துக்கு அபாயம் வரும். இந்தச்சந்திர பாகைக்குப் போய் விதிபூர்வமாய் ஸ்நானம்பண்ணிப புண்ணியாவாசனம் பண்ணிப்பஞ்சகவ்வியம் வாங்கிக்கொண்டுஇந்தப்பண்டரி புரத்தைப் பிரதக்ஷணம் பண்ணினால் குலகோடிபவித்திரமாகும் என்று சொல்லப்பட்டிருக்கிறபடியால் நீரும்நாமதேவருடையஉச்சிஷ்டத்தைச் சாப்பிட்ட தோஷம் போகிறதற்கு இந்தப்படி பண்ணவேண்டுமென்று சொன்னார்கள்.

அவ்வசனத்தைக்கேட்டுப் பகவானானவர்சுவாமிகளே தங்களுடைய ஆக்கினைப்படிக்கு அப்படியே செய்கிறேன். ஆனால் இந்த நாமதேவர் மஹா பிரேமள பக்தியுள்ளவர் இவரைப்போல பக்தியுள்ளவர் மூன்று லோகத்திலேயும் கிடையாது. நீங்கள் சதாசாரமுள்ள பிர்மவித்துக்கள் ஆகையால் இந்தநாமதேவரைக்காப்பாற்றிக்கொள்ளுங்கள். நான் அஜன்- அவ்வியன்- அப்பிரமேயன்- அதோக்ஷயன்- ஆனாலும் உங்களுடைய சத்தியவாக்கு என்கிற நதியிலே ஸ்நானம்பண்ணி உங்களிடத்திலே பூரண விசுவாசமாயிருக்கிறேன். எனக்குப் பரமதெய்வமான நீங்கள் என்னைத்தீர்த்தஸ்நானம் பண்ணச்சொல்லுகிறீர்களே அந்த ஸ்நான விபரத்தை விதி யுக்தமாய் உங்களுக்குச் சொல்லுகிறேன். கேளுங்கள் புராணமும் ஹரி கீர்த்தனமும் பிரியத்துடனே கேட்டுச் சிரவணம்பண்ணி மனனம் பண்ணவேணும். இதுவே ஒருஉத்தம ஸ்நானமென்று சொல்லியிருக்கிறது. இதனால் அனுபவமும் நிஜ தியானத்திலேயே சாக்ஷாத்காரமும்ஆகும் இதைத்தவிர வேறொருஸ்நானமும் சிறந்ததாகச்சொல்லவில்லை. அதற்குமேல்அர்த்தாபேதமும்-சுகாபேதமும்-இரண்டாம் ஸ்நானமென்று சொல்லப்படும். சமஸ்த இந்திரியங்களையும் சுவாதீனப் படுத்திக்கொள்ளுவது மூன்றாவது ஸ்நானம். சர்வ பூதங்களிடத்திலேயும் தயவாயிருக்கிறது நாலாவது ஸ்நானம். இவைகளை அப்பியாசம் பண்ணப் பதினாயிரம்பேர் பிரயாசப்பட்டால் அதிலே ஒருவன் ரூடியாவான். ஐந்தாவது ஸ்நானமெதுவென்றால் கங்காநதிமுதலிய தீர்த்தங்களிலே ஸ்நானம்பண்ணுகிறது. அது காமக்குரோதலோபமோகமத மாச்சரியாதிகளைப் போக்கடிக்கமாட்டாதாதலால் விவேகத்தினாலே வைராக்கியமாய்ச் சித்தத்தைச் சுத்திபண்ணிக் கொண்டு சாது சங்கமம் பண்ணவேண்டும். இவையன்றி அனந்தம்கோடி ஜன்மாந்திரத்திலே பண்ணினதோஷம் போகிறதற்கு- ராமா-கிருஷ்ணா- வாசுதேவா- கோவிந்தா- முகுந்தாவென்கிற நாமங்களை அந்தரங்க பக்தியோடு செபித்தலே முக்கியமான பிராயச்சித்தம். இந்த நாமங்கள் சகல தோஷங்களையும் நாசம்பண்ணும். உங்களுடைய பாவ மெப்படியிருக்குமோ அப்

படியே உங்களுக்குப் பலனு மிருக்குமென்று சொல்லிவிட்டுச் சுவாமி களே உங்களுடைய ஆக்கினைப்படிக்குச் சந்திரபாகை தீர்த்தத்திற்குஸ் நானத்துக்கு வருகிறேனென்றுசொல்லி நாமதேவனையும் கையிலே பிடித்துக்கொண்டு பக்த கூட்டத்துடனே அந்தத் தீர்த்தத்தண்டை வந்து அங்கே புண்டலீகருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம்பண்ணி நாம கர்ச்சனை பண்ணிக்கொண்டு விதியுக்தமாய் ஸ்நானம்பண்ணினவுடனே பிராமணர்கள் யோகபோகேஸ்வர கெம்பீயராயும் வேத வேதாந்த வேதியராயும் பிர்மாதி தேவர்கள் தியானத்துக்கு துர்லபராயும் நிஷ்க ளங்கராயும் இருக்கப்பட்ட ஆத்துமா ராமனுக்குப் பிராயச்சித்தம் கொடுத்தார்கள், நிஜ பக்தர்களுடைய பூஷணனான வைகுண்டவாசி பி ராமணர்களுடையஸ்ரீபாததீர்த்தம்வாங்கிக்கொண்டு தக்ஷிணைகொடுத்து அவர்களை அனுப்பிவிட்டு- அனேக பக்த கூட்டத்துடனே கோவிலுக் கு வந்தார். அப்பொழுது ருக்குமணி தேவியும் சத்தியபாமையும் சட் ரச-பதார்த்தங்களும் அன்னமும் சமையல் செய்து வைத்துக்கொண்டு தலையுள்ள பொன்னிறமான வாழையிலைகளைப்போட்டு அவற்றில் முன் னதாகப் படைக்கவேண்டியவைகளை முறையாகப் படைத்துவிட்டுச் ச லம் கொண்டு வந்து கொடுக்க வைகுண்டவாசரும் பக்தர்களும் கால் கை சுத்திசெய்துகொண்டு பந்தியாய் உட்கார்ந்து அவ்விருவரும் பின் னும் வேண்டியவைகளைப் பரிமாறிக்கொண்டு நிற்க ஆனந்தத்தோடு சாப்பிடுகையில் தன் உச்சிஷ்டத்தை அவர்களுக்குக்கொடுத்தும் அவர் கள் உச்சிஷ்டத்தைத் தான் வாங்கிக்கொண்டு மிப்படியாகச் சாப்பிட்டு ஆனபிறகு எல்லாரும் உத்தரவுவாங்கிக்கொண்டு அவரவர்கள் ஜாகைக் குப்போய்விட்டார்கள்.

அப்போது தேவலோகத்திலே யிருந்து நாரத மகாமுனி பிர்ம வீணையைக் கையிலே எடுத்துக்கானம் பண்ணிக்கொண்டு பிர்மாநந்த பிரேமள பக்தியோடு வந்து பக்தவச்சலனைச்சேவிக்க- ஸ்ரீயப்பதியான வைகுண்டவாசர் அவரை யெடுத்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு- ஓ நாரதரே உம்முடைய கானத்தைக்கேட்க மிகவும் சந்தோஷமாயிருக் கிறதென்றுசொல்ல-உடனே அவர்மஹாஆனந்தத்துடனேஜயஜய புண் டலீக வரதா- புருஷோத்தமா- ஆபத்பாந்தவா-ருக்குமணி காந்தா-கரு ணாசாகரா- பக்த பூஷணு- பக்தவச்சலா- ஜய ஜய கமலலோசனு- கம னீயவிக்கிரகா- காருண்ணிய மூர்த்தே- கல்யாண குணநிதே- கம்சாந் தகா- கைடபாரே-கவுஸ்துவதரா- பாண்டவ சாரதே- ஜய ஜய அனந் தா- அச்சுதா-அவிநாசா- அப்பிரமேயா- அகிலலோகநாதா- அகணித கருணாசாகரா- அகடிதகடனு வென்று ஸ்தோத்திரம் பண்ணினர். பகவான் அதைக்கேட்டுச் சந்தோஷப்பட்டுத் தம்முடைய கழுத்திலே இருக்கிற துளசிமாலையை எடுத்து அவர்கழுத்திலே போட்டார். அப்

போது நாரத பகவான் உத்தரவு வாங்கிக்கொண்டு தேவலோகத்துக்ப்போய்விட்டார். அப்படியிருக்கையில் ருக்குமணிதேவி யிடத்திலே ராதாதேவி வந்து என்ன ஆச்சரியம் நம்முடைய சுவாமிக்குப் பிராமணர்கள் பிராயச்சித்தம் கொடுத்தார்களெனக் கேள்விப்பட்டேன்- சுவாமிஅப்படி என்னதப்பிதம் பண்ணினூர். அவ்வியக்த மூர்த்தி கர்மத்திலே யிப்படி அகப்படுவாரா இது சூரியன் இருளுக்குள்ளே மூடப்பட்டது போலவும்- சமுத்திரம் குட்டையிலே முழுகினதுபோலவும்- சந்திரனுக்கு உஷ்ண உபாதி உண்டானது போலவும்- மகா ஆச்சரியமாயிருக்கிறதே என்று சொல்ல- ருக்குமணிதேவி ராதாதேவியைப்பார்த்து கேளும் சகியே நம்முடைய பிராணநாதன் நாமதேவர் நிமித்தமாகத் தன்னுடைய பெரிய தனத்தையும் லச்சையையும் விட்டு விட்டு அத்தியந்த பிரேமையாகி அவன் கைவசமானூர். இன்னும் இதினுடைய ரகசியத்தை உனக்குச்சொல்லுகிறேன் கேள். பிள்ளைகள் கூன் குருடு செவிடு ஊமையர்களாயிருந்தாலும் பெற்றவள் அவர்களுடைய வார்த்தைகளைக் கேட்டு பிரியமாய் அவர்கள் சொன்னபடியெல்லாம் கூத்தாடுகிறது போல 'விவரும் அநாதிபஞ்சபூதங்களின் சிருஷ்டிக்குமுன்னே உண்டான தன் குழந்தையான நாமதேவனிடத்திலே அத்தியந்தம் பிரீதியாயிருக்கிறார். அந்தப்பிரீதி அனந்தங்கோடி கல்பாந்திரங்களானாலும் மற்றொன்றால் மூடுபடாதென்று சொல்லவதைக் கேட்டு- ராதாதேவி சமாதானத்துடனேதன் ஜாகைக்குப்போய்விட்டாள். அப்போது நாரதமுனி சத்தியபாமாவீட்டுக்குவந்தார். வந்தவருக்கு அந்தச்சத்தியபாமை அர்க்கியபாத்தியாதிகளும் கொடுத்து ஆசனமும் போட்டு உட்காரவைத்து- ஓ நாரதரே என் பிராணபதியான வைகுண்டநாதன் பக்தர்களோடே கூடிக்கொண்டு அவர்கள் கூத்தாடுகிறபடியெல்லாம் தானும் கூத்தாடுகிறார். நாமதேவனிடத்திலே முன் ஜன்மாந்திரத்தில் என்னகடன் பட்டாரோ அவனுடைய பிடிவாதங்களையெல்லாம் நிறைவேற்றுகிறார். புண்டலீகன் பகவானைச் செங்கல்லின்பேரிலே நிற்கவைத்தான். அந்தக்கல்லின்பேரிலே இருபத்தெட்டுச் சதுர்யுகமாய் ஆயாசம் இளைப்புசலிப்பின்றி நின்றுகொண்டிருக்கிறார். பலிச்சக்கரவர்த்தியினுடைய துவாரங்களிலே அத்தியாபிகாத்துக்கொண்டிருக்கிறார். பாண்டவர்களுக்குச் சர்வவிதத்திலேயும் ஊழியமுதலியகாரியங்களைச்செய்து ரக்ஷித்தார். அனேகங்கோடிபக்தர்கள் மடியிலேகைபோட்டுத் தெருவிலே இழுத்து நானாவிதநிஷ்டூரவார்த்தைகளைச்சொல்லுகிறார்கள். சிலபக்தர்கள் ஆனந்தமாயும் பிரியமாயும் அவரைக் கைவசமாக்கிக்கொள்ளுகிறார்கள். எப்படியிருந்தாலும் ஜகன்னிவாசனானவன் பக்தர்களிடத்திலே அத்தியந்தம் பிரியமாய் அவர்களுடைய மனதின்படியே நடக்கிறார். தன்னுடைய மேன்மையும்- தான் அகிலலோகாதாராயும்- பிரபுவாயும்- சிருஷ்டிஸ்திதிசம்மாரமாகிய முத்

தொழிலுக்கு உடையவராயும்-பிரகிருதிவிசிஷ்டராயும்-சர்வகியந்தாவா யும்-விராட்டுஇரண்ணியகர்ப்ப அவ்வியாகிருதசரீராந்தரியாமியாகியும்-இருக்கிற நிர்க்குணமூர்த்தி பிரகிருதிக்குட்பட்ட ஜீவராசிகளில் ஒன்ருய் அனுதாராயும் தீனராயும்எனிப்படிக் கூத்தாடுகிருரென்று சொன்ன தற்கு - நாரத மஹாமுனியானவர் கேளும் தாயேமஹாதத்துவாதி ஆங் காரத்துக்கு வேறுபட்டு இருக்கிற நிர்க்குணரூபன் - நிரஞ்சனன்-நிஷ்காரண பரமபதவாசி - தன்னைப்பஜிக்கிறவர்களுடைய சம்ரக்ஷணை யே அத்தியந்த பிரேமையாகி க்ஷீராப்திசயனுதி அவதாரங்களை யெடுக் கக்காரணமாயிற்று. பின்னும்இந்தச் சராசரப்பிராணிகளுக்கு உபயோ கமாகப் பிருதிவியும் ஆகாசமும் சமுத்திரமும் தாமேயானூர், தேவர்க ளானவரும் அவரே. பின்னும்அந்தேவர்கள் மரிக்காமலிருக்க அவரே அமிர்தத்தையும் கொடுத்தார். பிராணிகளைச் சிருஷ்டித்து அவைகளுக் கு அந்தர்யாமியாயிருந்து அவைகள் சாப்பிடுகிறபதார்த்தங்களைச் சீரணம் பண்ணுவித்து ராத்திரியிலே சுகமடையப்பண்ணுகிருர். இப்படிச் சகல பிரபஞ்சமும் தானேயானூர். பக்தர்களுடைய சம்ரக்ஷணூர்த்தம் சகுணரூபமாய் லீலாமானுஷ விக்கிரகராய்க் கிருபாசமுத்திரராய்த் தீ ன தயாளுவாய் அவர்களிடத்திலே அத்தியந்தம் பிரியமாயிருக்கிரு ரென்றறி. அதிலேயும் நாமதேவனுக்காகவே பூரணமாய்த் தோன்றி யிருக்கிருர் என்றுசொல்லிவிட்டுத தம்மிடம் போய்விட்டார். அப்போ து பகவான் அம்சதூளிகாதல்பத்திலே சயனித்துக்கொண்டிருக்க ருக்கு மணிதேவி பாதசேவைபண்ணிக்கொண்டிருக்கும்போது எழுந்திருந்து பகவானைச்சேவித்து ஒ சுவாமி என்பிராணனுதனே பக்தவச்சலனே வைகுண்டநாதனே தேவரீருக்கு வைகுண்டத்திலும் யோகிகளிடத் திலும் சனகாதிமுதலான ரிஷிகளிடத்திலும் பிர்மாமுதலான தே வர்களிடத்திலும் பிரியமில்லையென்று எனக்கு நன்ருய்த் தெரியும். அப்படியானுல் எல்லாவற்றிலும் பிரியமானவஸ்து எது அதைஎனக்குத் தெரியச்சொல்ல வேண்டுமென்று கேட்க - ருக்குமணிதேவியைப் பார்த்து பகவான் ஓகாதலி தேவர்கள் ரிஷிகள் பக்தஜனங்களாகிய ச மஸ்தபிராணிகளும் எனக்குப்பிரியந்தான் - ஆயினும் என்னையறிந்த பக்தஜனங்களிடத்திலேதா னெனக்கு மிகவும் பிரியம். அவர்களுள் அத்தியந்த பிரியமுள்ளவன் நாமதேவன் அவன் என்பிராணனுக்குப் பிராணன் என்பாக்கிய பூஷணன் என்றுசொல்ல-இந்தவார்த்தையை ருக்குமணிதேவி கேட்டு ஆச்சரியமாய் ஆனந்தத்துடனே பக்தவச்சல னை நானுவிதமாகஸ்தோத்திரம் பண்ணினுள். இந்த அத்தியாயம் சம் பூரணம். சாதுக்களே கேளுங்கள் பாகவதத்திலே யேகாதஸ ஸ்கந்தத் திலே உத்தவருக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் பக்தியை விசேஷமாய்ச் சொன்னதுபோல இந்த அத்தியாயத்திலே பக்தர்களுடைய பெருமை யை விசேஷமாய்ச் சொன்னூர். ஞானேஸ்வரரும் தான் செய்த கிரந்

தத்திலப்படியே சொல்லியிருக்கிறார். இதைச் சிரத்தையோடு சிரவணம்பண்ணினவர்கள் ஸ்ரீமந்நாராயணனுக்கு அத்தியந்தப்பிரியமுள்ள தாசராகிச் சாயுச்சிய பதவியடைவார்கள். ஸ்ரீ பக்தவத்சலாயநம: பஞ்சாயுததாரிணேநம: ஸ்ரீ பாண்டுரங்கனேநம:.

## பதினைந்தாவது அத்தியாயம்.

# பகவான்பிராமணர்களுக்கும் பக்தர்களுக்கும் தன் நிஜரூபதரிசனம் கொடுத்த சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிர்மணேநம: கேளுங்கள் சாதுக்களே இந்தப் பக்தவிஜயமென்கிற கிரந்தம் ஜனனமரணத்தில் வருந்துகின்ற மானிடர் நிமித்தம் பூலோகத்திலே பிரகடமாகி யிருக்கிறதானது சாதகபக்ஷிநிமித்தம் மேகவருஷம் உண்டாக்கப்பட்டிருக்கிறது போலும்- சகோரபக்ஷிநிமித்தம் சந்திரோதயம் உண்டாகியிருப்பது போலும் - ஜலசரநிமித்தம் சமுத்திரம் உண்டாக்கப்பட்டிருப்பது போலும் - சர்வ ஜீவராசிகளும் சுகமடைகிற நிமித்தம் சூரியனுதிப்பது போலும் இருக்கின்றது. அப்படிப்பட்ட இந்தநூலின் முன் அத்தியாயத்தில் பகவான் பக்தர்களிடத்திலேதான் எனக்கத்தியந்தப் பிரீதியென்று ருக்குமணி தேவியோடு சொல்லி அன்று ராத்திரி முழுதும் இருவரும் ஆனந்தமாய்க் காலம் கழித்துக்கொண்டிருந்தார்கள். சூரியன் உதயமான உடனே பக்தகோடிகள் வந்து பகவானைச்சேவித்து ஆனந்தபாஷ்பத்துடனே ஸ்தோத்திரம்பண்ணினார்கள். அந்தச்சமயத்திலே ருக்குமணிதேவியைப்பார்த்து பகவான் இன்றைக்குப் பிராமணர்களைச் சாப்பாட்டுக்கு அழைக்கவேண்டும் அவர்களுடைய தரிசனத்தினாலே சகலபாபங்களும் நசித்துப்போமென்று சொல்ல ருக்குமணிதேவி கேட்டுச் சகலசித்தியும் தேவரீரிடத்திலே காத்துக்கொண்டிருக்கையில் இதற்குச் செய்யவேண்டிய யோசனை யென்னஇருக்கிறது அப்படியே செய்யலாமென்று சொன்

ளுள். அப்பொழுது பகவான் சந்தோஷமாய் நாமதேவரைப்பார்த்து ஓ நாமதேவா உனக்கும் எனக்கும் ஜென்ம ஜன்மம் ருணுனுபந்தமான படியினுலேயும் நீ ஜன்மாந்திரங்களில் பண்ணின சுகிர்த பரிபாகத்தினுலே நான் உனக்குப் பிராப்தமா யிருக்கிறபடியினுலேயும் உன் நிமித்தம் என்னுடைய ரூபத்தை இந்த பிராமணர்களுக்குக் காண்பிக்கிறே னென்று சொல்லி - நாமதேவர் கையைப் பிடித்துக்கொண்டு அனேகம் பக்தர்கள்கூடவர விருந்துசொல்லும்நிமித்தம் புறப்பட்டுக் குண்டலதீர்த்தக் கரையிலே கூடிக்கொண்டிருக்கிற பிராமணர்களைக் கண்டுசேவித்து ஓ சுவாமிகளே நான் பிராமணபோஜனம் செய்விக்க எத்தனஞ்செய்திருக்கிறபடியால் நீங்களெல்லாம் சந்தியாவந்தனங்களைச் சுறுக்காய் முடித்துக்கொண்டு போஜனத்துக்கு வரவேண்டுமென்று சொல்லப் பிராமணர்களனைவரும் நல்லது நாங்கள் தேவரீரை நம்பியே இவ்விடத்திலே காத்துக்கொண்டிருக்கிறேமானதால் அப்படியேவருகிறேமென்று சொன்னுர்கள். அந்த வார்த்தையைப் பகவான்கேட்டுச் சந்தோஷமாய்க் கோவிலுக்குவந்து ருக்குமணிதேவியைப் பார்த்து இன்றைக்கு நம்முடையதினமேசுதினம். பிராமணர்களனைவரும் நம்முடைய சாப்பாட்டுக்கு வருகிறுர்களென்றுசொல்ல-ருக்குமணிதேவிகேட்டு அந்தப் பிராமணர்கள் பூர்வதத்திலே பண்ணின அளவற்ற புண்ணியபலன் தேவரீருடைய தரிசனமும் தேவரீராலே விருந்துக்கு அழைக்கப்பட்டதும் தேவரீர் கையினுலே பரிமாறச் சாப்பிடப் போகிறதும் ஆதலால் அவர்கள் பாக்கியமேபாக்கியமென்றுசொன்னுள். அப்படியிருக்கையில் பிராமணர்களும் தங்கள் நித்திய கருமங்களை முடித்துக்கொண்டுவந்தார்கள். அவர்களுக்கு ஆசனமும் அர்க்கியபாத்திய ஆசமன தூபதீபங்களும்கொடுத்து உட்காரவைத்துத் தலையுள்ளதங்கத் தகடுபோன்ற இலைகளைப்போட்டு ஷட்ரசபதார்த்தங்களைப் பரிமாறி அன்னத்தையும் படைத்தார்கள். அப்போது பிராமணர்கள் ஆபோசனம் வாங்கிக்கொண்டு ஹரிஸ்மரணை பண்ணிக் கவளத்துக் கவளம் கோவிந்தநாமத்தைச் சொல்லிக்கொண்டு சாப்பிட ஆரம்பித்தார்கள். அவர்கள் பரிபூரணமாய்ச் சாப்பிட்டுக் கை அலம்பிக்கொண்டபிற்பாடு சந்தன புஷ்ப தாம்பூலாதிகளை அவர்களுக்குக் கொடுத்து உபசாரம் சொல்லிஉட்காரவைத்துவிட்டு-நாமதேவர்-நிவர்த்திதேவர்-ஞானதேவர் சோபானுதேவர் - சாவந்தர்-விசோபாகேசன் -நரஹரி-சோகாமேளன்-கோராகும்பார் முதலிய அனேகமாயிரம் பக்தர்களைப் பந்தியாகவைத்துக்கொண்டு அத்தியந்தபிரியத்தோடு தேவாதி தேவன் சாப்பிட உட்கார்ந்தார். அப்போது சத்தியபாமா-ருக்குமணி-ராதாதேவி இவர்கள் மூவரும் பரிமாறிக்கொண்டு நின்றுர்கள். சட்குண ஐசுவரிய சம்பன்னரான பகவான் பக்தர்களோடு சாப்பிட்டுக்கொண்டிருக்கையில்-ஆகாசத்திலே பிர்மாதி தேவர்கள் விமானுரூடர்களாய்வந்து புஷ்ப வருஷங்

களை வருஷித்து இந்தக்காட்சி மகா அற்புதமாயிருக்கிறது. இவர்கள் பாக்கியமே பாக்கியம். வேதவேதாந்தபரம ரகசியமானவஸ்து இப்படிப் பிரகடமாயிற்றேயென்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது பீதாம்பரதாரியான பகவான் எழுந்திருந்து எல்லாருடைய உச்சிஷ்டத்தையும் தன்பீதாம்பரத்தில் வாரிக்கொண்டு எல்லாருக்கும் கொடுத்துத்தானும் சாப்பிட்டார்.

அப்போது இந்தப் பிராமணர்கள்ஆச்சரியப்பட்டுஒருவரோடொருவர் பார்த்து இதென்னபுதுமையாயிருக்கிறது-இவரைப் பிராமணனென்றுமலேத்துப் பிராயச்சித்தம்கொடுத்தோம்.இவர்கிரியைகளுக்கும்கர்மத்துக்கும் அனுகாமலிருக்கிறார். சாதிகுலமென்கிற வர்ணாசிரமதருமம் இவரிடத்திலில்லை, இவ்விடத்திலே சங்கல்ப விகல்பமென்கிறதேகிடையாது. இன்னும் பூமியானது மலைவிருக்ஷமுதலிய அசரங்களையும் மனிதர்கள் முதலிய சரங்களையும் சுமப்பதுபோலவும் சூரியன் ஒளிகொடுத்து அவற்றையெல்லாம் வளர்ப்பதுபோலவும் ஸ்ரீமந்நாராயணன் அந்தரியாமியாயிருந்து அவற்றையெல்லாம் ரட்சிப்பதுபோலவும் இவருக்குத் தன்னவன் பிறனென்ற வித்தியாசமில்லாதபடியால் இவர் பாண்டுரங்களுகவேண்டும். மனோவாக்குக்கு எட்டாதவனுகிய இவன் காமதேவனுடைய பாக்கியவசத்தினுலே அவனிடத்திலேஅத்தியந்தமோகமாயிருக்கிறனென்று சொல்லிக்கொண்டுஅவர்களிருந்தவிடத்திலேயேதிடசித்தமாய்த்தியானம் பண்ணிக்கொண்டிருக்கையில்-ரிஷிகேசன்தம்முடைய சுயமான திவ்வியரூபத்தைப் பிராமணர்களுக்கும் பக்தர்களுக்கும் தெரிசிப்பித்தார். அந்தரூபத்தை இரண்டாயிரம் நாவுள்ள ஆதிசேஷனுலேயும் சதுர்முகப்பிர்மாவாலேயும் சரஸ்வதியாலேயும் வர்ணிக்கமுடியாது. ஆதலால் அப்படிக்கொத்தரூபத்தை மனிதர்கள் எவ்வாறுமுற்றும் சொல்லக்கூடும். கோடிசந்திராதித்தர்கள் ஏககாலத்தில் உதயமானுல் என்னதேஜசோ அந்தத்தேஜசுக்கும் கோடிபங்குஅதிக தேஜசு உடையவராய்த் திவ்விய ரத்தினகிரீடதாரியாய் - ஸ்ரீவச்சகவுஸ்துவதரராய்-மகரகுண்டலதாரியாய்க்-கோடிசந்திரபிரகாசமுக கமலத்தையுடையவராய்-முத்துவரிசைபோன்ற தந்தபங்திகளை உடையவராய்-வைசயந்திவனமாலிதாரியாய்- அநேகதிவ்வியாபரணதாரியாய்-நீலமேகசியாமளவர்ணராய்ச்-செந்தாமரைபோன்றநேத்திரத்தையுடையவராய்ப்- பீதாம்பரதாரியாய்ச்-சங்குசக்கரகதாகட்கசாரங்கதரராய்த்- திரிலோகபாவனகங்கோத்பனபாதத்தையுடையவராய்ப்- பட்சிபுஜாரூடராய்க்-கருணாசிந்துவாய்-அவாங்மானஸ கோசரராய்-லீலாமானுஷ விக்கிரகராய்-லட்சுமீசமேதராய்-அனந்தகருடவிசுவக்சேன சனகசனந்தனாதி நித்திய சூரிகளோடு கூடித்தரிசிப்பித்தார். இந்தஆச்சரியமான தரிசனத்தையடைந்த பக்தகோடிகளும் பிராமணர்களும் சமுத்திரகோஷம்போல ஜய

ஜயாகாரமாய் ஆனந்தபாஷ்ப பூரிதர்களாய் விதேகஸ்திதியாய் நிவாத தீபம்போலே தடஸ்தமாயிருந்து ஞானதேவர் தீர்த்தாவளியென் கிற கிரந்தத்திலே சொல்லியிருக்கிறதுபோல - இது தெய்வத்தின் ரூபமான ஞானமோ-அல்லது வைராக்கியமோ-சப்தகோடிமஹாமந்தி ரார்த்தமோ-பதினென் புராணார்த்தமோ-நாமதேவனுடைய நிஜஅனு சந்தானமோ-ஸ்வரூப சாக்ஷாத்காரமோ-பிர்மானந்தத்தினுடைய பிர பாவமோ-பாவத்தினுடைய நிஜவைபவமோ - பிரேமளபக்தர்களுடை ய நிஜ ஆனந்த அனுஷ்டானமோ- யோகிகளுடைய அமிர்த வைபவ மோ பஜனபரர்களுடைய தியானரசமோ-சச்சிதானந்த விக்கிரகமோ- தெரியவில்லை என்றார்கள். அப்பொழுது மஞ்சள்காமாலை கொண்ட வனுக்கு எங்கும் மஞ்சளாகத்தோற்றுவதுபோலப் பிராமணர்களுடை ய நேத்திரங்களுக்கு அகிலசராசரங்களான சூரியன்-சந்திரன்-பிருதிவி- அப்பு-தேயு-வாயுவு-ஆகாசம்-ஆகிய பஞ்சபூதங்களும் திரிசிய திருக்கா திகளும் கிருஷ்ணரூபமாகத்தோற்றின. பண்டரிபுரத்துச் சபாமண்ட பம்-மரம்-சாலைகள்-ஜய விஜயர்களாகிய துவாரபாலகர்கள்- துவஜஸ்தம் பம்-மஹா துவாரமெல்லாம் கிருஷ்ணரூபமாகத் தோற்றின. தாள மத் தள சங்கீதவாத்தியங்களும் பண்டரிபுரத்திலே யிருக்கிறகோபுரங்கள் வீடுகள் யாவையும் கிருஷ்ணரூபமாய்த் தோற்றின. கேசரிமார்க்கத்தி லேயிருக்கப்பட்ட பிர்மேந்திராதி தேவர்கள் எல்லாரும் கிருஷ்ணரூ பமாய்த்தோற்றினார்கள். இப்படித் தோற்றினது ஒரே ஆகாசம் நானு விதமாய்த் தோற்றுவதுபோலும்-அகரமானது உயிரெழுத்துகளாகத் திரிந்திருப்பதுபோலும்-ஒரே மனசானது தசவிந்திரியங்களிலேபிரவர்த் தித்து நானுவித வியாபாரங்களிலே வியாபித்ததுபோலும் இருந்தது. ஒரே பரமாத்துமாவான ஸ்ரீகிருஷ்ணன் அனந்தங்கோடி பிரமாண்டாதி களிலேயும் வியாபித்து அகில நியந்தாவாய் ஒன்றிலேயு மணுகாமல் லோகாராட்டியம் பண்ணிக்கொண்டு பக்த சுலபராய்த் தெரிசிப்பித்த இந்தஸ்வரூபத்தைப்பார்த்தயாவரும்ஆனந்தபரிதர்களாய்ஜயஜயாகாரத் தோடேகூட நாமங்களைகோஷம்பண்ணத் தலைப்பட்டார்கள். பிராமணர் கள் தேகாபிமானமுதல் சகல அபிமானங்களையும் விட்டு இது என்ன ஆச்சரியம் இப்படிக்கொத்த பரமானந்தமூர்த்திக்கு நாம் பிராயச்சித் தம் கொடுத்தொமே-காமாந்தகாரத்தோடு கர்மாபி மானத்தினாலே பவசமுத்திரத்திலேமுழுகிப்போய்க்கிடந்தநாங்கள்அனந்தங்கோடி ஜன் மாந்தரசுகிர்தபரிபாகத்தினாலே-பாக்கியம் உதயமாய்ப்பவசாகரத்தைத் தாண்டினோம் என்று இப்படி அனந்தவிதமாய்ப் பிராமணர்கள்ஸ்தோத் திரம் பண்ணிக்கொண்டிருக்கையில்-பகவான்பிதாம்பரதாரியாய் அந்தத் திவ்விய தேஜஸை மாற்றி யதாப்பிரகாரமாய் நாமதேவரைக் கையிலே பிடித்துக்கொண்டு பிராமணர்கள் திருவடியிலேகொண்டுவந்துபோட்டு- ஓ சுவாமிகளே இந்த நாமதேவனை ரக்ஷியுங்கள், உங்கள் கிருபாதி

ருஷ்டியினாலே பார்த்துக்கொண்டிருங்கள். என்னுடைய நிஜஜீவகளை யை உங்களுக்குச் சொல்லுகிறேன் கேளுங்கள். நான் என் பக்தர்க ளுடைய சேவையினாலே பந்தப்பட்டு அவர்களுடைய ஆதீனமாயிருக் கிறேன். எனக்கு ஒரு சுவாதீனமுமில்லை. இந்த நிவர்த்திதேவர்-ஞானதேவர்-சோபானதேவர் ஆகிய இவர்கள் தங்களுடைய தேகாபி மானத்தைவிட்டுச் சர்வபூதங்களிடத்திலேயும் என்னையே தியானித்து என்னையே பூஜித்து என்னைக் கைவசமாக்கிக்கொண்டார்கள். இந்தஜக மித்திரனென பக்தன் என்னைத் தன்னுடைய இருதயமென்கிற குகை யிலே அடைத்துவிட்டுத் தன்னுடையதேகபுத்திவாசனையினாலே ஒருக் காலும் ஒட்டிப்பார்க்கமாட்டேனென்கிறான். இந்தச் சாவந்தனென் கிற பக்தன் சகல பூதங்களிடத்திலேயும் என்னுடைய ரூபத்தைத்தவிர மற்ற ஒன்றையுங்காணான். இந்த நரசிம்மமேதாவானவன் துவைதமென் கிற காட்டை வேரோடேவெட்டிச் சுட்டு பஸ்பம் பண்ணிவிட்டு முதல் ஆரண்ணியத்திலே உட்கார்ந்துகொண்டு ஆதிநாராயணனிட மாய் அத்துவைத அமிர்தமென்கிற என் சொரூபத்தையே பானம்பண் ணிக்கொண்டிருக்கிறான். இந்த நரஹரி-கோராகும்பார் - சோகாமே ளன் முதலிய இந்தப் பக்த கூட்டங்கள்எல்லாம்என்னுடைய பிரேமள பக்தர்கள். இவர்களுக்கு என்னைத்தவிரவும் எனக்கும் அவர்களைத்தவிர வும் வேறே பிராணசகாகிடையாது. இவர்களுடைய சரணரேணுவுக்கே நான் ஆசைப்பட்டுக்கொண்டிருக்கிறேன் என்றுசொன்னார். இதைப்பிரா மணர்கள்கேட்டு ஸ்தோத்திரம்பண்ணிப் பாண்டுரங்கனே-எங்களுக்குப் பிராப்தமானதேவனே- எங்களுடைய பிரபஞ்ச மாயையை அறுத்து விட்டுத் தேவரீருடைய திருவடியில் எங்கள் மனசானது பற்றியிருக் கும்படியாய்க் கிருபைபண்ணவேண்டும். எத்தனைகோடி ஜன்மம் நாங் களெடுத்தாலும் தேவரீருடைய நாமத்தைமறவாமல் இப்போது தரி சிப்பித்த திவ்வியரூபத்தைத் தியானிக்கவும் தேவரீருடைய தாசர் களின் கைங்கரியத்தை அனுகூலமாய்ப் பண்ணிக்கொண்டுவரவும் கிருபைபண்ணவேண்டும். அனந்தங்கோடி ஜன்மங்களெடுத்து வியர்த் தமாய் வேதசாஸ்திரங்களிலும் அனுஷ்டானங்களிலும் அபிமானமாய்க் கெட்டோம். அகங்காரத்திலே பந்தனப்பட்டு அபராதகோடிகளைச் செய்தோம். எங்களனந்த ஜன்மத்தினுடைய புண்ணியசேஷம் என் னயிருந்ததோ தெரியாது. தீனதயாளுவும் கிருபாசிந்துவுமாகிய நீர் நாங் கள் அந்நியாயமாய்க் கெட்டுப்போகிறோமென்று எண்ணி இன்றையத் தினம் கிருபை பண்ணினீர். அவ்வியாஜகருணும்புதராசியே எங்களு டைய த்ரிவிததாபத்தையும் சுட்டு எங்களுடைய அஞ்ஞானமான கா டாந்தகார இருட்டைப் போக்கடித்து அனந்தகோடி ஜன்மங்களெடுத்த எங்களுக்கு ஞான நேத்திரத்தைக் கிருபைபண்ணினீர். இனி அகண்ட மாய்த் தேவரீருடைய திருவடிகளிலே யெங்கள் சித்தம் இருக்கும்படி

யாய்க் கிருபை பண்ணவேண்டும். அனந்தகோடி பிர்மாண்டநாயகா எங்களையிந்தப் பக்தகூட்டங்களுடனே சேர்த்துவிடும். இந்தப் பக்தர்களுடைய பாதரேணு எங்களுடைய சிரசிலே விழுந்துநாங்கள்கிருதார்த்தர்களாகும்படியாய்க் கடாட்சியுமென்று அனந்தவிதமாகஸ்தோத்திரம் பண்ணினதைக் கேட்டுச்சந்தோஷிதராய்அப்ராகிருதராய்மந்தஹாசத்தோடே அவர்களைக் கடாக்ஷலேச திருஷ்டியினாலே பார்த்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு ஓ பிராமணர்களே ஜகதோத்தார ஏதுவாய் அவதரித்த என்னுடைய ஆத்துமா ராமனான இந்த ஞானதேவர் என் சொரூபஞானத்தை உங்களுக்கு உபதேசம் பண்ணுவார். அந்தப்படி சர்வத்திரர்களும் திடமாய் என்னையேபூஜை பண்ணுங்கள். வேதாப்பியாசங்களைப்பண்ணிஎக்கியாதிகள்ஏன் பண்ணவேண்டும்-காயக்கிலேசங்களைப்பண்ணித்தபசுகள்ஏன்பண்ணவேண்டும். இவைகளினாலேபிராப்தமாகக்கூடிய இந்திராதிபதவிகளை அடைந்தாலும் புனராவிர்த்தி ஜனனமாகத்தானேவேண்டும். என்னுடைய நாமஸ்மரணை பண்ணிக்கொண்டு சர்வபூததயாபரனாயிருந்தவன் அட்சயமான பரமபதத்தை அடைந்து நித்தியசூரிகளோடே கூடியிருக்கலாமென்று இந்த ரகசியத்தைச் சொல்லப் பிராமணர்கள் சாஷ்டாங்கமாகச் சேவித்துத் தேவோத்தமனைப் பார்த்து நானாவிதமாக ஸ்தோத்திரம் பண்ணினார்கள். அப்போது ருக்குமணிவாசனானவர் ஞானதேவரைப் பார்த்து இந்தப் பிராமணர்கள் எல்லாரையும் உம்முடைய கையிலே ஒப்பிவித்தோமென்று சொல்ல-ஞானதேவர் சாஷ்டாங்கமாகச் சேவித்துச் சுவாமி தேவரீருடைய நிஜஸ்வரூபமும் தியானமும் அவர்களுக்கு எப்படி பிராப்தமாமோ அப்படிச் சொல்லுகிறேனென்று சொன்னார். இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியாயம் சிரவணம்பண்ணின மாத்திரத்திலே சகல மனோரதமும் பூரணமாகும். ஸ்ரீ ரங்கதாமனேநம: ஸ்ரீக்ஷீரசாகரவாசினேநம:.



# பதினாறவது அத்தியாயம்

## கூர்மதாசர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரபரப்பிரமணேநம: கேளுங்கள் சாதுக்களே இந்தப் பக்தவிஜயமென்கிற கிரந்தத்தை ஒருதரம் சிரவணம் பண்ணின மாத்திரத்திலே முந்நூற்றறுபது விரதங்களையும் சாங்கோபாங்கமா யனுஷ்டித்த பலனும் அசுவமேத யாகம் பண்ணினபலனும் பஞ்சாக்கினி மத்தியிலே உக்கிரமான தபசுபண்ணின பலனும் உண்டாம் இருஷீகேசனும் பிரசன்னமாகி அக்ஷயபதவியைக் கொடுப்பார். முன் அத்தியாயத்திலே பகவான் பிராமணர்களுக்கும் பக்தர்களுக்கும் தம்முடைய நிஜரூபத்தைக்காண்பித்துக் கடாக்ஷம்பண்ணினார் என்பதைக் கேட்டீர்களே-இந்த அத்தியாயத்தில் சூரியனுடைய சாரதியாகிய அருணன் ராமநாமஸ்மரணை பண்ணுகிற நிமித்தம் பூமியிலே பிறந்து பண்டரிபுரத்திற்குப் போனதைக்கேளுங்கள். அவர் ஒரு பிராமணனுடையவயிற்றில் கைகால்களில்லாமல் பிறந்து வளர்ந்து நடக்கும் பருவம் வந்தபொழுது முடமானபடியினாலே ஆமையைப் போலே நகரத்தலைப்பட்டு ஐந்தாறு வயதானவுடனே எங்கே ஹரிகீர்த்தனம் நடந்தாலும் அங்கேநகர்ந்துகொண்டுபோய் அந்தக்கதையைச் சிரவணம் பண்ணிக்கொண்டிருந்ததாலவர்க்குக் கூர்மதாசரென்று பெயர் உண்டாயிற்று. அப்படி இருக்கையில்ஒருநாள்ஒரிடத்தில்பண்டரிபுரமகத்வத்தை வாசிக்க அதைக் கேட்டு பண்டரிநாதனைத் தரிசனம்பண்ணவேண்டுமென்று அத்தியந்த அபேக்ஷையாய்இரண்டுகைகளையும்கூப்பிக்கொண்டு அவ்விடத்திலே இருக்கிற பாகவதர்களைப் பார்த்து ஓ சுவாமிகளே நான் பண்டரிபுரத்துக்குப் போகவேண்டுமென்றால் ருக்குமணிரமணன் என்னை அழைப்பித்துத் தரிசனம்கொடுப்பாராவென்று கேட்க-அதற்கு அவ்விடத்திலேயிருந்த ஜனங்கள் யாவரும் சிரித்து உனக்குக் கைகால் இல்லையே நீ எப்படிப்போகக்கூடும் இறகில்லாத பக்ஷி எப்படிப் பறக்கும்-கண்ணில்லாதவன் எப்படிக் கருடதரிசனம் பண்ணுவான் காலில்லாதவன் எப்படி மலைமேல் ஏறுவான்-செவிடன் எப்படி ஹரிகீர்த்தனம் கேட்பான்-முடியாதே அவைபோல நீயும் பண்டரிபுரத்திற்கு போதல் முடியாது. எங்களுக்குக் கைகால் நிறைந்து ஆரோக்கிய சரீரத்தோடு இவ்வளவு வயதாகியும் போகவேண்டுமென்றெண்ணமட்டுமிருக்கிறதேயல்லாமல் போகமுடியவில்லை. அப்படியிருக்கநீஎப்படி நினைத்தவுடன்போவாயென்றுசொல்லக் கேட்டு ஆயாசமாய் நமக்கு நரதேகப்

பிராப்தமாயிருந்தும் பண்டரிபுரயாத்திரைக்குப்போய்ப் பண்டரிநாதனைத்தரிசனம்பண்ணுவிட்டால்எண்பத்துநாலுலட்சம் ஜீவராசிகளிலும் பிறந்து கொண்டே யிருக்கவேண்டுமென்று அவர்களுக்குச் சொல்லிவிட்டு-அவ்விடம் விட்டுப் புறப்பட்டு அன்று முழுதும் நடந்து இரண்டு நாழிகைவழிபரியந்தம் நடந்துபோனுர். அவ்விடத்திலே ஒரு ஹனுமார் கோவிலேக்கண்டு- அங்கேபோய்ச் சற்றே இளேப்பாறிப் பசிதாகத்தினுல் சிந்தாகிரந்தனுய் ஓ பண்டரிநாதா- தேவாதிதேவா- ருக்குமணிகாந்தா உன்னைத்தவிரவெனக்கு வேறேகதியில்லை - நீர்தான்என்னைக்காப்பாற்ற வேண்டும் வேறுயார் என் பசியையும் இளைப்பையும் தீர்த்து ரக்ஷிக்கப் போகிருர்கள். எனக்குத்தாய் தகப்பன் குருதெய்வம்வேறில்லை- சகலமும் நீயேயென்று ஸ்தோத்திரம்பண்ண அவ்வசனத்தைச் சுவாமி பண்டரிநாதன் கேட்டுப்-பொதியெடுக்கிற எருது காரரில் ஒரு பெரியதனக்காரன்போலே- வடிவெடுத்து அவ்விடத்துக்குவந்துக் கூர்மதாசரைப் பார்த்து உமக்குக்காலில்லாமலிருக்க இப்படி வருத்தப்பட்டுக்கொண்டு எவ்விடத்துக்குப்போகிறீர்- நீரார்-உம்முடைய பேரென்ன - சொல்லுமென்று கேட்க- அதற்கு அவர் சுவாமி என்பேர் கூர்மதாசன்- நான் பண்டரிபுரத்துக்குப்போகஅபேக்ஷையாய்ப்புறப்பட்டேனென்றுசொல்லக்கேட்டு வர்த்தகர் சந்தோஷமாய்ஐயரேநானும் பண்டரிபுரத்துக்குத் தான்போகிறேன். எனக்குஒருதுணை அகப்பட்டதுஎன்றுசொல்லக்கூர்மதாசர் சுவாமி நான் முடவன்-ஆனதால்உமக்குஎப்படித்துணை ஆவேன்- என்னுடைய சங்கமம்உங்களுக்குஎப்படிவாய்க்கும்-நீங்கள்எந்தவூர்எங்கே போகிறீர்கள்- உங்களுடையபேரென்னவென்றுகேட்க-அவர் என் பேர் விட்டோபாநான்ஒருகொட்டியக்காரன்என்னுடையகடைபண்டரிபுரத்திலே யிருக்கிறது இப்பொழுது நான் அவ்விடத்துக்குத்தான்போகவேண்டு மென்று சொன்னுர். அதற்குக் கூர்மதாஸர் கால் கை நன்றுயிருப்பதால் நீர் விரைவாய்ப்போகக் கூடுமே நான் முடவனுனபடியால் உம்மோடு தொடர்ந்துவர முடியாதே என்று சொன்னதற்கு நானும் மெள்ளத்தான் போவேன்- என்னுடைய பயணமும் மெதுவுதான் - நீங்கள் இறங்குகிற விடத்திலே நானும் வந்து இறங்குவேன் - உம்மைக்கூடவே அழைத்துக்கொண்டு போவேன் - பயப்படாதேயு மென்று சொல்லிக் கூர்மதாசனைச் சந்தோஷப்படுத்தி விட்டு - அங்கேயிறங்கிச் சமையல் பண்ணித் தானும் சாப்பிட்டு அவருக்கும் போட்டு ஒரு வஸ்திரமும் அவருக்குக் கொடுத்துவிட்டு அன்று ராத்திரி அங்கேயிருந்து காலமே எழுந்திருந்து கூர்மதாசரைப் பார்த்து நீ மெள்ளவா- நான் முன்னேபோகிறேன்- நீயெங்கேவந்து யிறங்குவாயோ அங்கே நான்போய்ச் சமையல் பண்ணி வைக்கிறேன்- நீ வந்துசேர் நெடுங்காலமாக இப்படிப் பண்டரிபுரத்துக்குப் போகிற ஏழைகள் பரதேசிகளுக்கு அன்னபானதிகளை விசா

ரித்து கொடுக்கிறதே என்னுடைய அலுவலென்றுசொல்லிக் கூர்மதாஸ ருக்கு வழிசொல்லி அனுப்பிவிட்டுத் தாம் மாயமாய்ப் போய்விட்டார். அதன்மேல் கூர்மதாசர் சாயந்திரபரியந்தம் நகர்ந்துஒரு ஊருக்குச்சமீப மாய் வரும்போது கொட்டியக்காரனுன நீலமேகசியாமளன் அதற்கு முன்னுலேதானே அன்னபானுதிகளைப் பண்ணிக்கொண்டிருந்து கூர்ம தாஸர் வந்தஉடனே அன்னம்போட்டு சம்ரக்ஷணைபண்ணி அன்று ராத் திரியுமிருந்து மறுநாள் புறப்பட்டுப்போய் விட்டார். பிரதிதின மிந்தப் படியேபண்ணிக்கொண்டுவருகையில் சமீபங்களிலேஊரில்லாவிட்டால் அங்கே ஒரு ஊர் நிர்மாணம்பண்ணிஅங்கேயிருந்து அவர் வந்த உடனே அவரைச் சம்ரக்ஷணை பண்ணுவார். இப்படி நாலுமாத பரியந்தம் நகர்ந் து கொண்டுபோய்க் கார்த்திகை மாசம் பெருளாபுரம் வந்து சேர்ந்தார்.

அந்த வூரிலே இருக்கிற பிரஜைகள் கார்த்திகை மாதம் சுக்கில பக்ஷம் ஏகாதசி உற்சவத்துக்குத் தசமியன்றைக்குப் புறப்பட்டார்கள். அவர்களைப்பார்த்து இவர் நமக்கும் கைகால் இருந்தால் அவர்களோ டேபோகலாம்-உற்சவத்தைக்கண்ணுலேபார்க்கலாம்-அப்படியில்லாமல் முடவனுகயிருக்கிறோமே யென்று விசனப்பட்டு விரைவாய்ப்போகி, இவர்களைப்பார்த்துநாம்இப்பொழுதுவிசனப்படுகிறதுசெல்வமுடையா னைப்பார்த்துத் தரித்திரன் விசனப்படுவதுபோலவும் திடகாத்திரனை பார்த்து ரோகியானவன் விசனப்படுவது போலவும் பயனற்றது என்று மனதிலே சமாதானம் பண்ணிக்கொண்டு போகிறவர்களை யழைத்து அப்பா நீங்கள் பண்டரி புரத்துக்குப்போகிறீர்களே என்பேரில் தயவு பண்ணிப் பண்டரிநாதனுக்கு யென்பேராலே சாஷ்டாங்க தண்டம் சொல்லி நான் பரதேசி அனுதை கைகாலில்லாத முடவன்-எனக்குத் தேவரீரை நாளையத்தினம் ஏகாதசியில் தரிசனம் பண்ணவேண்டுமென் கிற அபேக்ஷையிருக்கிறது- பெருளாபுரத்துக்கும்பண்டரிபுரத்துக்கும் பதினாலு நாழிகை வழியிருக்கிறது- நான் பண்டரிபுரத்துக்குவந்து சேர வேண்டுமென்ருல் ஏழுநாள் செல்லும்- ஆகையால் அநாதபந்துவும் ஆபத்பாந்தவனும்-கருணைசாகரனும் - தீனதயாளுவுமான பண்டரிநாத னைச் சாதகபக்ஷி மேகத்திற்கு இச்சித்ததுபோலும்- கன்றுக்குட்டி தாயைத்தேடி வாடுவதுபோலும் கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கிற கூர்ம தாசனுகிய எனக்குக் கிருபை பண்ணி நாளைக்குத் தரிசனம் கொடுக்க வேண்டு மென்று சொல்லுங்களென்று சொல்ல- நல்லது அப்படியே சொல்லுகிறோமென்று சொல்லிவிட்டுப் பண்டரிபுரத்துக்கு வந்து கோவிலுக்குப்போய் மஹாதுவாரத்திலே சேவித்துக்கொண்டு பக்தர் களுடைய ஆறுதலையான இடமோ- கியானவந்தர்களுடைய நிஜபாக்கி யமோ- யோகிகளுடைய ஹிருதயமாகவிளங்குகிற பொருளோ- பக் தர்களுடைய வித்தமோ- மோக்ஷ தாயகமோ- மூலஜகந்தமோ- பிர

மானந்தநிலயமோவென்றுவிளங்கப்பட்டசுவாமிசந்நிதியிலேநிஜபக்தனு னாமதேவர்கீர்த்தனம்பண்ணிக்கொண்டுநர்த்தனம்பண்ணுகிறதும்-அரியினுடையசரணாரவிந்தத்தைவர்ணிக்கிறதும்-ஆனந்தமடைகிறதும்- தேகபரவசமாகிறதும் [கிருஷ்ணா-கோவிந்தா-மேகசியாமளா-முகுந்தா-முராஹரி-புருஷோத்தமா-நரஹரி-தாளிதள சியாமளவிஜயராமா- ஜகத்ரூபதே- ஜயஜயா கோவர்த்தனோத்தாரணா-கோரக்ஷணா-கோபிகாமனோஹரா- ஜய ஜயா பக்தகருணாகரா தீனோத்தாரா- பாண்டுரங்கா- ஜயமங்கள நிலயா- மஹாகோர மத்தக பஞ்சனா- அமரபாலகா- அக்ஷயா- சர்வேசா- அவிநாசா- ஆதிமத்தியாந்தரஹிதா- ஆனந்தா- ஸ்ரீயப்பதியே- பண்டரிநாதா - என்னுடைய வக்தாவும் சுரோக்தாவும் நீயே- யென்னுடைய பிரியமும் நீயே- யென்றுஸ்தோத்திரம் பண்ணுகிறதுமாக இருக்கும்பொழுது- ருக்குமணிரமணனை பகவான் நாமதேவனை யெடுத்துமார்போடணைத்துக்கொண்டு முகத்தைத்துடைத்துச் சாதுசந்தர்களைப் பார்த்து-நிவர்த்திதேவனுனவன் நிஜதாஸன்வைராக்கியத்திலும்கியானத்திலும் சலியாதமேருபருவதம்போலவும் என் ஆத்துமராமனாகவும்விளங்குகிறவன்- இந்த ஞானதேவன் அவ்வாத்தும பேதத்தில் பூரண சமுத்திரமானவன் இந்தச்சோபானு தேவன்-ரோகிதாசன்-கோராகும்பார்-விரோபாகேசன்- சோகாபிரமானந்தர்-சோகாமேளன்- ஜகமித்திர நாகநாதன்- வடிடஸ்வரா- சாரங்கதேவர்-அஸ்தாஸ்து-ஸரகேசவதாசர். நரஹரி- பானுதாசர்- இவர்கள் இப்பொழுது இங்கே எனக்குப் பிரியமான பக்தர்கள். பீஷ்மர்- ருக்குமாங்கதர்- அக்குரூரர்- உத்தவர்- அர்ச்சுனன்- பிரக்லாதன்- துருவன்- நாரதன்- முதலானவர்கள் நெடுங்காலமாயுள்ள என்னுடைய நிஜப்பிரியர்கள். என்னுடைய அந்தரங்க மறிந்தவர்கள். ஆனாலும் சர்வவிஷயத்திலும் விரக்தனை இந்த நாமதேவனுடைய செயல் அதிக அற்புதமாகக்காணுகிறது என்று சொல்லிக்கொண்டிருக்கையில் யாத்திரைக்காரராகிய பக்த ஜனங்கள் துவஜங்களைக் கையிலெடுத்து ஜய ஜயாகாரமாய்க் கோஷம் பண்ணிக்கொண்டும் கருடடக்கையமும் திண்டி என்னபட்ட திண்டிவாத்தியமு முழக்கிக்கொண்டும் மத்தள தாள வாத்திய கோஷங்களோடே பீமாதீரத்திலே கூட்டமாய் வந்து இறங்கினார்கள். அப்பொழுது அவர்களுக்கு உண்டாயிருந்த சந்தோஷத்தைச் சந்திரனுடைய அமிர்தருசியைச் சகோர பக்ஷி அறிவதுபோலும்-க்ஷீரசாகரத்தினுடைய ருசியை உபமன்னியு முனிவர் அறிவதுபோலும்-சாதுக்கள் பெருமையைச் சாதுக்களே யறிவதுபோலும்-விந்தப் பண்டரிபுர க்ஷேத்திரத்தைக்கண்டு ஆனந்த மடைந்த அந்தப் புண்டலீக மகாமுனியே அறிவார்- இப்படி யாத்திரை வந்த ஜனங்கள் கோவிலுக்கு வந்து இடுப்பிலே இரண்டு கையையும் வைத்துக் கொண்டு செங்கல்லின் மேலே பீதாம்பரதாரியாய் நின்று கொண்டிருக்கிற பகவானைக் கண்ணாலேகண்டு- ஆனந்த பரவசர்களாய்

இரண்டு திருவடிகளையும் சேவித்து நேத்திரத்தில் ஒற்றிக்கொண்டு மார் போடு அணைத்துத் தேகபரவசமாய் நர்த்தனம் பண்ணி நானாவித மாக ஸ்தோத்திரம் பண்ணின பிற்பாடு - சுவாமியைப்பார்த்துப் பண் டரிநாதா சர்வக்ஞா பெருளாபுரத்திலே கைகாலில்லாத முடவனாயி ருக்கிற கூர்மதாசனென்கிற பக்தன் தேவரீரை இன்றைக்குத் தரிச னம் பண்ணவேண்டுமென்று மிகுந்த ஆசையுடனேயிருக்கிறான்- தீன பந்துவான நீர் போய் அவனுக்குத் தரிசனங்கொடுக்கவேண்டுமென்று சொன்னார்கள்

அதைக்கேட்டுப் பகவான் சந்தோஷமாய் உடனே இன்றையத்தி னம் தான் எனக்கு உத்தம தினம் இன்றைக்குத்தான் என் மனோரத மும் பூரணமாய்விடுமென்று சொல்லிவிட்டு ஞானதேவருக்கும் நாம தேவருக்கும் தன்னுடைய அந்தரங்கத்தைச் சொல்லி அவர்களையும் கூட அழைத்துக்கொண்டு கூர்மதாசருக்குத் தரிசனங்கொடுக்கப்புறப் பட்டார். அப்பொழுது பிர்மாதி தேவதைகளுக்குக் கூடத்துர்லப மானதும்- நிகமாகமபுராண சாஸ்திரங்கள் வர்ணிக்க மாட்டாததும்- அஷ்டாங்கயோகிகளால் எட்டக்கூடாததுமான ஸ்ரீபாதம் கூர்மதாச னுடைய நிஜபக்தி விசேஷத்தினாலே பூமிதேவிக்குலபித்தது. இப்படி மூவரும் நடந்து போகும்போது- பெண்டியென்கிற ஊரைக்கண்டவு டன் அவ்விடத்திலே தோட்டம் போட்டுக்கொண்டிருக்கிற சாவந்த னென்னப்பட்ட பக்தனைக்காணவேண்டுமென்று பகவானுக்கு இச்சை பிறந்தபடியால் அந்தத்தோட்டத்துக்குச் சமீபமாய் வருகையில்- ஞா னதேவரையும் நாமதேவரையும் பார்த்து நான் இந்தத் தோட்டத்தின் உள்ளேபோய்ச் சற்றுநேரத்தில் திரும்பி வருகிறேன் நீங்களிங்கேயிருங் களென்று சொல்லிவிட்டு உள்ளே போய்ச் சாவந்தனைக்கண்டார். அவன் எந்நேரமும் பக்தி செய்துகொண்டிருக்கிறவனானதால்பகவானைப் பார்த்தவுடனே இரண்டு சரணங்களையும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு ஆனந்த வாரிதியில் மூழ்கிச் சுவாமி யின்றைக்குக் கிடைத்த வென்பாக்கியமே பாக்கியம் தேவரீர் கால் நடையாய் வந்ததேது இது என்ன ஆச்சரியமென்றுசொல்லி மிகவும் ஆனந்தமடைந்துஅடிக்கடி சர ணாரவிந்தத்திலேவிழுந்துநமஸ்காரம்பண்ணிச்சுவாமியெந்தபக்தன் நிமித் தம் இப்படிக் கஷ்டப்பட்டுப் போகிறீர் என்று சொல்லிக்கொண்டு அவர்க்குப் பூசைபண்ணத்தொடங்கினான். அப்போது சுவாமி சாவந் தனைப்பார்த்துச் சாவந்தா இந்த வேளையென்ன பூசை செய்யப் போகிறாய் அது இருக்கட்டும் என்னைபிடிக்கும் நிமித்தம் இரண்டு திரு டர்கள் துரத்திக்கொண்டு ஓடிவருகிறார்கள் அவர்கள் கையிலே அகப்ப டாமல் ஒளித்துக்கொள்ளும்பொருட்டு உன்னண்டையில் ஓடிவந்தேன். ஆகையால் கொஞ்சம் இடமட்டும் கொடு கிரஹணம் பிடிக்கிறபோது

சூரியனுக்கு அர்க்கியதானம் ருசிக்காததுபோலவும் சத்துரு வந்து சுற்றிக்கொண்டபொழுதுராஜாவுக்குச் சிம்மாதனம் ருசிக்காததுபோலும் இந்தவேளை நீ பூசை பண்ணுகிறது எனக்கு ருசிக்கவில்லை யென்றதற்குச் சாவந்தன் நீ யெந்தவிடத்திலே ஒளித்திக்கொள்ளுவாய். நீ ஒளித்துக்கொள்ளுகிறதற்கு ஒரு விடத்தையும் காணேன் நீ யில்லாதவிடம் சிறிது மில்லாமையால் திரிபுவனத்திலும் தேடிப்பார்த்தாலும் நீ ஒளித்துக்கொள்ளுகிறதற்கு இடம் கிடையாது. எங்கும் வியாபகமா யெல்லாவற்றிற்கும் இடம்கொடுக்கிற ஆகாசத்தை ஒருகுடத்திலே அடைக்கபோமோ. அப்படிப்போல உன்னிடத்திலே அனந்தங்கோடி பிர்மாண்டங்களும் ஒளித்துக்கொண்டிருக்க உன்னை ஒளிக்கிறதற்கு ஒரு இடம் உண்டோவென்று சொல்லக்கேட்டு ஜகன்னிவாசன் இப்படிப்பட்ட பிர்ம ஞானத்தைநிறுத்தி யிந்தவேளையிலே என்னை யெவ்விடத்திலேயாகிலும் ஒளிந்துவையென்று சொன்னார். ஓ சுவாமி இந்தத்தோட்டத்திலும் எனது குடிசையிலும் உமக்கு இஷ்டமான இடத்தில் ஒளித்துக்கொள்ளலாமென்றதற்கு மகாமாயனான மாதவன் எனக்கு இவைகளைப்பார்க்கிலும் மறைவான இடம்வேண்டுமென்றார். அது கேட்டுச் சாவந்தன் சந்தோஷமாய் பகவானைப் பார்த்து அப்படி யானால் ஓ லக்ஷ்மீபதே யோகிகளுடைய இருதயத்தில்தேஜசுரூபமானவனே உன்னை ஒளிக்கிறதற்கு என்னுடையஹிருதயமல்லாமல் வேறேதகுதியான இடமில்லை அதிலும்மை நிலையாயிருத்தவேண்டு மென்றே நெடுநாளாக விரும்பிக்கொண்டிருந்தேனென்று சொல்ல அதற்குப்பகவான் எனக்கு மிப்பொழுது அதுதான் தகுந்தயிடம் ஆனால் அங்கே நான் போகக் கொஞ்சம் வழி வேண்டுமென்றுகேட்க உடனே சாவந்தன் சந்தோஷமாய்ச் சுவாமி யானவர் எனது இருதயத்திற்குவரப்பெற்றதே பெரும் பாக்கியமென்று தான்வேலைசெய்யவைத்திருந்த செதுக்குப்பாறையை எடுத்து தன்மார்பைப்பிளந்து சுவாமி இப்பொழுது என்னுடைய ஹிருதய மென்கிற சிமிளியிலே விரைவாய் வந்து உட்காருமென்று சொல்ல ஸ்ரீ ஹரியானவர் ஆனந்தத்தோடே அவருடைய இருதயத்தில் பிரவேசித்தார். அப்போது சாவந்தன் ஒருவருக்குந்தெரியவொட்டாமல் தன்னுடையமார்பை ஒரு வஸ்திரத்தினாலே இறுக்கிக்கட்டிவிட்டான். உள்ளேபிரவேசித்த பகவான் சந்தோஷமாய்ச் சாவந்தனைப்பார்த்து இப்பொழுது நீசெய்தஉபகாரத்திற்கு பிரதியுபகாரம் செய்வோமென்றால் ஒன்றையுங்காணேனென்றார். சர்வாந்திரயாமியும் சர்வவியாபகனுமான பண்டரிநாதன் சாவந்தனுடைய இருதயத்தில் பிரியமாயிருந்தது கிருஷ்ணாவதாரத்திலே பகவான் நந்தவிரதத்திலே விளையாடிக்கொண்டிருக்கும்போது கோபாலஸ்திரீகளை அவர்களுடையமாமிமார்கள்தயிர் விற்றுக்கொண்டு வரச்சொல்லி அனுப்பினபொழுது அவர்கள் கோபாலனிடத்திலே யிருக்கிற மோகபாசத்தினாலே தயிரோ தயிரென்றுவிலை

கூறுகிறதைவிட்டுக் கோவிந்தா கோ விந்தா - மாதவா மாதவா என்றுசொன்னார்கள். அப்பொழுது அவர்களுள் ஒருத்தி இதுவென்ன ஆச்சரியம் தயிரோதயிரென்று விலைகூறுகிறதைவிட்டுக் கோவிந்தா மாதவாயென்றுசொன்னோமே அவர்நம்முடைய தயிர்ப்பானையிலேயும் யிருப்பாராவென்று ஆசையோடுஅதையெடுத்துப்பார்க்க அவர்கள்வார்த்தையை யதார்த்தம்பண்ணவேண்டுமென்று அந்தத்தயிர்ப்பானையிலே உட்கார்ந்ததுபோல யிருந்தது. பிறகுபகவான் சாவந்தனையழைத்து நீ யென்னுடைய சுரூபம் நானுன்னுடைய சுரூபம்நமக்குள் பேதமில்லை என்று சொல்லக்கேட்டு ஓ அனந்தகல்யாண குணநிதே என்னுடைய பிராணனுள்ளபட்டும் கல்பாந்திரகோடிகாலமானாலும் உன்னைவிட்டு க்ஷணப்பொழுதுகூடப் பிரியமாட்டேன் அப்படிஅனந்தங்கோடி ஜன்மமெடுத்தாலும் தேவரீருடைய திருவடியைவிடடுப் பிரியாமலிருக்கும்படியாய்க் கடாக்ஷிக்கவேண்டுமென்று சொன்னான். இப்படிப்பக்தனும் பகவானும் அன்னியோன்னியமாய் ஆனந்த பரிதர்களாய்ப் பேசிக்கொண்டிருக்கும்போது வெளியிலே பாண்டுரங்கன் இன்னம் வரவில்லையென்று வழிபார்த்துக்கொண்டிருந்த நாமதேவர் சரீரம் முழுதும் துடிக்கவும் இரண்டு கண்களிலிருந்தும் ஜலம் பெருகவும் தத்தளித்துமுகத்திலரைந்துகொண்டு தாயைப் பிரிந்த கன்றுபோலவும் தனத்தை இழந்த லோபியைப்போலவும் அடிச்சுவட்டைப் பிடித்துத் தேடிக்கொண்டு என்னுடைய பிராணனுக்குப் பிராணனானவனே எனதுசர்வசுகானந்த நிலையேஎன்னுடைய பிராணநாதா-நீ என்னைவிட்டு எங்கே போனாய் இப்படி என்னை கைவிட்டுவிடுவாயென்பது எனக்குத் தெரிந்திருக்குமானால உன்னுடைய பீதாம்பரத்துக்கும் என்னுடைய முன்றானைக்கும் முடிபோட்டுக் கொண்டு வருவேனே தெரியாமலபோயிற்றேயென்று சொல்லிக்கொண்டு தோட்டத்திற்குள்ளே வந்து சாவந்த பக்தனைக்கண்டு சேவித்து ஜகன்னியாசன் இங்கே வந்தாரே அவரெங்கேபோனார். அவர்வருவாரென்று இந்தபட்டும் வழிபார்த்துக்கொண்டிருந்தேன் அவரைக்காணாமல் எனது பிராணன் தத்தளித்துக்கொண்டிருக்கிறது. எங்கே போனார் சொல்லுமென்றுகேட்கச் சாவந்தன் தேகாபிமானத்தை மறந்து ஸ்ரீ ஹரியினுடைய சுரூபத்திலேலே தன்மயமாய்ப்போய் ஆனந்த பரவசத்தை அடைந்து தடஸ்தமாயிருந்துவிட்டார். அந்த அனுபவத்தைப் பார்த்து நாமதேவர் என் பிராணநாதனை கிருஷ்ண பரமாத்துமாவானவர இவிடத்திலேதான் இருக்கிறாரென்று அறிந்துகொண்டார். ஓ பக்த சிரோமணி நான் துர்ப்பலன் தீனன் என்னுடையநிதியாயும் என்னுடைய சர்வசுகானந்த நிலையாயும் என்னுடைய பிராணநாதனுமிருக்கப்பட்ட தெய்வத்தையிப்படி உன்னுடைய இருதயத்திலேயொளித்துவைத்துககொண்டாயேஎன்பேரிலேகிருபைவைத்து அவரைஒருதரம காண்பிவிப்பாயேயானால்நான் அவருடைய

திவ்வியமங்கள ரூபத்தைப் பார்த்துவிட்டு துன்பம் நீங்குவேனென்றுசொன்னார். அந்தவசனத்தைப் பகவான்கேட்டு சாவந்தனைப்பார்த்து என்னுடைய பிராணசகாவான நாமதேவனுக்கு என்னுடைய தரிசனம் பண்ணுவியென்று சொல்லிவிட்டு நாமதேவனைப் பார்த்துஇப்பொழுது நான் சாவந்தனுடைய இருதயத்திலே அடைபட்டுப்போயிருக்கிறேன். வெளியிலே வரவேண்டுமென்றால் வரக்கூடாதிருக்கின்றது. பட்டுப் புழுவும் இலந்தைப்பழபுழுவும் தன் வாயினாலேகூட்டைக்கட்டிக்கொண்டுப் பிறகு அதை பேதித்துக்கொண்டு வரமாட்டாததுபோலவும் தாமரைகமலத்தைக் கண்ட வண்டானது ஆசையுடனேபோய் அதிலிருக்கச் சூரிய அஸ்தமயமானவுடனே குவிந்துபோக அதைப் பேதித்து வரமாட்டாததுபோலவும் சாவந்தனுடைய இருதயத்திலேஅகப்பட்டுக் கொண்ட நான் வெளியிலே வரக்கூடாதிருக்கிறேனென்று சொன்ன இந்திரஜாலக்காரனுடைய வார்த்தையைக் கேட்டு நாமதேவர் ஜலத்திலே யிருந்து எடுபட்டமீனானது தத்தளிப்பதுபோலத் தத்தளித்துக் கொண்டிருக்கையில் பகவான் கேட்டுக்கொண்டதின்மேல் சாவந்தன் ஓ நாமதேவரே உம்முடையபேரில் பகவானுக்குக் கிருபை இருக்கிறது தத்தளியாதேயும் நீர் செய்த புண்ணியகோடிதவவிசேஷத்தினாலே உம்மைச்சகமலலோசனன் தன்னுடையபிராணசகா இந்தநாமதேவனென்று சொல்லுகிறார் உம்முடைய பாக்கியமே பெரும்பாக்கியம். உம்முடைய மகிமையைப் பண்டரிநாதனே அறிவாரென்றுசொல்லி நாமதேவருடைய சரணாரவிந்தத்தில் விழுந்து ஆனந்தபரவசராய் இருக்கும் போது நாமதேவர் பகவானைப்பார்த்து என் பிராணனுக்குப் பிராணனானகுணநிதியே இப்போது உன்னை யெனக்குக் காண்பிக்கவேண்டும் உன்னைத்தவிரவேறே ஆவியும் கிடையாதே என்றுசொல்லி மிகுந்த வருத்தமடைய அவ்வசனத்தைச் சாவந்தன் கேட்டு அதிக விரைவாய் மார்பிலே கட்டியிருந்த வஸ்திரத்தை அவிழ்த்துவிட்டான். அப்போது பாண்டுரங்கனை பக்தவச்சலன் பிரசன்னமாக நாமதேவர் ஓடிவந்து இரண்டு சரணங்களையும் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு விம்மி விம்மி அழக் கிருஷ்ணபரமாத்மாவானவர் அவனையெடுத்து மார்புடனே அணைத்துக்கொண்டு தன்னுடைய பீதாம்பரத்தினாலே முகத்தைத் துடைத்துத் தேறுதலாக அனேக இனியவசனங்களைச் சொல்லிச் சிரித்து கையைப் பிடித்து வெளியே அழைத்துக்கொண்டுவந்து ஞானதேவரைப் பார்த்துத்தான் தோட்டத்தின் உள்ளே சென்றதும்அங்கே சாவந்தன் செய்ததும் சொல்லிவிட்டுக் கூர்மதாசனுடையதரிசனத்துக்குப் போவோமென்று சாவந்தனையுங்கூட அழைத்துக்கொண்டு நாலு பேருமாய்ப் போகிறபோது அவ்விடத்திலே கூர்மதாசருக்கு வலது கண்ணும் வலது புஜமும் துடிக்கத் தலைப்பட்டது. அதனால் அவர் இன்றைக்குப் பகவான் நன்மைசெய்வாரென் றெண்ணிக்கொண்டிருக்

கையில் இவர்கள் நான்குபேரும் கூர்மதாசருக்குஎதிரேநின்று ஓ பெரிய வரே இவ்வளவு கஷ்டப்பட்டுக்கொண்டெங்கே போகிறீர் என்றுகேட் க நான் ஏகாதசியாகிய இன்றையத்தினம் பண்டரிநாதனைச் சேவிக்க வேண்டுமென்றுவந்தேன் எனது ஜன்மாந்தர பாபத்தால் முடவனாக யிருப்பதால் அங்குப்போய்ச் சேரமுடியவில்லை. தீனபந்துவாகிய அவர் இங்கேயாவது வந்து தரிசனம் கொடுத்தால் பிழைப்பேன் இல்லாவிட் டால் உயிரைவிட்டுவிடுவேனென்று சொல்லிய வயிராக்கியத்தைப் பார்த்து பகவான் கூர்மதாசருக்கு பிரசன்னமாய் நிற்கிறபோது கூர்ம தாசன் சாஷ்டாங்கமாய்ச் சேவித்தார். அவரை நாலு புஜத்தினலும் வாரியெடுத்து மார்பிலே அணைத்துக்கொண்டு சந்தோஷமாய்க் கூர்ம தாசரேஉமக்குஎன்னவரம்வேண்டும் வேண்டியவற்றைக்கேட்டுக்கொள் ளுமென்றுசொல்லகூர்மதாசன்நானுவிதமாக ஸ்தோத்திரம்பண்ணி தே வாதிதேவா பக்தவச்சலா-பக்த பூஷணு- தாசன் பேரில் கிருபைகூர்ந்து தரிசனம்கொடுத்தீர் எனக்கு இப்படிப்பட்ட உமதுதரிசனத்தைத்தவிர வேரு ஒன்றும் வேண்டுவது இல்லை. ஆயினும் தேவரீர் இவ்விடத்தி லே வாசம் பண்ணவேண்டும் இந்த ஒருவரம் எனக்குகொடுக்கவேண்டு மென்று கேட்டுக் கொண்டதற்கு நீலமேகசியாமளன் அப்படியே ஆகு கயென வாக்குக்கொடுத்து அவ்விடத்திலே வாசம் பண்ணினர். ஆத லால் அந்தபெகுளாபுரம் பண்டரிபுரக்ஷேத்திரத்திற்குச் சமானமாயிற் று. ஆடிமாசம் கார்த்திகை மாசம் இரண்டுக்கும் பண்டரிபுர க்ஷேத்தி ரத்திற்குத் தரிசனத்துக்கு வருகிற பெரியவர்களெல்லாரும் அவ்விடத் துக்கும் போகிறார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியா யத்தைப் பக்தியுடனே சிரவணம் பண்ணினவர்களுடைய மனோபீஷ் டங்களை ஸ்ரீ பண்டரிநாதன் கூர்மதாசருக்கும் சாவந்தருக்கும் பூர ணம் பண்ணுவித்ததுபோல நிறைவேற்றித் தேகாந்தியத்தில் அக்ஷய மான தன்னுடைய பதவியைக் கொடுப்பார். ஸ்ரீ பாண்டுரங்காயநம: ஸ்ரீ வாசுதேவ பரப்பிரமணேநம:.

## பதினேழாவது அத்தியாயம்.

# ராக்காவென்னும்பக்தர்சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம:. கேளுங்கள் சாதுக்களே இந்தப் பக்தவிஜய மென்கிற கிரந்தம் சற்ஜனர்களென்கிறவனத்திலே பிரவேசித்து அர்த்தாபேதமென்கிற விருக்ஷங்கிளம்பித் துளிர்க்கின்றன. அதற்குப் பாவார்த்தமென்கிற கிளைகளும் சாகைகளும் உண்டாயின. சக்கியானமென்கிற புஷ்பங்கள் பூத்தன. விக்கியானஸ்திதி யென்கிற பலன்கள் உவமையில்லாமல் பழுத்தன. இப்படியிந்தச் சிங்காரத்தோடே கூடியவனம் சோபானமாயும் அதிசயமாயும் தோன்றுகின்றது. அதில் திரிவித தாபத்தையுடைய ஜனங்கள்வந்து சேர்ந்து தாபநிவாரணம் பண்ணிக்கொண்டார்கள். ஜீவன்முக்தர்களாகிய பக்ஷிகள் அந்த நிழலிலே வந்துகளிக்கின்றன. சக்கியானி ஆன விவேகிகள் அந்தப்பலன்களையும் புஷ்பங்களையும் பார்த்துச் சந்தோஷமடைவார்கள். முன் அத்தியாயத்திலே கூர்மதாசருக்கு ஜகத் கர்த்தாவானவர் தரிசனம் கொடுத்துக் கடாக்ஷம் பண்ணினாரென்ற கதையைக் கேட்டீர்களே இந்த அத்தியாயத்தில் பண்டரிபுரத்திலிருக்க வயிராக்கிய சிரோமணி ஆன ராக்காவென்கிறபக்தன் சரித்திரம் சொல்லப்படுகின்றது. அவன் குச்சிலியஜாதிக் குயவன் மகாபக்தன் மிகுந்தவயிராக்கியமுடையவன். பாக்காவென்னும்பெயருள்ள அவனுடையஸ்திரீ மஹாபதிவிரதை. அவர்களுக்கு ரூபலாவண்ணியமுள்ளஒருபெண் உண்டு. அவளுக்குப் பங்காவென்றுபேர். அவர்கள்கவபாண்டங்கள் பண்ணிவியாபாரம்செய்துக் காலங்கழித்துக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில் ஒருகாலத்தில் பாண்டங்கள்பண்ணி சுடாயல் வீட்டிலேசேர்த்துஇருக்கஅவைகளிலே ஒருபாண்டத்தில்ஒருபூனை குட்டிபோட்டிருந்தது. அதையறியாமல்குயவன்பாண்டங்களை யெடுத்துச்சூளையிலே அடுக்கிப் பூனைக்குட்டியிருந்த சாலேயும்எடுத்து நடுவேவைத்து விறகுகளேயும் விராட்டிகளையும் சுற்றிலும்போட்டுநாலுபக்கமும் தீமூட்டிவிட்டான். தீயெங்கும்கலந்து எரிந்துகொண்டு வருகிறபொழுது வெளியிலே யிரைக்குப்போயிருந்த தாய்ப் பூனையானது வீட்டில்வந்து குட்டிகளை எங்கும் தேடிப் பார்த்துக் காணுமையால் தத்தளித்து கத்திக் கொண்டு சூளை யண்டையில் வந்து கத்தத் தலைப்பட்டது. அப்போது இந்தக்குயவன் அந்தப் பூனை கத்துகிறதைப் பார்த்து யோஜித்து அதினுடைய குட்டிகள் சூளையிலே அகப்பட்டுக் கொண்டபடியினாலே இதுசுற்றிச்சுற்றிக் கத்துகிறதென்ற

றிந்து மனங்கலங்கித் தலையிலே மோதிக்கொண்டு தன்னுடைய ஸ்திரீ யைப்பார்த்து ஓ பெண்ணே மகத்தாகியபாவம் நமக்குவந்து சம்பவித் தது. பூனையானது நம்முடைய பானையிலே குட்டிவைத்திருந்தது தெரியாமல் சூளையிலே அடுக்கிக் கொளுத்திவிட்டேன். இப்போ துசூளையைப்பூனையானது சுற்றிச்சுற்றிவந்துகத்துகிறது. இந்தத்துக்கத் தைக்கண்ணாலேபார்த்துச்சகிக்கமுடியவில்லையேயென்றுசொல்லஸ்திரீ யானவளும் கூடப்பிரலாபிக்கத்தலைப்பட்டாள். இப்படிஸ்திரீயும்புருஷ னும்ஆகாரமில்லாமல விசனப்பட்டுக்கொண்டிருக்கிற வேளையிலே ஆ பத்பாந்தவனான பண்டரிநாதனை நினைத்துச் சுவாமி அரக்குமாளிகையி லேஅகப்பட்டுக்கொண்ட பஞ்சபாண்டவர்களைச் சம்ரக்ஷணைபண்ணின வனே- கொதிக்கிற தண்ணீர்க்கொப்பரையிலே விழுந்த தவளைக்குஞ்சு உன்னை நினைக்க உடனே அதனுடையசங்கடமறிந்துநிவாரணம்பண்ணி அந்த ஜலமுழுவதையும் அதிசீதளமாய குளிர்ந்தஜலமாகப்பண்ணின வனே- பிரகலாதனை அக்கினியிலே தள்ள அந்த அக்கினியைச் சீத ளமாகப்பண்ணினவனே- தமோகுணமுடைய பூனையானது உன்னை நி னைக்கமாட்டாதே- அதனுடைய குட்டிகளைக் கிருபாசமுத்திரனே காப் பாற்றுமென்று சொல்ல- அவனுடைய ஸ்திரீயானவள் பகவானிடம் அதற்காக ஒரு பிரதிக்ஞை பண்ணிக்கொள்ளவேண்டுமென்று சொல்ல- ராக்காவென்கிற குயவன இந்தப்பூனைக்குட்டியைப் பகவான் காப்பாற் றினால்நான் இனிமேல் இந்தத்தொழிலைவிட்டுவிட்டுச்சமுசாரமும்பண்ணு கிறதில்லையென்று நிச்சயம்பண்ணிக்கொண்டு- கண்களிலே ஜலம்பெருக தேகஸ்மரணையில்லாமல் தேகாபிமானத்தைவிட்டுப் பூமியில் விழுந்து புரண்டு அழுதுகொண்டு மூர்ச்சையாய்க்கிடந்தான். அவன் மனைவி யானவள் வயிற்றிலே அறைந்துகொண்டு பண்டரிநாதனை நினைத்து ஓ பக்தவத்சலா- ஓ கிருஷ்ணா- ஓ ஜகஜ்ஜீவா-சீக்கிரமாய் வந்துரக்ஷியும் ரக்ஷியுமென்று சொல்லிக்கொண்டிருந்தாள். அப்பொழுதும் அந்தப் பூனை சற்றுநேரத்திற்கு ஒருதடவை வந்து அந்தச்சூளையைச்சுற்றி அழு துகொண்டிருந்தது. இப்படியிருக்கையில் சூளையானதுஇரண்டுநாள் இரா வும் பகலும் எரிந்துகொண்டிருந்து மூன்றுநாள் தணிந்தது. கேளுங்கள் பாக்கியசாலிகளே உடனே அந்தச்சூளையில் பாண்டத்துக்குள்ளேயிருந் தபூனையின் குட்டிகள் தாயின் குரலைக்கேட்டு தாமும்கூப்பிட்டன. அந் தச்சப்தத்தைக் குயவன் கேட்டு மகா சந்தோஷமாய்ச் சூளையைப்பிரித் து அந்தக்குட்டியிருந்த பாண்டத்தைப் பார்க்க அதுபட்டுப்பசுமையாய் வேகாமலிருந்தது. உடனே அந்தப்பாண்டத்தை யெடுத்துக்கொண்டு வந்து அதிலேயிருந்த மூன்று குட்டிகளையுமெடுத்துத் தாய்ப் பூனையண் டையில் விட்டுவிட்டு ஓ தேவாதிதேவா- ஆபத்பாந்தவா- ருக்குமணிவா சா-பக்தபூஷணா- கிருபாசமுத்திரா- அடியேனையும் ஓர் தாசனாக நினைத் தாயோவென்று இப்படி நானாவிதமாக ஸ்தோத்திரம்பண்ணி- ஸ்திரீபுரு

ஷர்களிருவரும் சந்தோஷத்தையடைந்தார்கள். மூன்று நாள்ஜலபானம் கூட இல்லாமல் வாடியிருந்தமுகம் சந்திரபிம்பம்போலே பிரகாசித்தன. அப்போது ராக்காவென்கிற குயவன் தன் ஸ்திரீயைப் பார்த்து இனி நாம் பிரதிக்கினைபண்ணிக்கொண்டபடியே நிறைவேற்றவேண்டுமென்று ஊரிலே யிருந்த பிராமணர்களை அழைத்துத் தன் வீடுவாசலெல்லாம் குரைவிட்டுத் தானும் தன்னுடைய ஸ்திரீயும் பெண்ணும் ஒற்றை வஸ்திரத்தைக் கட்டிக்கொண்டு வெளியிலே புறப்பட்டார்கள். மூன்றுபேரும் காட்டுக்குப்போய் இரண்டு விறகு சேர்ந்திருந்தால் இது ஆரோ பொறுக்கி வைத்தார்களென்று எடுக்காமல் ஒரு விறகாயிருந்தால் அதைமட்டும் எடுத்துச் சேர்த்துக்கொண்டுபோய் விற்று அதிலேவந்ததைக்கொண்டு ஜீவனம் பண்ணிக்கொண்டிருந்தார்கள். தெருவிலேகுப்பையிலேயிருக்கிற கந்தைகளை யெடுத்துக்கசக்கி மானசம்ரக்ஷணைக்குக் கட்டிக்கொண்டு யாரேனும்வேறொருவர் வஸ்திரங்கொடுத்தால் அதைக் கண்ணாலேகூடப் பார்க்கிறதில்லை.

இப்படியிருக்க ஒரு நாள் சிப்பியர் கடைக்கருகில் ஒரு கந்தைகிடக்கக்கண்டு அந்தக் கந்தையைவந்தெடுத்தார்கள். அதற்கு ஒரு சிப்பியன் இது சுவாமி நீவட்டிக்கு உதவுமே- விரக்தர்களென்று வேஷம்போட்டுத்திரிகிற இவர்கள் எனெடுக்கிறார்களென்று சொல்லஅந்தக்கந்தையை விட்டுஉலர்ந்த வெச்சிலிலையை யெடுத்துக் கட்டிக்கொண்டிருந்தார்கள். அனேகம்பேர் வயிராக்கிய சீலர்களாயிருந்தார்களானாலும் இவர்களுக்கு உவமானம் ஒருவரையும் சொல்லக்கூடாது. ஒருநாள் பங்காவென்கிற பெண் குளத்திற்குப்போய் ஸ்நானம்பண்ணிப் பூசைபண்ணுகிறபொழுது அங்கே நாமதேவருடைய பெண் துவைத்துக்கொண்டிருந்த புடைவை ஜலம் நாலுபக்கமும் தெறித்தபடியினாலே வஸ்திரஜலம் என்மேல் விழுகிறதேயென்று சொல்ல-நாமதேவருடையபெண் ஆமடி ஜாதியிலேகுயத்தியானாலும் ஆசாரம்மிகவும்பண்ணுகிறாய்-குலாசாரத்தைவிட்டுவிட்டுச் சுகமாக வீட்டுக்கு வீடு அலைகிறீர்களே- உன்னுடைய தகப்பன் பண்டரினாதனுக்கு பிரதிக்கினை பண்ணினபடி செய்யாமல் காமத்தையுடையவனாய் அவருக்கு வருத்தத்தைக் கொடுத்தானே நீங்கள் சமுசாரத்தைத் தள்ளினவர்களல்லவேயென்று சொல்ல- அப்போது பங்காவென்கிறபெண் மெய்தான் மெய்தான் உன்னுடைய தகப்பன் அழுது அழுது பக்தி சம்பாதித்தது ஊரெங்கும் தெறிந்திருக்கிறது. பின்னும் இந்தக்கலியுகத்திலே பவுத்தரூபமாயிருக்கிறச் சக்கரபாணியை உபத்திரவப்படுத்திப் பேசவைத்துப் போஜனம் பண்ணிவைத்தாரே-நிராலம்பனமான ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைஅவலம்பனம்பண்ணினாரே அப்படி யெங்கள் தகப்பன் ஒன்றும்பண்ணவில்லையே ஒரு பூனைக்குட்டியின் நிமித்தம் சமுசார இச்சையைத் துறந்துகாட்டிலேதனி விறகாயிருக்கிற

தைப்பொறுக்கிக்கொண்டுவந்து ஒருவருக்கும்உபத்திரவமில்லாமல்நிஷ்க படிகளாய்ஜீவனம்பண்ணிக்கொண்டிருக்கிறேமென்றுசொன்னாள். இவ் வசனத்தைக் கேட்டு அந்தப்பெண் துக்கத்தோடே வீட்டுக்குவந்து நாமதேவரோடே நடந்த விருத்தாந்தமெல்லாம் சொல்ல அவர்கேட்டு ஆச்சரியப்பட்டுக் கோவிலுக்குப்போய்ச் சக்கரபாணியைப் பிரார்த்தித் துச் சுவாமி ராக்காவென்கிற குயவன் சகாமியோ நிஷ்காமியோ வென்று கேட்க அப்போது பகவான் மந்தஹாசத்தோடே ராக்கா வென்கிற குயவனைப்போல நிஷ்காம நிதி இந்தப் பதினாலு லோகத் திலேயுங்கிடையாது என்று சொன்னார். அப்படியானால் சுவாமி பரீ க்ஷை காண்பிக்கவேண்டுமென்று நாமதேவர் பிரார்த்திக்க ருக்குமணி ரமணன் ருக்குமணிதேவியையும் நாமதேவரையுங் கூட்டிக்கொண்டு காட்டுக்குப்போய் அந்த ஆரண்ணியத்திலே ராக்காவென்கிற பக்தனும் அவனுடைய ஸ்திரீயும் பெண்ணும் தனிவிறகாய்த் தனக்குத்தானே விழுந்துகிடக்கிறதைப் பொறுக்கிகொண்டிருக்கிறதும் பூமியிலே நடக் கும்போது ஒரு ஜந்துவுக்கும் உபத்திரவமில்லாமல் மெல்லநடக்கிறதும் வாயிலே நாமஸ்மரணைபண்ணுகிறதுமாகிய இந்த அதிசயங்களை நாமதே வருக்கும் ருக்குமணிதேவிக்கும் காண்பித்து விட்டு நாமதேவரைப் பார்த்து நிஷ்காமியமாக இவர்களென்னை பஜிக்கிறத்தைப் பாரென்று சொன்னபொழுது நாமதேவர் ஏதாகிலும் ஒருநகையை அவர்கள் கண் முன்னே போட்டுப் பரீக்ஷைபார்க்க வேண்டுமென்றுசொன்னார். அப் போது ருக்குமணிதேவி தன் கையிலேயிருந்த அமூல்லியமான ரத் தின கஜித கங்கணத்தைக் கழற்றி அவர் விறகு பொறுக்குகிற விடத் திலே கொண்டுபோய் வைத்து அதின்பேரில் ஒரு விறகையும் வைத்து விட்டு மூன்றுபேரும் ஒருமரத்தடியிலே ஒளிந்து கொண்டிருந்தார் கள். ராக்காவும் அவன் பெண்சாதியும் விறகு பொறுக்கிக்கொண்டு வரும்போது அந்த கங்கணத்தின் மேலேயிருக்கிற விறகை ராக்காஎடுத் துக்கங்கணத்தையும் பார்த்து விட்டான், உடனே தன் ஸ்திரீக்குக் காண்பித்து இந்தக்காட்டிலே நிஷ்காமியமாய் நாம் ஜீவனம்பண்ண வேண்டுமென்றிருக்க இதற்கும் விகாதமாய் இது காணப்பட்டது என் று சொல்லிப்பொறுக்கின விறகெல்லாவற்றையும் போட்டுவிட்டு அந் தவனத்தையும் விட்டு அப்புறம்ஓடிப்போனார்கள். சுவானஸ்பரிசமான அன்னத்தைத்தள்ளிவிடுவது போலும்- பூமியிலே விழுந்த ஜலத்தைச் சாதக பக்ஷி அங்கீகரியாதது போலும்- புலியைக்கண்டு பிரஜைகள் ஓடுவதுபோலும் அந்த வனத்தை விட்டுவிட்டு ஓடிப்போய் விட்டார் கள். அப்போது நாமதேவர் மிகவும் ஆச்சரியப்பட்டு இப்படிக்கொத்த வைராக்கியமும் இப்படிக்கொத்த நிஷ்காமிய பஜனமும் எனக்கும் கிடை யாதென்றும் தன்னுடைய சமூசியம் போயிற்று என்றும் இப்படிக் கொத்தப் பக்தனுக்குத் தரிசனம் கொடுக்கவேண்டுமென்று சொல்ல

அப்போது பகவான் சதுர்ப்புஜராய்சாமளரூபராய்சங்குசக்கரபாணியுமாய் பீதாம்பரதாரியாய் கிரீடமகரகுண்டலதாரியாய் வனமாலிதரராய்ருக்குமணி சமேதராய் அவர்கள் மூன்றுபேருக்கும் தரிசனம்கொடுத்தார். உடனே அவர்கள் மூன்றுபேரும் ஓடிவந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்து ஸ்தோத்திரம் பண்ணி ஆனந்த பரவசர்களாய் நிற்கையில் பகவான் அந்த ராக்காவென்கிற குயவனை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கடாக்ஷம் பண்ணிவிட்டு அந்திரிசியமானார். ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணே நம: ஸ்ரீ வாசுதேவ ஜகத்திரய குரவே நம:.

# கோராகும்பார் என்னும் பக்தர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணே நம: கேளுங்கள் பாக்கியசாலிகளே பின்னையும் ஒரு குயவர் தெரடோகியென்கிற வூரிலே கோராகும்பார் என்கிறபெயரை உடையவராகயிருந்தார். அவர் மகாபிரேமளபக்தர் அவர் இல்லறத்திலிருந்து சாப்பிடுகிறபோதும் படுக்கிறபோதும் எழுந்திருக்கிறபோதும் உட்காருகிறபோதும் வேலைசெய்யும்பொழுதும் பகவத் ஸ்மரணையே பண்ணிக்கொண்டு சுகதுங்கங்களிலேயும் மானாபிமானங்களிலேயும் சமரசமுடையவராயிருப்பார். ராஜாவானாலும் ஏழையானாலும் எல்லாரையும்சமானமாகவேயெண்ணுவார். அப்படியிருந்துகாலம்கழித்துவருகையில்ஒருநாள்அவர் ஸ்திரீயானவள்குழந்தையை வாசலிலேவிட்டுவிட்டு ஜலம் கொண்டுவரக் குளத்துக்குப்போனாள். அப்போது மண்மிதித்துக்கொண்டிருந்த இந்தக் கோராகும்பாரென்கிறவருக்குப் பகவத்தியானத்திலே சித்தம் லயித்துப்போயிருந்தபடியால் குழந்தையானது தவழ்ந்துகொண்டு மண்ணோத்திலேவர அதையும்கூடச்சேர்த்து மிதித்துவிட்டுத்தியானத்தினாலேஆனந்த பரவசராய் ஸ்மரணைபண்ணிக் கொண்டிருந்து விட்டார். அப்படியிருக்க ஜலத்துக்குப்போன பெண்சாதிவந்துகுழந்தைக்குப் பால்கொடுக்குகிமித்தம் தேடிப்பார்த்துக் குழந்தையைக்காணமல் புருஷனிடத்தில் வந்தபோது அந்தக் குழந்தை மண்ணோடே இரத்தமும் மாம்சமும்மெலும்புமாய்க் கிடக்கிறதைக் கண்டு மார்பிலே அறைந்து அழுதுகொண்டு புருஷனைப் பார்த்து என்னவிபரீதம் பண்ணிவிட்டீர் பிராணநாதனே நானும்பிராணனைவிட்டுவிடுகிறேனென்றுபிரலாபிக்கிறபோது கொஞ்சம் தேகத்தில் ஸ்மரணை வந்து பெண்சாதியைப்பார்த்து என்னடி கொஞ்சமாகிலும் விசாரணைபண்ணாமலென்னுடைய தியானத்தைப் பங்கம் பண்ணின யென்னுடைய ஹிருதயத்திலே உட்கார்ந்திருந்த ருக்குமணிரமணனையும்துறத்திவிட்டாயென்றுகோபமாய்ச்சக்கரம் திருப்புகிற தடி

யை யெடுத்துக்கொண்டு அவளை அடிக்கப்போனார். அவள் என்னைவிரலால்தொட்டீரானால் ஸ்ரீ கிருஷ்ணன் பேரில் ஆணையிருக்கிறதென்று சொன்னாள். அந்தச் சத்தம் காதிலே கேட்டவுடனே ஒருபக்கத்திலே போய்காமஸ்மரணைபண்ணிக்கொண்டுஉட்கார்ந்துவிட்டார். அப்போது ஊராரெல்லாம் வந்து இதுவென்ன விபரீதம் இவன் பிள்ளையை மண்ணோடேபோட்டு மிதித்துவிட்டான் இனி யிவன் பிசாசாய்ப்போவானென்பர் சிலர். ஹரிபக்திபண்ணினால்அதினுடையமகிமை இப்படித்தானென்பார்சிலர். ஹரிபக்திபண்ணினால் தேகஸ்மரணைதெரியாதோவென்பார்சிலர். மதயானை தன்னைபபார்த்துக்குரைக்கும் நாய்களைச்சட்டைபண்ணாததுபோலும் சர்ப்பத்தினுடைய ஆரபாரங்களைக் கருடன் சட்டைபண்ணாததுபோலும் இப்படி சொன்னவார்த்தைகளில் ஒன்றையும் அவர்சட்டைபண்ணாமல் நாமஸ்மரணைபண்ணிக்கொண்டு இருந்துவிட்டார். இப்படிப் புருஷனும் பெண்சாதியும் இருபது நாள் வரையில் ஒருவரோடொருவர் பேசாமல் இருந்துவிட்டார்கள். ஸ்திரீயானவள் நமமுடைய புருஷனோடே நாம் பேசாமல் இருந்துவிட்டால் நாம் சம்சாரம் எப்படிப்பண்ணுகிறதென்று சொம்பிலே ஜலமெடுத்துக்கொண்டுபோதத்தை அலம்பவந்தாள். அப்போது குயவரானவர் மனைவியைப் பார்த்து நான் உன்னைத் தொடக்கூடாதென்று நீ கிருஷ்ணபகவான்பேரிலே ஆணையிட்டபடியால் என்னைத்தொடாதேயென்று சொல்லிக் கிழக்கே உதிக்கிற சூரியன் மேற்கே உதயமானாலும் அந்த விரதத்தைத் தள்ளமாட்டேனென்று சொன்னார். அப்போது இவள் திப்பிரமையாய்த் தாயார்தகப்பனிடத்திலே வந்து நடந்த விருத்தாந்தங்களைச்சொல்லி நானிப்படிச்சொன்னதினாலேயென்னைப்பரித்தியாகம்பண்ணிவிட்டார்.எங்கள்வமிசம் முழுகிப்போவதாயிருக்கிறபடியினாலே என் தங்கையாகியசின்னப் பெண்ணை என்புருஷனுக்குக்கலியாணம் பண்ணிக்கொடுக்க வேண்டுமென்று சொல்ல அவர்களும் சம்மதித்துக் கலியாணச் சாமான்களைச் சேகரம்பண்ணி உறவின்முறையார் யாவரையும் பிராமணர்களையும் அழைப்பித்து மங்களாஷ்டகத்தையும் சொல்லி கலியாண முடித்தார்கள். பின் நாலுநாள் பொறுத்துப் பெண்கொடுத்த குயவன் மூத்த பெண்ணைத்தள்ளியிருக்க இளையபெண்ணைக் கொடுத்தோமே ஒருவேளை இந்த இளையவள்மேலாசையால் மூத்தவளைத் தள்ளிவிடப்போகிறானென்று மருமகனை அழைப்பித்து உமக்கு நம்முடைய பெண்ணிரண்டுபேரையும் கொடுத்திருக்கிறேனே யிவர்களைச் சம்சாரத்தில் ஏற்றக்குறைச்சலில்லாமல் சரியாய் நடப்பித்துக்கொண்டு வரவேண்டும். இப்படிப்பண்ணாமல்போனால் கிருஷ்ண பகவான் பேரில் ஆணை யிருக்கிறதென்று சொன்னான். அந்தவார்த்தையைக்கோராகும்பார் கேட்டுத்தெய்வ கிருபை உண்டானால் தனக்குத் தானே இந்தப் பந்தம் விட்டுப்போகிறதற்கு எத்தனைநேரம்செல்லுமென்று எண்ணிக்கொண்டு நீங்கள்

சொன்னபடியே செய்கிறேனென்று சொல்லி விட்டு இந்த இரண்டுபே ருக்கும் அன்னவஸ்திரங்கள் பூஷணங்கள் சரியாய்க் கொடுத்துக்கொண் டு வந்தார். அப்படி நடந்துகொண்டுவரும்போது இரண்டு பெயரும் மிகச்சிந்தா க்ராந்தர்களாய் மூத்த ஸ்திரீயானவள் புருஷனைப் பார்த் து நான் தான் தேவரீருடைய மனசுக்கு ஒவ்வாமல் பாவியானேன் தங்கை யென்ன பாவம் பண்ணினாளென்று கேட்டதற்கு என்னுடைய மாமனாரானவர் சில நாளைக்குமுன் என்னையழைத்து உங்களிருவரையும் சரியாய்ப் பார்க்கச் சொல்லி கிருஷ்ண பகவான் பேரில் ஆணையிட்டு இருக்கிறார் அப்படி யிருக்க அந்த ஆணையைத் தள்ளக் கூடுமாவென்று சொன்னார். அதைக்கேட்டு இரண்டு ஸ்திரீயும் விசனமாய் அந்த வே ளையில் சும்மாவிருந்து ராத்திரி நித்திரையின்மேல இரண்டு ஸ்திரீகளும் இரண்டு பக்கத்திலேயும் படுத்துக்கொண்டிருந்து புருஷன்மெய்ம்மறந்த நித்திரையாயிருக்கும் சமயத்திலேயவர் இரண்டு கையையும் இரண்டு ஸ்திரீகளும் எடுத்து மார்பிலே வைத்துக்கொண்டு இதிலேயாகிலும் சித்தம் கலங்குகிறதோவென்று பார்த்தார்கள். ஒருக்ஷணிகமாத்திரத்தி லே நித்திரைதெளிந்து இவர்கள் என்னுடைய விரதத்தை அழிக் கும் நிமித்தம் இப்படிப் பண்ணினார்களென்று மனதிலே மிகவும் ஆயா சமடைந்து அந்தக் கையைவைக்கக்கூடாதென்றுதன் இரண்டு கையை யும் மணிக்கட்டுமட்டும்வெட்டிவிட்டார். அப்போது இந்தஇரண்டுஸ்திரீ களும் அழுதுகொண்டு நம்முடையவம்சம் வளரவேண்டுமென்று இரண் டாங்கலியாணம் பண்ணியும் நம்முடைய கதியிப்படி ஆயிற்றே யென்றும் தெய்வமானது இப்படிப் பண்ணினால் நாமென்னசெய்வோ மென்றும் கஷ்டப்பட்டார்கள். இதைப் பார்த்து ஏனிப்படிச் சிந் தனை பண்ணுகிறீர்கள். ருக்குமணிவரனான பகவான் நம்முடைய சிர சின்மேலிருக்க நமக்குக் கஷ்டப்படநேரிடுமோ காமதேனுவைப்போ லே தாயான தெய்வம் பிராப்தமாயிருக்கப் போஜனத்துக்கு ஏன் சிந் தை பண்ணவேண்டும், விட்டல நாமஸ்மரணை பண்ணிக்கொண்டிருந் தால் மனரோகமும் பவரோகமும் நிவர்த்தியாய்ப் போய்விடுமென்று சொல்லி அவர்களுக்குச் சமாதானம் பண்ணிவிட்டுத் தானும் நாமஸ் மரணை பண்ணிக்கொண்டிருந்தார்.

இப்படி யிருக்கிறபோது ஆடிமாதம் சுக்கில பக்ஷம் ஏகாதசிவரக் கோராகும்பாருக்குச் சந்தோஷம் பிறந்து தன் இரண்டு சமுசாரத்தை யும் அழைத்துக்கொண்டு பண்டரிபுரம் வந்துசேர்ந்துசந்திரபாகையிலே ஸ்நானம்செய்து புண்டலீக முனியைத் தரிசனம்பண்ணி க்ஷேத்திரத் தைப்பிரதக்ஷணம்செய்துவிட்டுமகாதுவாரத்துக்கு வந்துஇரண்டுஸ்தி ரீகளுடனேகூடச்சாஷ்டாங்கமாகச் சேவித்துப்பண்டரிநாதனை ஆலிங்க னம்பண்ணிக்கொண்டுசேத்பாவனையோடுவந்தனம்பண்ணிச்சபாமண்டப

த்திற்குமுன்னே துவஜஸ்தம்பத்தண்டையில்வந்திருந்தார்கள். நாமதேவ ர்தாளமத்தளவீணையுடனேகிர்த்தனம்செய்து ஆனந்தத்தோடுகீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கையில் ஸ்ரீகிருஷ்ணபரமாத்துமாவானபண்டரிநா தன் நாமதேவர் கண்ணுக்கு மாத்திரம் தரிசனம்கொடுத்துக்கொண்டு தானும் கீர்த்தனம் பண்ணுகிறார். நிவர்த்திதேவர்- ஞானதேவர்-சோ பானுதேவர்-சாவந்தன் முதலானமற்றப் பக்தர்கள் உட்கார்ந்துகொண் டு ஆநந்தத்தோடு கீர்த்தனம்பண்ணுகிறதைக் கேட்டுக்கொண்டிருக்கை யில்நாமதேவர் கையை உயரத்தூக்கிவிசிறிஎல்லாரையும் எழுந்திருந்து நிற்கும்படிசொல்ல அப்படியே யெல்லாரும் எழுந்திருந்து நின்றார்கள். அப்போது நாமதேவர் எல்லார் கைகளிலேயும்ஒவ்வொரு தாளங்களைக் கொடுக்க அவரவர்களும் நாமஸ்மரணை பண்ணிக்கொண்டு ஆனந்தபர வசர்களாயிருந்தார்கள். கோராகும்பார் என்கிற குயவர் இவைகளைப் பார்த்துத் தனக்குத் தாளம் போட்டு ஹரிகீர்த்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறதற்குக் கையில்லாமல் இவ்வாறு கைகூழங்கையாய்ப் போய்விட்டதேயென்று விசனப்பட்டுக்கொண்டிருக்க அப்போது பக வான் கடாக்ஷமுண்டாய் அந்தக்ஷணமேகைமுன்போலவந்துவிட்டது. உடனே தாளத்தைக்கையிலே வாங்கிக்கொண்டு கீர்த்தனம்பண்ணத் தலைப்பட்டார். அப்போது அங்கு வந்திருந்த பகவத் பக்தர்கள் எல் லாரும் பார்த்து ஆச்சரியப்பட்டுக்கொண்டிருக்க அந்தப் பெண்டுகள் இரண்டுபேரும் பார்த்துப் புருஷன் மனோரதத்தை நிறைவேறப்பண்ணி னீரேயெங்கள்மனோரதமும்நிறைவேறப்பண்ணவேண்டுமென்று கைகூப் பிக்கொண்டுசாஷ்டாங்கமாய்ச்சேவித்துக்கிருபாசமுத்திரா-ஜகதஜீவனு- பக்தவச்சலா - பாண்டுரங்காவென்று ஸ்தோத்திரம்பண்ணி நாங்களனு தைகள்எங்களிடத்திலே கிருபைபண்ணவேண்டுமென்று சொல்ல அப் போதுபகவான் அங்கேநிறைந்திருக்கும்பக்தகூட்டங்கள்முன்னேகோரா கும்பார் மண்மிதிக்கும்போதுகூட மிதித்துவிட்ட குழந்தையையெடுத் துக்கொண்டு ருக்குமணிதேவி சமேதராய்வந்து சகலமான பக்தர்களும் தடஸ்தமாய் பார்த்துக்கொண்டிருக்க அந்தக் குழந்தையை அதின்தாய் கையிலேகொடுத்தார். அவள் மகா சந்தோஷமுடையவளாய் வாங்கிக் கொண்டாள். அப்போது ருக்குமணிதேவிகோராகும்பாரென்கிற குயவ ரைப் பார்த்துஇன்றுமுதல்எங்கள்பேரிலேவைத்திருக்கிறஇரண்டு ஆணை யும்உனக்குச்சம்பந்தமில்லை. நீசுகமாய் இரண்டு ஸ்திரீகளையும் வைத்துக் கொண்டு சம்சாரம் பண்ணிக்கொண்டிருவென்று ஆக்கியாபித்தாள். இப் படிப் பீமராஜாகுமாரத்தியான ருக்குமணிதேவிசொல்லியவசனத்தைக் கேட்டுச் சகலரும் ஆச்சரியமடைந்து சந்தோஷப்பட்டார்கள். நாம தேவரும்அரிகீர்த்தனம்பண்ணிமங்களார்த்திபண்ணினார். இந்த அத்தியா யம்சம்பூரணம்.இந்தப்பதினேழாவது அத்தியாயத்தில் ராக்கா-கோராகும் பார்என்னும்பக்தர்களுடையசரித்திரங்களைச்சிரத்தையுடன்வாசித்தவர்

களுக்கும் சிரவணம் பண்ணினவர்களுக்கும் எம்பெருமான் பக்திவை ராக்கியங்களையுண்டாக்கித் தேஹாந்தியத்தில் அர்ச்சராதிமார்க்கமாய்ப் பரமபதத்துக்குக் கொண்டுபோய் நித்திய சூரிகளுடன் சேர்த்துக்கைங் கரிய சாம்பிராச்சியத்தை அடையப் பண்ணுவார். ஸ்ரீரங்கநாமனேநம: ஸ்ரீலெட்சுமீபதேநம:.

பதினெட்டாவது அத்தியாயம்.

## நாமதேவர் சற்குருவைச் சரணமடைந்த

## ...ரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிர்மநேணம: உலகத்தில் பக்தவிஜயமென் கிற சந்திரனுதித்த உடன் துவைதபேதமென்கிற இருளெல்லாம்போய் ஞானமாகிய நிலவுதோன்றி நவவிதபக்தியாகிய பயிர்தழைத்ததனால் சிலர் ஸ்ரீரவணமார்க்கத்தைக்கைக்கொண்டு நடந்தார்கள். சிலர் மனனவ ழியைப் பார்த்து நடந்தார்கள். சிலர் ஸ்மரணை பண்ணிக்கொண்டிருந் தார்கள். சிலர் கீர்த்தனமார்க்கத்திலேயிருந்து ஜடமூட அஞ்ஞானிகளை யும் கடைத்தேற்றிக்கொண்டிருந்தார்கள். சிலர் பகவானைப் பக்தியினால் சுவாதீனம்பண்ணிக்கொண்டிருந்தார்கள். சிலர் அவருடையபாதசேவை பண்ணிக் கொண்டிருந்தார்கள். சிலர் அர்ச்சனைகளைப் பண்ணிக்கொண் டிருந்தார்கள். சிலர் வந்தனமார்க்கங்களைப் பண்ணிக்கொண்டிருந்தார் கள். சிலர் தாசகைங்கரியங்களைச் செய்துகொண்டிருந்தாங்கள். இந்த ஒன்பது வித பத்தியும் தான் இம்மை மறுமை யிரண்டிலும் சகல சாம்பிராச்சியமும் கொடுப்பவை. இப்படிப்பட்ட இந்தக் கிரந்தத்தின் முன் அத்தியாயத்திலே பகவான் கோராகும்பருக்கு மறித்துப்போன குழந்தையை அழைப்பித்துக் கொடுத்து இரண்டு பெண்டுகளையும் வை த்துக்கொண்டு சம்சாரம் பண்ணச் சொல்லிக் கட்டளையிட்டபிற்பாடு கோராகும்பரானவர் இரண்டுகைகளையும் கூப்பிக்கொண்டு பக்தகூட் டங்களைப்பார்த்துச் சுவாமிகளே நீங்கள் எல்லாரும் என் வீட்டுக்கு வர வேண்டுமென்று மிகவும் பிரார்த்திக்க எல்லாரும் சம்மதித்து அந்தப்ப டியே அவர் வீட்டுக்குப் போனார்கள். வந்தவர்களுக்கு அவர் அர்க்கிய பாத்தியங்கள் கொடுத்துப் போஜனமும் பண்ணுவித்து உட்காரவைத் தார். அப்போது நிவர்த்திதேவர்- ஞானதேவர்- சோபானதேவர்- முக் தாபாயி- சாவந்தன்-நாமதேவர்முதலானபக்தகூட்டங்கள் ஆசனத்தின் பேரில் உட்கார்ந்திருக்க-அவர்களுக்குள்ளே ஞானதேவர் கோராகும் பாரைப்பார்த்து இந்தக் கடங்களைவரிசையாய் உட்காரவைத்தாயே ?

குயவனுனபடியினுலே வெந்தபாண்டமும் வேகாத பாண்டமும் நன்று யுனக்கு தெரியுமே-அதைப்பரீக்ஷை பார்த்துச் சொல்லென்று சொல்ல-அப்படியே கோராகும்பார்தட்டுப் பலகையை யெடுத்துக்கொண்டு நி வர்த்திதேவர்முதல் ஒவ்வொருவருடைய தலைமேலேயும கெட்டியாய் அடித்துக் கொண்டுவர எல்லாருமவுனமாயிருந்தார்கள். நாமதேவரிடம வருகிறபோது அவர் அப்பாவென்னையேன் அடிக்கவருகிறுயென்றுபயந் துசொல்ல உடனே அவர் ஞானதேவரைப்பார்த்து இந்தப் பாண்டந் தான் வேகாத பாண்டமென்று சொன்னுர். அதைக் கேட்டு எல்லா ரும் பளீரென்று சிரிக்க முக்தாபாயும் சிரித்து இந்தப் பாண்டம் வேகா தபாண்டமென்று உமக்கெப்படித் தெரிந்ததென்று கேட்டு நீ நல்ல பரீ க்ஷையுடையவனென்று சொல்லிச் சந்தோஷபட்டாள்.

அப்போது நாமதேவர்மனதிலே மிகுதியுஞ் சிந்தையுடையவராய் விரைவாயெழுந்திருந்து பண்டரிபுரத்துக் கோவிலுக்கு வந்து சுவாமிக் குச் சாஷ்டாங்கமாகச் சேவித்துக் கையை கூப்பிக்கொண்டு இரண்டு கண்களிலேயும் ஜலம்பெருகத் தேம்பித் தேம்பி அழுது சுவாமி நானின் றைக்கு மிகவும் அவமானப்பட்டேனென்று சொல்லப் - பகவானுனவர் சிரித்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உன்னையாரென்னசெய்தார்கள்- சங்கோசப்படாமல் சொல்லப்பா நாமதேவா உன்னுடைய நிஜாந்தரங் கம் எனக்குத் தெரியும் உனக்குச் சமானமான பிராணசகா எனக்கு வேறுகிடையாது. ஆகையால் என்னோடே உள்ளதைச் சொல்லென்று கேட்க-அப்போது நாமதேவர் கோராகும்பாரென்கிற குயவன் உம்மு டைய நிஜபக்தன் பக்தர்களை யெல்லாம் தன்னுடைய வீட்டுக்கு அ ழைத்துக்கொண்டுபோய்ப் போஜன முதலானவைகளைப் பண்ணுவித்த பிறகு எல்லாரும்உட்கார்ந்து கொண்டிருக்கிற சமயத்திலே ஞானதேவர் கோராகும்பனைப் பார்த்து இந்தக்குடங்களிலே யெந்தப் பாண்டம் வே காதது அதைப்பார்த்துச் சொல்லென்றுர். அப்படியே அந்தக் குயவன் தன் தட்டுப் பலகையைக் கையிலேயெடுத்துக்கொண்டு எல்லாருடைய தலையிலேயும் கெட்டியாயடித்துக்கொண்டு வந்தான். அவர்களெல் லாம் மவுனமாயிருந்தார்கள். என்னை அடிக்கவந்தபொழுது நான் பயந்து ஏனப்பா அடிக்கவருகிறுயென்று சொன்னேன். அப்போது அந்தக் குயவன் இது தான் வேகாத பாண்டமென்று சொன்னுன் எல்லாரும் சிரித்தார்கள் முக்தாபாயியும் எளனம்பண்ணினுள். இவைகளினுலே யெனக்கு மனது மிகவருத்தமாயெழுந்து தேவரீரண்டைக்கு வந்து விட்டேனென்று சொன்னுர். ஜகஜ்ஜீவனுனவன் கேட்டுச் சிரித்துக்கொ ண்டு அது மெய்தான் நீ சற்குருவைத்தேடிச் சரணமடைந்தால் நீயும் பக்குவமாவாயென்றுசொல்ல- நாமதேவர்மிகவும் உருகிப்போய்என்னு டைய துக்கத்தைத் தேவரீரிடத்தில் ஆற்றிக்கொள்ளுவோமென்று

வந்தால் நீரும் அப்படியே சொல்லிவிட்டீர் இனி லோகத்திலேயெ னக்கு ஆர்-ஆதரவு நீர் இப்படிக் கைவிட்டு விடலாமாவென்று சொல்லி விசனப்பட்டார். அப்பொழுது சுவாமி நாமதேவரைப் பார்த்துப் புஷ்பத்துக்கும் வாசனைக்கும் எப்படித் துவைதமில்லையோ அப்படிப்போல உன்னுடைய சித்தமும் என்னுடைய சித்தமும் துவைதமல்ல. நீ விசனப்படவேண்டாம். நீ சற்குருவைச் சரணமடைந்து துவைதத்தைக் கண்டித்துவிடென்று சொல்ல நாமதேவர் தேவாதிதேவா-பண்டரிநாதா- நீயே பிரத்தியக்ஷமாயெனக்குப் பிராப்தமாயிருக்கநான் வேறொருசற்குருவைத்தேடவேண்டுமோ-கரும்புசர்க்கரையாய்விளைந்தால் ஆலையைத்தேடுவார் உலகத்திலுண்டோவென்று சொன்னார். அதைக் கேட்டு ஸ்ரீ ஹரியானவர் நாமதேவா நான் ராமாவதாரத்தில்வசிஷ்டருக்குச் சரணம் புகுந்து ஆத்மஞானம் கேட்டேன். கிருஷ்ணாவதாரத்திலே சாந்தீபரிடத்திலே சரணம் புகுந்து பெற்றுக்கொண்டேன். ஆகையால் நீயும் ஒருசற்குருவைத் தேடிச்சரணம்புகுந்துதுவைதத்தைக்கண்டித்துவிட்டால் சாதுக்களிலே மானிதையாவாயென்றுசொல்லஅதைக் கேட்டு நாமதேவர் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சுவாமிநான் யாரைச் சரணம் புகுவேனென்று கேட்க-அதற்குச் சுவாமியானவர் விசோபாகேசர் சிவன் கோவிலிலே நித்திரை பண்ணிக்கொண்டிருக்கிறார் அவரைப்போலே சத்கியானிகள் லோகத்திலே கிடையாதாதலால் அவரைப்போய்ச் சரணமடைந்தாயேயானால்அவருனக்குக் கிருபை பண்ணி ஞானோபதேசம்செய்வாரென்றுசொல்ல-நாமதேவர்என்பிராணனுக்குப் பிராணனாயிருக்கிறஉம்மைநான்க்ஷணப்போதும்விட்டுப்பிரியமாட்டேன் உம்முடையதிருவடிசாக்ஷியென்றுசொல்ல-அதற்குச்சுவாமிநாமதேவா நீவிதிவிலக்குகளை அங்கீகாரம்பண்ணாதேபோனால்லோகத்தார்குருவை அலக்ஷியம் பண்ணிவிடுவார்கள். அது நிமித்தமும் உலோகத்தைக் காக்கு நிமித்தமும் நீ இதை அங்கீகரிக்கவேண்டுமென்று சொன்னார்.

அப்போது நாமதேவர் முன்னமே ஸ்ரீ கிருஷ்ண பரமாத்துமா உத்தவருக்குப் பாகவதத்திலேகாதசஸ்கந்தத்தில்சொல்லியிருக்கிறபடியே உபதேசம் பண்ணிப் பதரிகாச்சிரமத்திலேயிருக்கிற இருஷிகளையும் கண்டுவாருமென்று சொல்லி அனுப்புவிக்க அப்போது அவர்பகவானை விட்டுப்போகிறதற்கு எப்படிக் கஷ்டப்பட்டாரோ அப்படியே மகா கஷ்டப்பட்டார். அந்தவுத்தவரே கலியுகத்திலேநாமதேவராய்அவதாரம் பண்ணியிருக்கிறபடியினாலே இரண்டும்சமமாகஇருந்தது.அவ்விதமாகக்கஷ்டப்பட்டுக்கொண்டுபோய்நாகநாதர்கோவிலிலே விசோபாகேசரைவந்துபார்த்தார். அப்போது அவர் இரண்டுகாலையும்மகாலிங்கத்திபேரில் வைத்துக்கொண்டு நித்திரைபண்ணினபடியால் அவரைக்கண்டவுடனேயே நாமதேவருக்குஅசூயைதோன்றி ஜகஜ்ஜீவனன்நல்லகுருவைத்

தேஷியெடுத்தார். இவர் உன்மத்தத்தை அடைந்து சிவலிங்கத்தின் பேரில் காலைவைத்துக் கொண்டிருக்கிருரென்று எண்ணி இவரைப் பார்த்து நீர் சாது வென்று பேர் வைத்துக்கொண்டு என்ன விபரீதம் பண்ணுகிறீர், சாக்ஷாத் பார்வதிரமணன் சிரசிலே காலைவைத் துக்கொண்டு இருக்கிறீரே இது என்ன ஞானம். உம்முடைய பிர்ம ஞானம் எல்லாருக்கும் நன்ருய்த் தெரிகிறது என்றுசொல்ல-நாமதேவ ரைப் பார்த்து அவர் ஆ ஹா நித்திரையிலே தெரியாமல் தப்பிப்போ னேன் எனக்குச் சரீரம் மிகவும் பாரித்திருக்கிறபடியால் எழுந்திருக்க முடியவில்லை-நீசற்றே எனது காலைத்தூக்கி லிங்கமில்லாத விடத்திலே வைத்துவிடென்று சொல்ல இவரும் நல்லதென்று சந்நிதியிலேபோய்த் தன்கையினுலேஅவர்இரண்டுபாதத்தையும்தூக்கிஅப்புறம்வைக்கப்போ ஞர். அவ்விடமெல்லாம்லிங்காகாரமாய்த்தோன்றிற்று. அதன்மேல்எந்த பக்கத்தைப் பார்த்தாலும் அங்கேயெல்லாம் லிங்காகிருதியாயிருந்தபடி யால் ஆச்சரியமாய்ச் சகலமும் லிங்க உருவமாகக் காணப்படக் காரணம் யாதென்று யோஜிக்கையில் தானும் சிவமயமாய்த் தோற்றக் கண்டார். உடனே நாமதேவர் அவர் காலைவிட்டுவிட்டுச் சாஷ்டாங்க மாகச் சேவித்துத் தங்களுடைய பாததரிசனம் பெற்ற மாத்திரத்திலே அணு மாத்திரத்துக்குக் கூட நீக்க மில்லாமல் எங்கும் கைலாச நாதர் பரிபூரணமாயிருக்கிருரென்று சொல்ல- அவரைப்பார்த்து வீசோபா கேசர் ஓ வைஷ்ணவ சிகாமணியே சர்வபரிபூரணராய்-இப்படிப்பட்டவ ரென்று சொல்லக்கூடாதவராய் -நாலுவேதம் ஆறுசாஸ்திரபதினெண் புராணத்தினுலேயும் வர்ணித்து முடியாதவராய்- நிமிடீகரித்திருக்கிற சிவ ரூபத்தை அத்வயிதமென்று அறிந்துகொள்ளு-இந்த ஆனந்தத்தை நான் ஞானதேவருடைய தாசனுய் அவருடைய சரணுரவிந்தத்திலே சரணமடைந்து அடைந்தேனென்று சொல்ல நாமதேவருடைய சித் தம் அருச்சுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமா விஸ்வரூபம் காண்பித் த உடனே சித்தம் ஸ்திரப்பட்டதுபோல ஸ்திரப்பட்டுப் பின்னும் சாஷ் டாங்கமாய்ச் சேவித்தார். அப்போது வீசோபாகேசர் எழுந்திருந்து நாமதேவர் சிரசிலே அஸ்தத்தைவைத்து ஞானுபதேசம்பண்ணினுர். பிறகு ருக்குமணிவரனை நாமதேவர் தியானித்துப் பரிபூரணமாய்த் தரி சனம் பண்ணிவிட்டு சகல பக்தர்களுங்கூடி யிருக்கிற சபாமண்டபத் துக்குவந்தார். சுவாமி அந்தக்கூட்டத்திலேவந்த நாமதேவரைப் பார்த் து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு குரு உபதேசமான பிறகு என்னை யேன் விசாரியாமல் போய்விட்டாயென்று கேட்க இப்பொழுது எங் கும் பரிபூரணமாகத் தேவரீரை நான் காணுகிறேனென்று சொல்ல ஜகத்ஜீவனனுன பகவான் சந்தோஷமடைந்து சகல சாதுக்களையும் பார்த்து இப்போது நம்முடைய நாமதேவனை வேகாத பாண்டமென்று யாராவது சொல்லுவீர்களாவென்று கேட்டார். [illegible]

முதலிய பக்தர்கள் சிரித்துக்கொண்டு ஒன்றுஞ்சொல்லா திருந்து விட்டார்கள். ஸ்ரீ இராமச்சந்திரபரமகுரவேநம: ஸ்ரீ பாண்டுரங் காயநம:.

## பரிசபாகவதர் சரித்திரம்

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: பண்டரிபுரத்திலே எப்பொழுதும் பகவத்பஜனைசெய்துகொண்டு ஒருபக்தர் இருந்தார். அவருடைய பெண்சாதிபெயர் கமலாபாய். அவர்களிருவரும் ருக்குமணிதேவியை ஆராதித்துக்கொண்டுவருகையில் - ஒருநாள் அந்த அம்மன் பிரசன்னமாகி உனக்கு என்னவரம் வேண்டுமென்று பாகவதரைக்கேட்க அவர் அம்மா நான்சமுசார நிமித்தம் ஒருகாலத்திலும் கஷ்டப்படாமலிருக்கும்படி கிருபைசெய்ய வேண்டுமென்றுகேட்டார். அதற்கு ஒரு பரிசக்கல்லைக்கொடுத்து இதை நீ எந்தஇரும்பிலே பிடித்தாலும் அந்த இரும்பு தங்கமாய்ப்போமாதலால் அந்தத்தங்கத்தைக்கொண்டு ஜீவிக்கலாமென்று சொல்லிவிட்டு அதிரிசியமானாள். அவரும் அதைக்கொண்டுவந்து தன்ஸ்திரீயைப்பார்த்து அந்தப்பரிசக்கல்லின் பெருமையைச் சொல்லி இதை ஒருவருக்கும்சொல்லாமல் பத்திரமாய் வைத்துக்கொள் சாதுக்களுக்குத்தெரிந்தால் சிரிப்பார்களென்று சொல்லிவிட்டு அந்தரங்கத்திலே பொன்பண்ணி யிஷ்டான்னங்களைச் சாப்பிட்டு வெளியிலே தரித்திரதிசையையும் வைராக்கியத்தையும் காண்பித்துக் கொண்டிருந்தார். இதனால் அவருக்குப் பரிசபாகவதரென்று பெயருண்டாயிற்று. அப்படியிருக்கையில் ஒருநாள் கமலாபாய் சந்திரபாகைக் கரைக்குபோய் ஜலமெடுத்துக் கொண்டுவருகிறபோது - நாமதேவர் பெண்சாதியாகிய ராதாபாய் கண்டு இதோநானும் தண்ணீர் எடுத்துக் கொண்டுவருகிறேன் சற்றே நில்லென்று சொல்லித்தானும் தண்ணீர் எடுத்துக்கொண்டு இரண்டுபேரும் கிரகக்கிருத்தியங்களைப்பேசிக்கொண்டுவருகையில்- இந்தக்கமலாபாய் ராதாபாயியைப்பார்த்து ஏசகியே நீங்களேன் அன்னவஸ்திரத்துக்குக் கஷ்டப்படுகிறீர்களென்று கேட்க- என்னுடைய யஜமானன் வெட்கத்தை விட்டுவிட்டுப் பண்டரிநாதனே கதியென்று இருக்கிறார் - அவரைநம்பின நாங்களென்ன செய்யலாமென்று சொல்லக் - கமலாபாய் பண்டரிநாதனை யெந்நேரமும் தியானம் பண்ணிக்கொண்டிருக்கிறாரே அவரொன்றும் கொடுக்கவில்லையா - கனியைக்கொடுக்காதவிருக்ஷத்துக்குஎன்ஜலம்விட்டுசம்ரக்ஷணைபண்ண வேண்டும் அப்படி உங்கள் ஜீவனத்துக்கு கொடுக்காத நிக்ஷேகேசனை

காண்ணகாரியத்திற்குப் பஜனைபண்ணவேண்டும். என்னுடைய புருஷ ருக்குமணிதேவியை ஆராதித்துக் கொண்டிருக்க அந்த அம்மாள் பிரத் தியக்ஷமாகி ஒருபரிசக்கல்லைக் கொடுத்தாள் - அதைவைத்துக்கொண்டு நாங்கள் தங்கம்பண்ணிக் காலக்ஷேபம்பண்ணிக்கொண்டிருக்கிறோமென் று சொன்னாள். உடனே ராதாபாய் அந்தக்கல்லு எப்படியிருக்கும் அதை யெனக்குக் காண்பியென்றுசொன்னதற்கு என்வீட்டுக்குவா தால் அதை உனக்குக் காட்டுகிறேனென்றுசொன்னாள். அப்படியே ராதாபாய் தன்வீட்டுக்குப்போய்த் தண்ணீர்குடத்தை யிறக்கிவிட்டுக் கமலாபாய் வீட்டுக்குவந்தாள். கமலாபாய்அந்தக் கல்லை ராதாபாய்க் கையிலே கொடுத்துச் சுறுக்கிலே உன் வீட்டுக்குப்போய் உனக்கு வேண்டியமட்டும் இரும்பிலே காட்டித் தங்கம் பண்ணிக்கொண்டு இந்தப் பரிசக்கல்லைக் கொண்டுவந்து என்னுடையகையிலே கொடுத்து விடு. இந்தச்செய்தியைஉன்புருஷனோடேசொல்லாதேயென் றுசொல்ல- அந்தப்படியே ராதாபாய் வீட்டுக்குப்போய்த் தனக்கு வேண்டிய தங் கம் பண்ணிக்கொண்டு சாமான்கள் வாங்கிச்சமயல் பண்ணிக்கொண்டி ருந்தாள்.

அப்பொழுது நாமதேவர்வந்து இதேது சாமான்கள்- எங்கேயிருந் து கொண்டுவந்தாய் உள்ளதைச்சொன்னால் நான் சாப்பிடுவேன் இல் லாவிட்டால் சாப்பிடமாட்டேனென்று சொன்னார். அப்போது ராதா பாய் நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் சொல்லக் கேட்டு அந்தக்கல் லைப் பார்க்கிறேன் கொண்டுவாவென்று சொல்லி வாங்கிக்கொண்டு சந்திரபாகைக் கரைக்கு போய் அந்தக் கல்லை மடுவிலே எறிந்து விட்டுத் தன் பாட்டுக்குத்தான் கிருஷ்ணநாமங்களை உச்சரித்துக்கொண் டு சௌஸ்தமாயிருந்து விட்டார். அப்போது ராதாபாய் ஆனவள் கமலாபாய் வந்து அந்தப் பரிசக்கல்லைக்கேட்பாளே அவளுக்கு எங்கே யிருந்து கொடுக்கபோகிறோமென்று அழுது கொண்டு விசனத்தோடே இருந்தாள். பரிசபாகவதரானவர் வீட்டுக்குவந்து பரிசக்கல்லைப் பார்க்க அந்தக் கல்லைக்காணுமல் எங்கேயென்று தன் பெண்சாதியைக் கேட்க அதற்கவளதை நாமதேவர்பெண்சாதி ராதாபாய்க்கு க்ஷணநேரத்துக்கு இரவலாய்க் கொடுத்தேன் இப்போது கொண்டு வந்து கொடுத்து விடு வாள் என்று சொன்னாள். அது கேட்டு அடிபயித்தியகாரி நீ யிப்படி மோசம்போவாயென்று எனக்கு அப்பொழுதே தெரியும் ஆயினும் என் புத்திமோசத்தால் உன்கையிலே கொடுத்தேன் அதைச்சொல்லுவதி னால் பயனில்லை நீ இப்போது சீக்கிரமாகப் போய் அந்தக்கல்லைவாங்கிக் கொண்டுவாவென்று சொன்னார். அப்படியே வந்து ராதாபாயைக் கேட் க அழுது கொண்டிருந்த அவள் இவளையுங்கூட அழைத்துக்கொண்டு தன் புருஷனண்டையில் வந்து அந்தக் கல்லைகொடுமென்றுகேட்டாள்.

அதற்கு நாமதேவர் அதை அப்போதுதானே சந்திரபாகை மடுவிலே போட்டுவிட்டேன் அதில் விழுந்து கிடக்குமென்று சொன்னபடியால் இரண்டு ஸ்திரீகளும் அழுத்தலைப்பட்டார்கள்.

அப்பொழுது போகிறவர்கள் வருகிறவர்கள் இது என்ன ஆச்சரியம் உடைமைக்காரன் வந்து உடைமைகேட்டால் கொடுத்துவிடாமல் இப்படி வேஷம்போட்டுக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறரென்றும்- சிலர் வைஷ்ணவதாசனுக்கு இந்தக் கல்லுஆசையேன்என்று எறிந்துவிட்டாரென்றும்- சொல்லிக் கொண்டிருக்க அந்தப் பரிசபாகவதர் இந்தச் செய்தியைக் கேட்டு ஓடிவந்து நாமதேவரைப் பார்த்து நாமதேவரே என்குடியைக்கெடுத்தீரே யென் குடியைத் துன்ப சமுத்திரத்தில் முழுகடித்துவிட்டீரே நீர் விரக்தரென்று பேர்வைத்துக்கொண்டிருக்கிறபடியால் என் பரிசக்கல்லைவைத்துக்கொண்டு மடுவிலே எறிந்துவிட்டேனென்று பொய் சொல்லல்தகாதுஇது உமக்கு நலமல்ல என்று கல்லைக் கொண்டுவந்துகொடுமென்று சொல்ல-அவர் நீ வைராக்கிய வேஷம் போட்டுக் கொண்டிருக்கிறாய் உனக்கு ஏன் இந்தக்கல்லு உனக்குக் கல்லுவேண்டுமென்றால் மடுவிலே கிடக்கிறது எடுத்துக் கொள்ளென்றுசொல்ல இவர் எனக்கதுதெரியாது-நீரேஎடுத்துக் கொடுமென்று சொன்னபொழுது நாமதேவர் சந்திரபாகையில் இறங்கிக் கைநிரம்பக் கல்லெடுத்துக் கொண்டுவந்து இதிலே உன்னுடைய கல்லெதுவோ அதையெடுத்துக் கொள்ளென்று சொன்னார். அந்தக் கல்லைப் பார்க்கிறபோது அவைகளெல்லாம் தங்கம்பண்ணுகின்றனவாயிருந்தன. அதைப் பார்த்து எல்லாரும் ஆச்சரியப்பட்டு பகவத் பக்தனுக்கு ஓடும் பொன்னும் சரி ஆகையால் நாமதேவருக்குத் தங்கம் செய்கிற பரிசனக்கல்லும் தெருவிலேயிருக்கிற பருக்கைக் கல்லுமொன்றா யிருந்ததென்று பேசிக்கொண்டார்கள். இந்தப் பிரபாவத்தைப் பார்த்தவுடன் பரிசபாகவதருக்குச் சொல்லி முடியாத சந்தோஷமுண்டானதுமன்றி ஞானம் பிறந்து நாமதேவரை ஸ்தோத்திரம் பண்ணினார். அப்போது நாமதேவர் அவருக்கு அனுக்கிரகம் பண்ண அவர் ஆத்மகியானத்தை யறிந்து மிகவும் திருப்தியடைந்து அந்தக்கல்லுகளெல்லாவற்றையும் திரும்பவும் சந்திரபாகையிலேயே போட்டுவிட்டு நாமகோர்ஜ்ஜனை பண்ணிக்கொண்டு ஆனந்தமாக விருந்தார். இந்த அத்தியாயம் சம்பூரணம்-இதில் சொல்லியிருக்கிற இரண்டு சரித்திரங்களையும்சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் ஞானவைராக்கிய சீலர்களாய் உலகப்பற்றுகளையெல்லாம் விட்டு நீங்கிப் பண்டரிநாதன் திருவடியையெப்பொழுதும்சேவித்துக்கொண்டிருக்கும்படியான பாக்கியத்தை யடைவார்கள். ஸ்ரீ பாண்டுரங்காயநம: ஸ்ரீ ரங்கதாமனேநம:.

## பத்தொன்பதாவது அத்தியாயம்.

# ஜகமித்திர நாகநாதர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரப் பரப்பிரமணேநம: கேளுங்கள் பாக்கியசாலிக ளே தாயானவள் பாலை ஊட்டிச் சிசுக்களை ரக்ஷிப்பதுபோல அடியார் களை ரக்ஷிக்கும் பொருட்டு இந்தப் பக்தவிஜயமென்கிற கிரந்தமானது ஸ்ரீமந்நாராயணனால் கொடுக்கப்பட்டதாதலாலிதைச் சிரவணம்பண்ணி னவர்கள் சகலசாம்பிராச்சியத்தையு மடைவார்கள். வைத்திநாதமென் கிற வூரிலே பிராமணகுலத்தில் பிறந்து சாந்தமுதலிய எல்லாநற்குணங் களுமுடையவராய்ச் சிறந்த வைஷ்ணவராய் நாகநாதர்என்னும் பெயரு டன்ஒருவர்இருந்தார். அவர்சமுசாரத்தில்குடும்பத்தோடே இருந்து-ஊ ரிலே உஞ்சுவிர்த்திபண்ணிக்கொண்டு -ராத்திரியும் பகலும் கீர்த்தனங்க ளைப்பண்ணிக்கொண்டுவருவார். அந்தவூரிலே இருக்கிற ஜனங்கள்எல் லாம் இவருடைய கீர்த்தனங்களை வெகுபிரியத்தோடே கேட்டு ஆச்சரி யப்பட்டு இவர்சாக்ஷாத் பாண்டுரங்கனுடைய அவதாரமென்று கொண் டாடிக்கொண்டிருந்தார்கள். ஆதலால் இவருக்கு ஜகமித்திர நாகநாத ரென்றுபெயருண்டாயிற்று. இப்படியிருக்கையில் அந்தவூரிலே வாசம் பண்ணிக்கொண்டிருந்த சிலதுஷ்டர்கள் கல்பகவிருக்ஷத்தைப்பார்த்து ஈச்சமரம் அசூயைப்பட்டதுபோல - இவரிடத்தில் அசூயையாகி - நா னாவித அவசப்தங்களைப் பேசினார்கள். அவர்களில் ஒருதுஷ்டன் பாதி ராத்திரியிலே ஜகமித்திர நாகநாதர் சமுசாரத்துடனே தன்வீட்டில் நித் திரை பண்ணிக்கொண்டிருக்கையில் அவ்வீட்டிலே நெருப்பைவைத்து விட்டான். வீடுபற்றிக்கொண் டெங்குஞ்சுற்றியெரிகிறபோது ஜகமித் திரர்விழித்துக்கொண்டு மகாசிந்தையுடையவராய்ப் பண்டரிநாதனைத் தியானித்துக் கொண்டுசுவாமி உன்னைத்தவிர இந்தச்சமயத்திலே ர க்ஷிக்கிறவர்க ளாரிருக்கிறார்கள். பாண்டவர்கள் அரக்குமாளிகையிலே அகப்பட்டபோது ரக்ஷித்தாயே - பிரகலாதரை அக்கினிக்குண்டத்தி லே இருந்தபொழுது ரக்ஷித்தாயே - காட்டுத்தீயிலே அகப்பட்டுக் கொண்டமானை ரக்ஷித்தாயே - அப்படிப்போல இந்தச் சமயத்திலே என்னை ரக்ஷிக்கவேண்டுமென்று சொன்ன வசனங்கள் பண்டரிநாதன் காதிலே கேட்டவுடனே-சுதரிசனத்தைக் கையிலே பிடித்துக்கொண்டு இவரண்டையில் வந்து தீமைவராது பார்த்துக்கொண்டிருந்தார். வீடுபற் றிக்கொண்டுபிர்மாண்டமாயெறிகிறதை வூரிலே இருக்கிற ஜனங்கள் ஓடி வந்து வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கையில் பக்தர்களெல்லாரும்ஆக்

குரோஷமாய் இந்த வைஷ்ணவ சிகாமணியானஇவர் வீட்டில் எவன் நெருப்புப்போட்டவன்-இந்த ஆபத்தில் பண்டரிநாதன் ஏன்வந்து காப்பாற்றவில்லையென்று விசனப்பட்டார்கள். துஷ்டர்களனைவரும் சந்தோஷப பட்டார்கள், இப்படியிருக்க ராத்திரிமுழுவதும் வீடானது வெந்து-ஒரு திரணங்கூட உள்ளேவிழாமல்- அந்த அக்கினியும் வெந்த சாம்பலும் அப்படித்தானே மேலுக்குமேலாய் ஆகாசமார்க்கத்திலே பறந்துபோக அந்தவைஷ்ணவ சிகாமணியானவர் தம்குழந்தைகளுடனே படுத்து நித்திரைபண்ணிக்கொண்டிருந்தபடியே ஒருஉபத்திரவமுமில்லாமல்சுகமேயிருந்தார்.இதைக்கண்டு பக்தர்களெல்லாம் பண்டரிநாதனைப்போல தெய்வமும் - பீமாநதி சந்திரபாகையைப்போல தீர்த்தமும் - பண்டரிபுரத்தைப்போல க்ஷேத்திரமும் - எங்குமில்லை யென்றும் கார்த்திகை மாதம் சுக்கிலபட்சம் ஏகாதசி காலத்தில் பண்டரிபுரத்திலே பக்தகூட்டங்களோடு வனமாலியான பகவான் ஆனந்தபரிதராய் நானாவித லீலைகளைப் பண்ணிக்கொண்டிருக்கிற அதிசயத்தை வர்ணிக்க யாரால் முடியுமென்றும் சொல்லிச்சந்தோஷப்பட்டார்கள். அப்போது நிந்தையர்களனைவருக்கும் விவேகம் பிறந்து நாம் புத்தியில்லாமல் அபசாரப்பட்டோமென்று எண்ணி வருந்திவந்து இவரைச்சரணமடைந்தார்கள். அந்தக் கிராமத்தார்களனைவரும் இவரிடத்திலே சிரத்தையாய்ச்சுவாமி உங்கள் ஜீவனத்துக்குத்தக்கபடியாய் ஏதாகிலும் பூமிமானியம்விட்டு ஏற்பாடுசெய்ய வேண்டுமென்று அபேக்ஷிக்கிறோமாதலால் - தேவரீரதைத்தயவுபண்ணி அங்கீகரிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்கிவர் எனக்கென்னலாபத்துக்கு இந்தப்பந்தம் - நீங்களொன்றும் கொடுக்கவேண்டாம்- பக்ஷியானது பசியெடுத்தால் கண்டகனிகளைச் சாப்பிட்டுக் காட்டுக்குளத்தின்ஜலத்தைப் பானம்பண்ணி யதேச்சையாய்த்திரிவதுபோல - உஞ்சவிர்த்திபண்ணி அதிலே கிடைத்ததைக் கொண்டு திருப்தி யடைந்து பாண்டுரங்கனை ஸ்மரித்துக்கொண்டிருக்கிறதே போதுமென்றுசொல்ல-அவ்வசனத்தைக் கேட்டுக் கிராமத்தார் நாங்கள் தேவரீருக்கென்று பத்துவேலி நிலம் நியமித்துவிட்டோம் - அந்தநிலத்தில்என்னபலன்வருமோஅது தர்மத்துக்குநடக்கட்டுமென்று சொல்லியிவர்பேராலே சாசனமும்பண்ணி அந்தக்கிராமத்துக்கு யிவர் பெயரைவைத்து அதில் வந்தபலனைத் தர்மம் பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

இப்படி நடந்துவருகிறபோது அந்தகிராமத்துக்குவேறே ஒரு அதிகாரிவந்தான், அவன்சகலமும் விசாரித்துக்கொண்டு இவர்பேராலிருக்கிற சர்வமானியத்தை யெடுத்துவிட்டான். உடனே அந்தக்கிராமத்தார் ஒன்றாகச்சேர்ந்து அந்தஅதிகாரியிடம்போய் அய்யா அவர்மஹாபெரியவர்- பகவத்பக்தர் - அவர் ஒன்றும் அபேக்ஷிக்கவில்லை - நாங்களாயவர்

பேராலே மானியம்செய்து அதிலிருந்துவரும்பலனைக்கொண்டு தர்மம் பண்ணுகிறோமாதலாலதைமாற்றக்கூடாதென்றார்கள். அதற்குஅதிகாரி அப்படியானல் அவரை அழைத்துக்கொண்டு வாருங்கள் பார்ப்போமென்று சொன்னபடியால் அவரை அழைத்துக் கொண்டுபோய்விட்டார்கள். அப்போது அவன் இவரைப் பார்த்தவுடன் உம்முடைய பேரென்னவென்று கேட்க - வென்னுடைய பேர் ஜகமித்திரன் என்று சொன்னார். அதற்கு அந்த அதிகாரிமதத்துவேஷியான துலுக்கனை படியினாலே யிவரை அவமானம்பண்ண நினைத்து நீ ஜகமித்திரனானல்புலிக்கும் சினேகனாயிருக்கவேண்டுமேயெனக்குக்குலதெய்வம் புலிவகை- அதற்கு இப்பொழுது பூசைபண்ண வேண்டியதாயிருக்கிறபடியால் நீ போய்ஒரு வேங்கைப்புலியைச்சாயங்காலத்திற்குள்ளேபிடித்துக்கொண்டுவா அப்படிக்கொண்டுவராவிட்டால் இந்தசருவமானியம் உன்னுடைய பேராலே யிருக்கிறபடியினாலே உனக்குப்பண்ணிக்கொடுத்த நாள்முதல் நாளதுவரைக்கும் அந்தப்பலனுக்குண்டான பணத்தை வதைத்துவாங்கிவிடுவேன் - கொண்டுவந்தால் உண்மையாக ஜகமித்திரன்தானென்று சொல்லுகிறேனென்றான். அதற்கு ஒத்துக்கொண்டு இவர் ஆரண்ணியத்துக்குப் போய்ப் பாண்டுரங்கனைத் தியானம் பண்ணி ஜய ஜய அனாதபந்து- கருணாசாகரா- கமலநேத்திரா- பதிதபாவனா-விசுவம்பரா- தினைத்தாரா - விஸ்வ பாலகா வென்று ஸ்தோத்திரம் பண்ணுகிறபோது - பண்டரிநாதன் பிர்மாண்ட வேங்கைப்புலி ரூபமாய்ப் பயங்கரமாய் வந்து நின்றார். இவர் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து நானாவிதமாய்ஸ்தோத்திரம் பண்ணி ஊரிலே ஒரு புது அதிகாரி வந்து இருக்கிறான் அவனுக்குக் குலதெய்வம் புலியாம்- அந்தப்புலியை யின்றைக்குப் பூசைபண்ணவேண்டுமாம்- அதைக்கொண்டு வரும்படி எனக்கு மிகவும் கண்டிப்பாய்ச் சொல்லியிருக்கிறானென்றுசொல்லிச்சாந்தரூபமாய்வந்து அவன்பூசையை வாங்கிக்கொண்டு அவனைக் காப்பாற்றவேண்டுமென்று சொன்னார். அப்போது பண்டரிநாதன் சம்மதித்து உன்னுடைய அங்கவஸ்திரத்தை என்கழுத்திலே போட்டு முறுக்கிப் பிடித்துப் பட்டணத்துக்கு இழுத்துக் கொண்டுபோவென்று சொல்ல- அந்தப்படியே ஜகமித்திரர் புலியை யிழுத்துக்கொண்டு பட்டணத்துக்குச் சமீபமாய் வரும்போது அவ்விடத்திலே யிருந்த மாடுகள் மனுஷர்கள் எல்லாரும் கோட்டைக்குள்ளே ஓடிப்போய் அவ்விடத்திலே யிருந்த ஜனங்களோடே ஜகமித்திரரானவர்பிர்மாண்டமாக ஒரு வேங்கைப்புலியையிழுத்துக்கொண்டுவருகிறாரென்றுவாய் குளறிக்கொண்டுசொல்லஅதைக்கேட்டு அங்கிருந்த சிலர் ஊருக்குளன்னமோ அனர்த்தம்வந்ததென்றார்கள் சிலர் இது என்னமாயம்இவர் இப்படிப்பட்டவேங்கைப்புலியைப் பிடித்துக்கொண்டு வருகிறாரென்றார்கள் - சிலர் இதுவென்ன அதிசயமா பண்டரிநாதன் இவரிடத்திலே பிரத்தியக்ஷமா யிருக்கும்போது எந்த

அதிசயந்தான் காட்டமுடியாதென்றார்கள். இப்படி நானாவிதமாய்ப் பேசிக் கொண்டிருக்கையில் சில ஜனங்கள் தலை விரிகோலமாய் இதோ புலி வந்துவிட்டதென்று சொல்லி ஓடி வருகிறதைக் கண்டு அவரவர் வீட்டுக்குள்ளேபோய் கதவைச்சாத்திக் கொண்டார்கள். சிலர் கோட்டைமேலேயும் சிலர்கோபுரங்கள்மேலேயும் சிலர்உப்பரிகை மேலேயும் ஏறிக்கொண்டு பார்த்தார்கள். பக்தர்களாயுஞ் சாதுக்களாயு மிருக்கிற புண்ணியவான்களுக்குப் பண்டரிநாதன் சவுமியராயும் திவ் வியமங்களமூர்த்தியாயும் தோற்றினபடியால் ஜகமித்திர நாகநாதர் ஒரு பிர்மாண்டமான புலியையிழுத்துக்கொண்டு வருகிறாரென்று சொன்ன பொழுது அவர்களுள்சிலர் அங்கேவருகிறதுசக்கரபாணியாகிய பகவான் புலியல்லவென்றுசொன்னார்கள்.

இப்படியிருக்கையில் புது அதிகாரியானவன் இந்தச்செய்தியைக் கேட்டுக்கோட்டைவாசல்களைச் சாத்திவிடச்சொல்லித் தானும்பயந்து ஒருவீட்டிலேபுகுந்துகதவுகளைச் சாத்திக்கொண்டிருந்தான். அப்போது சிலர் இந்தஅதிகாரியண்டையில் ஓடிவந்து கார்த்த வீரியார்ச்சுனனால் சகல க்ஷத்திரியர்களும்மடிந்ததுபோலவும்-காட்டிலேஒரு மூங்கிலினால் வனமெல்லாமழிந்ததுபோலவும் உன்னால்கிராமத்திலே இருக்கிறவருக் கெல்லாம் அனர்த்தம்வந்ததென்றுசொல்ல - அந்த வார்த்தையைக் கேட்டுமிகவும்பீதியாய் ஒரு சிறு அறைக்குள்ளே தன்குடும்பத்துடனே போய்க் கதவைச்சாத்திக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அப்போது ஜகமித்திரரானவர் புலியை இழுத்துக் கொண்டு கோட்டைவாசல்படி யண்டையில்வந்து கதவுசார்த்தி யிருந்ததைப்பார்த்து ஆச்சரியப்பட்டு நிற்கையில் வியாக்கிர ரூபமான பகவான் கதவை ஒரு கையினாலே அறையக்கதவு தூள் தூளாய்ப் போய்விட்டது. அப்போது ஜகமித்திர நாகநாதர் உள்ளேநுழைந்து ஊரிலேயிருக்கிற பிராமணர்கள் பீதிய டைந்திருக்கிறதைப்பார்த்து நீங்களேன் பயப்படுகிறீர்கள் எப்போதும் போலேசுகமாயிருங்கள். அந்தத் துலுக்கன் பூசைபண்ணஒருபுலிகொண் டுவரவேண்டுமென்றபடியினாலேகொண்டுவந்தேனென்று எல்லாருக்கும் சமாதானமாய்ச்சொல்லி அந்தஅதிகாரிவீட்டிலேவந்து தெருக்கதவைமு றித்துவிட்டுவாசலிலேபோய்உங்களுக்குப் புலி குலதெய்வமென்றும் பூ சைபண்ணஒன்றுகொண்டுவாவென்றும்சொன்னபடிகொண்டுவந்தேன். இதோ உங்கள்குலதெய்வம் வந்துநிற்கிறது- நீசொன்னபடி வந்துபூஜை பண்ணாமல் ஏன்கதவைச் சாத்திக்கொண்டிருக்கிறாய்- தனக்குத்தா னே உன்குலதெய்வம்வந்து காத்திருக்கநீபயந்துகதவைச்சார்த்திகொண் டு இருத்தலேன்- அஷ்டாங்கயோகம் அசுவமேதயாகஎக்கியங்களாலே யும் அகப்படாதவன் வேதாந்தவேதியன் சகலவேதசாஸ்திர ஆகமபுரா ணங்களினாலேயும்வர்ணித்துமுடியாதவன்பண்டரிநாதன் தெய்வீகமான

புலியா பிதோ உன்பாக்கியவசத்தினாலே வந்தான் பூசை பண்ணென்று சொல்ல-அவன் கதவுஇடுக்கினாலே யெட்டிப்பார்த்து மெத்தவும்பயந்து மூலையிலேபோய்ப் பதுங்கிக்கொண்டான். அப்போது அந்தப்புலியானது ஒரு கோஷம் செய்து ஒரு அறைஅறைந்தது- அதைக்கேட்டு அவன் பயந்துமூர்ச்சையாய்விழுந்துவிட்டான். அப்போது சகலரும் காண படார ன் தன் கையிலே அகப்பட்டபாம்பை ஆட்டுவிப்பதுபோலும் குரங் காட்டி குரங்கை ஆட்டுவிப்பதுபோலும் ஜகமித்திரரான பக்தன் ஆட்டு விக்க அவர்கையிலேஅகப்பட்டுஆடிக்கொண்டிருக்கிறபகவான் அவரைப் பார்த்துஉத்தரவுகொடுத்தால்உள்ளேபோய்அந்தத்துஷ்டனைப்பக்ஷித்து விட்டு வருகிறேனென்று சொல்ல - ஜகமித்திரர் சற்றேபொருத்துக் கொள்ளும் ஆர்ப்பாடம் பண்ணாதேயும் என்று சொன்னார். இதை அந்தத் துலுக்கன் கேட்டுப் பெண்சாதியைக் கட்டிக்கொண்டு அழுதான். பிற்பாடு பெண்சாதி நீ யிங்கேயிருந்தால் புலி உள்ளேவரும் - உன்னால் என்குழந்தைகளும் இறந்து போவார்கள் - நீ விருத்தாப்பியமா யிருக் கிறாய் - எத்தனைநாளிருந்தாலும் சாகவேண்டும் - நீ வெளியிலே போ னால் குழந்தைகள்தப்புவார்கள் நீ இப்பொழுதே போவென்றுசொல்ல- அந்தச் சத்தத்தை வாசலிலே யிருக்கிற ஜகமித்திரரும்வெளியிலேயிருக் கிற ஜனங்களும்கேட்டுக் கலீரென்று சிரித்தார்கள். பிறகு கதவைத்திறந் துகொண்டு வெளியிலே வந்து தூரநின்று ஜகமித்திரருக்குச் சாஷ் டாங்கமாய்ச் சேவித்துத் தீனதயாளு முன்னே தோன்றாமல் துஷ்ட புத்தியினால் சொன்ன வார்த்தைகளை மனதிலேவையாமல் க்ஷமைபண் ணிக்காப்பாற்றவேண்டும் தேவரீருடையபிரபாவத்தை அறியாமல்போ னேன். ஜகமித்திரரென்கிற பேர் உமக்கேதகும் இப்போது எனக்கு ஜீவதானம் பண்ணிக் காப்பாற்றவேண்டுமென்று தீனவார்த்தையாய்ச் சொல்ல - ஜகமித்திரருக்குத் தயவுவந்து நல்லது இனிமேல் இப்படி அக்கிரமங்களைப் பண்ணாமல்பெரியவர்களைப் பூசைபண்ணிக்கொண்டும் விட்டலநாமஸ்மரணை பண்ணிக்கொண்டும் இந்தவூரிலே யிருக்கிற ஜனங் களைச் சம்ரக்ஷணை பண்ணிக்கொண்டும் இருவென்றுசொல்லி விட்டுப்பு லி உருவமுடையசகலஜீவாந்தரியாமியானபகவானைக் கூட்டிக்கொண்டு வனத்திற்குப்போய் புலியின்கழுத்திலே யிருக்கிற வஸ்திரத்தை வாங்கி னார். உடனே சங்குசக்கர கதாகட்ககோதண்டதரராய்த் தாளிதளசியா மளராய்க் கிரீடமகரகுண்டலதாரியாய் பீதாம்பரதாரியாய் திவ்வியமங் கள ரூபத்தோடே ஜகமித்திரரை யெடுத்து மார்போடணைத்துக் கொண்டு உடம்பைத்தடவிக்கொடுத்து நீ யெப்பொழுதும் என்னுடைய நாமஸ்மரணையைப் பண்ணிக்கொண்டு சுகமாயிருவென்று சொல்லிக்க டாக்ஷம் பண்ணிவிட்டு அதிரிசியமானார். பிறகு ஜகமித்திரர் நகரத்துக் குத் திரும்பி வருகிறபோது இந்த அதிகாரிமுதலானவர்கள் சகல விரு துகளுடனே பூரணகும்பமெடுத்துக்கொண்டு எதிரேவந்து சாஷ்டாங்

கமாகச்சேவித்துச் சோடச உபசாரஞ்செய்து எல்லாரும் நாமசங்கீர்த்தன கோஷம் பண்ணிக்கொண்டு அழைத்து வந்தார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இதைச்சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் நாளர்களிடத்தில் மிகுந்த அன்புடையவர்களாகிச் சுகசீவர்களாக வாழ்ந்து தேகாந்தியத்தில் மோட்சசாம்பிராச்சியத்தை அடைவார்கள். ஸ்ரீ மாதவாயநம: சீதாமனோகராயநம:.

## இருபதாவது அத்தியாயம்.

# சோகாபரமானந்தர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: இந்த நிஜபக்தர்களுடைய சரித்திரத்தைக் கேட்டமாத்திரத்திலே சகலசுகங்களும் வரும். அஷ்டமாசித்திகளும் வந்துஊழியம்செய்யும். ஆகாமியசஞ்சிதபிராரத்தமாகிய மூன்றும் நீங்கிவிடும். அவர்கள் அந்தரங்கசுத்தியையும் நியமங்களையும் பார்த்துப்புருஷோத்தமன்பிரசன்னராய்ச்சகல பிராந்தியையும் துடைத்துத்தன்னுடைய பஜனத்திலே பிரேமத்தைஉண்டாக்கிச்சாயுஜ்ய முக்தியைக்கொடுப்பர். இந்தப்படி பக்தர்களுடைய சரித்திரம் பாவனமென்று திரிபுராந்தகனான சிவன் பார்வதிதேவிக்குச்சொன்னார். ஆகையால் பக்தர்களே கேளுங்கள் பாரிசி யென்கிறவூரிலே அகண்டவைராக்கிய சீலராய் மானாவமானங்களைவர்ச்சித்து எப்பொழுதும் ராமா-கிருஷ்ணா-நாராயணாவென்று ஹரிபஜனம்பண்ணிக்கொண்டு சோகாபரமானந்தர் என்னுமபெயருடன் ஒருவர்இருந்தார். அவர்தினந்தோறும் பிராதக்காலத்திலெழுந்திருந்து ஸ்நானசந்தியாவந்தனமும் சோடச உபசாரத்துடனேதேவபூஜையும்பண்ணி-ஒவ்வொரு வந்தனத்திற்கும்பகவற்கீதையில் ஒவ்வொரு சுலோகம்சொல்லி எண்ணூறு சாஷ்டாங்க நமஸ்காரம்பண்ணுவார். இப்படித்தன்நேமமுடித்துக்கொண்டு அதற்குமேல்வீதிகளில் போய் உஞ்சுவிர்த்திபண்ணிப் போஜனம்பண்ணுவார். இப்படிப்பட்ட நியமங்களையுடைத்தாயிருப்பதேமானிடதேகமெடுத்ததற்குப்பிரயோஜனமாம். ஒருநேமமுமில்லாமல் அன்னம்புசிப்பவன் நரனல்லன்- ஊர்ப்பன்றியேயென்று தர்மசாஸ்திரத்திலேசொல்லப்பட்டிருக்கிறது. பக்ஷிமிருகாதிசெந்துக்களுக்குச் சாஸ்திரமும் நியமமும் தேவையில்லை. நா

தேதிசாஸ்திரத்தை அவசியம் அனுசரிக்கவேண்டும் அதனுடைசாதுசங் கமமன்றி ஞானம் பிராப்தமாகாது. இந்தக்கலியுகத்திலே சம்சாரத்தி லேயிருக்கிறவன் பங்கமின்றிச்சுலபமாய்ச்செய்யத்தக்கநேமமொன்றுண் டு. அது தீர்த்தயாத்திரை- தானங்கள்-தபங்கள்-விரதங்கள்-அனுஷ்டா னங்கள்- உபவாசங்கள் முதலிய வைகளைப்பார்க்கிலும் கோடிகுணம் சிரேஷ்டமானது. அதாவது ஸ்ரீஹரியைப் பஜனம்பண்ணுவதாம். இதற் குமிஞ்சின சாதகங்களில்லை. நரைதிரை மூப்புப்பிணி வந்தகாலத்தில் அமிர்தமானது சகலரையும் ரட்சிப்பதுபோல மிருத்தியுவந்தகாலத்தில் இவ்வரிபசனையானதுகாக்கும். இந்தஉண்மையை யறிந்துநடந்துகொண் டு எவன் சமுசாரத்திலே யிருந்தாலும் அவனிடத்திலே ஜகத்ஜீவனுன வன்நிஜபிரியத்தோடே யெப்போதும் கூடியிருப்பன். ஸ்ரீ ராமநாமத் தினுடையமகிமையைச் சர்வக்கியர்கள் அறிவார்களேயொழிய மற்றவர்க ளால் முடியாது. சோகாபரமானந்தரென்கிறவர் மேற்கூறியவைகளைத் தெரிந்து கோவிந்தநாமஸ்மரணை பண்ணிக்கொண்டு இருக்கும்போது ஒருநாள் ஒரு வர்த்தகன் அவ்விடத்திலேவந்துஇறங்கினன். அப்பொழுது மழைபிடித்துக்கொண்டு எங்கும்சேறுக்கியிருக்கவும் சோகாபரமானந் தர்நிஜப்பிரியத்தோடே சேற்றிலேதானே சாஷ்டாங்கமாக நமஸ்காரம் பண்ணிக்கொண்டிருக்க-இதை அந்தவர்த்தகன்பார்த்து இவர்நல்லவைஷ் ணவரென்று அறிந்து தன்கடையிலேயிருந்தஒரு பீதாம்பரத்தையெ டுத்துக்கொண்டுவந்து வெகுவிதமாய்ப்பிரார்த்தித்துக்கொடுத்துக்கட்டி க்கொள்ளச்சொன்னன். அப்போது சோகாபரமானந்தர் பிச்சைபண் ணுகிறசோறும் ஜீர்ணவஸ்திரமுமே நான் அனுபவிப்பவைகள்- மற்ற ஒன்றும்எனக்குத்தேவையில்லை. இந்தப் பீதாம்பரததைருக்குமணிவர னை பகவானுக்குக் கொண்டுபோய்ச் சாத்தினல் எனக்குமகாப்பிரிய மாயிருக்கும். பகவானும் உம்மிடத்திலே மிகவும் கருணையாயிருப்பார் என்று பலவிதமாய்ச் சொன்னவற்றைக் கேட்காமல் சுவாமி சுவாமி யென்று அவர்இடுப்பிலேயே சுற்றிவிட்டுப் போய்விட்டான்.

இந்தத்திவ்வியவஸ்திரத்தைப்பார்த்துநன்றாயுடுத்திக்கொண்டுசே றுபடாமல் ஜாக்கிரதையாய் நமஸ்காரம் பண்ண எண்ணி சாஷ்டாங்க மும் முன்போலே பூமியிலே படும்படி பண்ணவில்லை. இப்படியிரண்டு ஜாமமட்டும் நமஸ்காரம் பண்ணியும் பூரணமாகவில்லை. தேகத்திலே யிளைப்பும் பசியுமுண்டாயின. இதுஎன்ன இப்படி ஆயிற்றென்று யோ சித்துப்பார்த்து இந்தப்பீதாம்பரம் நமக்குச் சத்துருவாய்ப் பகவத்சே வைக்குங் குறைபண்ணிற்று. பூரணசந்திரனை ராகு விழுங்கினதுபோல் என்னுடைய சித்தத்தையும் விழுங்கிவிட்டது. பரிமாறின அன்னத் தைச் சுவானம் கெடுத்ததுபோல என்னுடைய நேமத்துக்கு விக்கினம் பண்ணியது இந்தப் பீதாம்பரமென்றறிந்து இந்தத் தேகத்துக்கு என்ன

தண்டனைபண்ணுவோம்- மழுவைத்தான் சாப்பிடுவோமா- மலைமேலே யேறிக் கீழே விழுவோமா- ஆரண்ணியத்திலே பஞ்சாக்கினி வளர்த்து மத்தியிலேதவசுபண்ணுவோமா- திரிவெணிசங்கமத்திலே விழுந்து முழுகிப்போவோமா- ஆகாரநித்திரைகளைவிடடுப் பஞ்சஇந்திரியங்களையும் அடக்கி வைராக்கியமாயோகாப்பியாசம்பண்ணுவோமா- சரீரத்தை அக்கினிக்குக்கொடுத்துவிடுவோமா- யென்னபண்ணினால் ருக்குமணிரமணன் தரிசனம் கொடுப்பானென்று அனுதாபப்பட்டுக்கொண்டு கோவிலுக்குவெளியிலேவந்துஉட்கார்ந்தார். அப்போது கலப்பையைத் தோளின்மேலே வைத்துக்கொண்டு நுகத்தடியைமாத்திரம் மாட்டிலே பூட்டி ஓட்டிக்கொண்டுவருகிற ஒருவனைப்பார்த்து இந்தச்சோகாபரமானந்தர் கூப்பிட்டு என்னுடைய பீதாம்பரத்தை உனக்குத் தருகிறேன் இரண்டு நாழிகைபரியந்தம் இந்தஎருதை யென்வசம் பண்ணுகிறாயாவென்றுகேட்டபொழுது அவன்சம்மதித்தபடியால் அந்தப்பீதாம்பரத்தை அவன்கையிலே கொடுத்துப்பூட்டாங்கயிற்றையும்கேட்டுவாங்கிஅந்தஎருதின்கழுத்திலேயிருக்கிறநுகத்தடியிலும்தன்னுடையஇரண்டுகாலிலும்கட்டிக்கொண்டுகுடியானவனைப்பார்த்து நீசிர்த்தாக்ஷணியமாயிந்த மாட்டைவனத்தில் அடித்துத் துரத்திவிடென்றுசொல்ல-அந்தக்குடியானவன் அவிவேகியானபடியினாலே அடித்துத் துரத்திவிட்டான். மாடு அதிவேகமாய் வனத்தைப் பார்க்க ஓடினபடியால் அங்கே உள்ளகல்லுகள் முள்ளுகள் மேடுகள் பள்ளங்கள் மலைகள் செடிகள் முதலியவற்றில் பக்தருடைய தேகம்அரைபட்டு மாம்சங்களெல்லாம்போய் ரத்தம் பிரவாகமாய்வர இதைப்பார்த்துமாடுகள்பயப்பட்டு வேடனைக்கண்ட மான்போலே வெறியெடுத்துவனத்திலேநாலுபக்கமும்பின்னும்அதிவேகமாய்ஓடத்தலைபட்டன. அப்போது சோகாபரமானந்தரானவர் மனதிலே அனுதாபம்கொண்டு இன்றைக்குநாம்பண்ணின அபராதத்திற்குநல்லசிக்ஷைபண்ணுவித்தோமென்று மனசுஎவ்வளவாகிலும்கலங்காமல்சந்தோஷமாய்ச் சமாதானம் பெற்றுவாக்கினாலேராமா- கிருஷ்ணா- நாராயணா-பதிதபாவனா-கருணாசமுத்திரா-ஜயஜயா ருக்குமணிமனோரஞ்சனா-சேஷசயனா-க்ஷீராப்திவாசா-பக்தகைவாரி- அனந்தகல்யாணகுணநிதே-பாண்டுரங்காவென்று நானாவிதமானநாமங்களைச்சொல்லிக்கொண்டிருக்கையில் தேகத்தில் எலும்பு நரம்பைத்தவிர வேறொன்றுமில்லாமல் அதிலேஒட்டிக்கொண்டிருந்த பிராணனும்போகிறசமயமாகியும் சோகாபரமானந்தர் மஹா சந்தோஷத்தோடே பகவத்ஸ்மரணையை விடாமல் ஆனந்தபரவசராயிருக்கிற ஒருமையைக் கண்டுபகவான்பண்டரிநாதன் கஜேந்திரனுடைய உருக்கங்கண்டு ஓடிவந்ததுபோல ஓடிவந்து சோகாபரமானந்தருடைய பூரணவைராக்கியத்தைப் பார்த்துச்சந்தோஷப்பட்டு அந்தநுகத்தடியிலே யிருக்கிறகயிற்றைத் தன்கையினாலே அவிழ்த்துவிட்டு வாரியெடுத்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு கிருபா திருஷ்டி

குலேபார்க்க உடனே திவ்விய சரீரமாயிற்று. சூரியனுதித்தவுடனே ஜகதந்தகாரம் போய்விடுவதுபோல ஜகநாதருடைய தரிசனமானவுடனே இவருக்குத் தேகத்தின்சிந்தை மறந்துபோய்விட்டது. அப்பொழுதுபகவான் பக்தசிரோ ரத்தினமானசோகாபரமானந்தரைப்பார்த்து நீ ஒரு அந்யாயமும்பண்ணுமலிருக்கவும்தேகத்தை யேனிப்படித்தண்டித்தாய்- நீசாப்பிடுகிற அன்னம்என்னுடையவாயில்விழுகிறது- நீஆரோடேயென்னபேசினாலும் என்னேஸ்தோத்திரம் பண்ணினதுபோலேயாகிறது-நீபோகிறதும் வருகிறதும் எனக்குப்பிரதக்ஷணமாக ஆகிறது- நீ நித்திரைபண்ணுகிறது அஷ்டாங்க சாஷ்டாங்க நமஸ்காரம்பண்ணினதுபோலுமிருக்கிறது இப்படியிருக்க நிஜபக்தனனநீ ஏனிப்படி அகிர்த்தியம்பண்ணினுயென்று சொல்ல- அப்போது சோகாபரமானந்தர் பகவானுடைய திருவடிகளிலே சிரஸைவைத்துக் கிருபைபண்ண வேண்டுமென்று சொன்னுர். அதற்குப்பகவான் நீ யினிச்சுகமாயிருந்து கடைசியில் அக்ஷயமானபதவியை யடையென்று கட்டளேயிட்டுப் பண்டரிபுரத்துக்குவந்து பக்தர்களுடனே யிந்தச் சோகாபரமானந்தருடைய விருத்தாந்தங்களேச் சவிஸ்தாரமாய்ச்சொல்ல-அப்போது பக்தர்களனேவரும் ஆச்சரியப்பட்டார்கள். ஞானதேவர் இருஷீகேசனேப் பார்த்துச் சுவாமி தேவரீருடைய லீலைக்கு அளவேது. ஒருவரைப்பார்க்கிலும் ஒருவரைச் சிரேஷ்டமாய் நிர்மாணம்பண்ணுவீர். தேவரீரே பக்தர்களுடைய சுகத்தின்அருமையை அறிவீரென்று சொல்லினானுவிதமாய்ஸ்தோத்திரம் பண்ணினுர். ஸ்ரீரங்கதாமனே நம: ஸ்ரீ பாண்டுரங்க விட்டலாயநம:.

---

# நரஹரிபக்தர் சரித்திரம்.

---

ஸ்ரீ இராமச்சந்திரபரப்பிர்மணேநம:. சாதுக்களே இன்னுமொருபக்தருடைய சரித்திரத்தைக்கேளுங்கள் பண்டரிபுரத்தில் பொற்கொல்லர் குலத்தில்பிறந்து வளர்ந்து நரஹரியென்னும் பெயருடன் ஒருவர் இருந்தார். அவர் பிராதக்காலமெழுந்திருந்து பீமாநதியிலே ஸ்நானம்பண்ணி நித்தியகர்மங்களே முடித்துக்கொண்டு அதற்குமேல் மல்லிகேச்சுரருடைய பூசையை நிஜப்பிரியத்துடனே பண்ணி ஸ்ரீசங்கரனே வழிப்பட்டுச் சாதகபக்ஷி மேகத்திலிருந்து விழும் நீரையன்றிப் பூமியிலுள்ள மற்றைஜலத்தைச் சாப்பிடாதது போலவும்-கற்புடைய ஸ்திரீயானவள்

தன்புருஷனைத்தவிர வேறே ஒருவரையும் பாராததுபோலவும் - பரம சிவனைத்தவிர வேறொருதெய்வத்தை மனோவாக்குக் காயங்களினாலே நினைத்தாவது வணங்கியாவது அறியாராதலால் - ஒருநாளாவது தான் பூமியில் பிறந்தநாள் முதல் வசிக்கும் பண்டரிபுர க்ஷேத்திரத்திலுள்ள பண்டரிநாதனைக் கோவிலுக்குள் போய்ச்சேவித்ததில்லை. அந்தக்கோபுரத்தைக்கண்டாலும் ஆவணிமாதம் சுக்கிலபட்ச சதுர்த்தியில் தோன்றியசந்திரனைப்போல வெறுத்துக் கண்ணாலேயும் பார்க்கமாட்டார். இவர் இப்படிப் பரமசிவனிடத்தில் பக்தி பண்ணிக்கொண்டிருக்கையில் - பக்கத்திலுள்ள ஒருவர்த்தகனுக்குப் புத்திரனில்லாமையால் அவன் பண்டரிநாதன் சந்நிதியில் வந்து ஓ தயாநிதி நீர் எனக்கு ஒருபிள்ளை பிறக்கும்படி செய்தால் நான்உமக்குக் கல்லிழைத்த தங்க அரைஞாண் பண்ணிப்போடுகிறேனென்று பிரார்த்தனை பண்ணிக்கொண்டான். சில நாளில் அவனுக்கு அப்படியே பிள்ளைபிறந்தது. அப்பொழுது பண்டரிபுரத்துக் கோவிலுக்கு வந்து சுவாமியைத் தரிசனம் பண்ணிவிட்டு அங்குள்ளவர்களைப்பார்த்துச் சுவாமிக்குக் கல்லிழைத்த தங்கஅரைஞாண் ஒன்றுபண்ணவேண்டும் அதற்கு நல்ல வேலைக்காரர்கள் இந்தப்புரியிலே ஆரிருக்கிறார்களென்று கேட்டதற்கு - அவர்கள் நீர்சொல்லுகிறபடி பண்ணுகிறதற்கு நரஹரியென்கிற ஒருவர் தானிருக்கிறார் - அவர்தான் கெட்டிக்காரர் அவரிடத்திலே போமென்று சொன்னார்கள். அந்தப்படியே வர்த்தகன் ரத்தினமும் தங்கமும் எடுத்துக் கொண்டு நரஹரியென்னும் பொன்செய் கொல்லரண்டையிலே வந்துதனக்கு ஆகவேண்டிய காரியத்தைச்சொன்னான். அதற்கு அவர் நீர் சொல்லுகிறபடியே பண்ணித்தருகிறேன் ஆனால் அந்தமூர்த்தியை நான் பார்த்ததில்லையாதலால் அவர் இடுப்பின் அளவு பிடித்துக் கொண்டுவந்து கொடுத்தால் அந்தஅளவுப்படிக்குப் பண்ணித்தருகிறேனென்றுசொல்ல - அந்தவர்த்தகன் சிரித்துப் பண்டரிநாதனை இத்தனைசமீபத்திலே யிருந்தும் தரிசனம் பண்ணவில்லையா வென்று சொல்லிவிட்டுத் - தான்போய் அளவு கொண்டுவந்து கொடுத்து ரத்தினமும் தங்கமும் அதற்குள்ள கூலியுமாகிய எல்லாவற்றையும் கொடுத்து வேலை முடித்து கொடுப்பதற்கு ஒருகெடுக் கேட்டுக் கொண்டு தன்னிடம் போய்விட்டான். அப்படியே பொன்வினைஞர் தொழிலைவகித்த அந்தப்பக்தரும் அளவுப்படி வேலைப்பாடாய் அரைஞாண் பண்ணிக் கொடுக்க - அவ் வர்த்தகன் வாங்கிக்கொண்டு கோவிலுக்குவந்து சுவாமிக்கு அபிஷேகங்கள் செய்வித்து அலங்காரம் பண்ணச்சொல்லி அரைஞாணைக் கொடுத்துப்போடச்சொல்லும் பொழுது நாலுவிரற்கடை குறைவு பட்டதனால் திரும்பவும் அவரிடத்தில் கொண்டுவந்து கொடுத்து அந்தநாலு விரற்கடை

அந்தவர்த்தகன் செங்கொல்லரண்டையில் வந்து இப்பொழுது இரண்டு விரலளவு அதிகமாயிருக்கிறதென்று சொல்லிமிகவும் விசனப்பட்டு-ஓ ஆசாரியரே கோவிலுக்குநீர்வந்துசக்கரபாணியைக்கண்ணாலேபார்த்து உமது கையினாலே போட்டு பார்த்தால் அப்போது ஏற்றக் குறைவு நன்றாய்த்தெரியும் அதன்மேல் ஒரேதடவையில் செய்துமுடிக்கலாம். ஆகையால் என்பேரில் தயவுபண்ணி வரவேண்டுமென்று சொல்ல - அந்த நிஜபக்தர் நான் பரமசிவனைத்தவிர விரண்டாந் தெய்வத்தைக் கண்ணாலேயும் பார்க்கிறதில்லையென்று பிடிவாதம் பண்ணினேன். ஆனாலும் நீர் மிகவும் விசனமாய்ச் சொல்லுகிற படியினாலே உம்முடைய நிமித்தம் வருகிறே னென்று சொல்லிக் கண்ணிரண்டையும் வஸ்திரத்தினாலேகட்டிவிட்டு அந்தவர்த்தகன் கையைப்பிடித்துக்கொண்டு கோவிலுக்குப்போனார். அதைக்ஷேத்திர வாசிகள் பார்த்து ஆச்சரியப்பட்டு நகைத்துச் சுரம் வந்தவனுக்குப் பக்குவான்னமெப்படி ருசிக்காதோ அப்படியிவனுக்கு இந்தத்தெய்வ தரிசனம் ருசிக்கவில்லையென்று நானாவிதமாய்ப் பேசினார்கள். அவையெல்லாம் காதிலேவிழ வர்த்தகன் கையைப் பிடித்துக்கொண்டு வந்தநரஹரி கோவிலுக்குள்ளே வந்தவுடனே மெய்ம்மறந்து சாஷ்டாங்கமாகச் சேவிக்க-அப்போது அங்கேயிருந்தஜனங்கள்-வந்தவர்களை வாரும்உட்காருமென்றுகூடச் சொல்லாத ஒருவன் அவர்களுக்குப்போஜனம்பண்ணுவித்ததைப்போலவும்-கங்காஸ்நான மகத்துவத்தைக் காதினாலேயும் கேட்கக் கூடாதென்றிருந்த ஒருவன் கங்காஸ்நானத்துக்குப் போனதைப்போலவும் - பண்டரிநாதனைத்தரிசனம்பண்ணக்கூடாதென்று இருந்தஇந்தநரஹரிஎன்னகாரணத்தால் சாஷ்டாங்கமாய்ச் சேவித்தானென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள். அப்படியிருக்கையில் வர்த்தகன் இந்தத்தட்டான் கையைப்பிடித்துப்பண்டரிநாதன் சமீபமாய்க் கொண்டுபோயிவர்தான்சுவாமியென்று சொல்லநரஹரி தன்கையினாலே சுவாமியின் சிரசுமுதல் பாதம்வரைக்கும் தொட்டுப் பார்க்கும்பொழுது ஐந்துமுகமும் சிரசிலே ஜடையும் கங்கையும் சந்திரனும் கழுத்திலேசர்ப்பாபரணமும் அரையில் வியாக்கிரசர்மமும் இன்னும் பார்வதிரமணனுடைய தேகத்திலே உள்ள எல்லாச்சின்னங்களும் இவர்கைக்கு அகப்பட்டபடியால் செங்கல்மேலேநின்று கொண்டிருக்கிறவர் என்னுடையதெய்வமாயிற்றே நான் விருதாவாய்க் கண்ணைக்கட்டிக்கொண்டு வந்தேனேயென்று அனுதாபப்பட்டுக் கண்ணைத்திறந்து பார்த்தார். அப்போது செங்கல்லின்மேல் நின்றுகொண்டிருக்கிற நீலமேகசியாமளனுடைய சிரசில் பிரகாசமான கிரீடத்தையும் சுந்தரமுகத்தையும் காதிலே மகரகுண்டலத்தையும் கழுத்திலே கவுஸ்த்துவ வைசந்தி வனமாலையையும் இருதயத்திலே ஸ்ரீ வத்ஸலாஞ்சனத்தையும் இடுப்பிலே வைத்துவிளங்கும் இரண்டுகை

பவர் ஆச்சரியப்பட்டுத் திரும்பவும் கண்ணைமூடிக்கொண்டு தொட்டுப்பார்க்கிறபோது பார்வதி ரமணனுடைய சின்னமே முன்போலத் தோன்றத் திரும்பவும் கண்ணைத் திறந்து பார்க்கிறபோது ருக்குமணிரமணனுயிருக்கக்கண்டார். பிறகு இவருக்கு அறிவுபிறந்து சத்திரியத்தோடே சாஷ்டாங்கமாய்ச் சேவித்து ஜய ஜய தேவாதிதேவா-சர்வஜீவாந்தர்யாமி- பரமேசா- கேசவா - கைலாசவாசி- வாசுதேவா-வைகுண்டபதே - பக்தவச்சலா - க்ஷீரசாகரவாசி - நீலகண்டா-ஜய ஜய பண்டரிவாசியென்று ஸ்தோத்திரம் பண்ணிச் சுவாமி அடியேனுடைய மாயையை நீக்கிவிடவேண்டும். உன்னுடைய அற்புத மகிமையை அறியாமல் துவிதமாயெண்ணினேன். அந்தச்சங்கற்பத்தைப் போக்கி அழிவில்லாத அத்துவைத பிரேமள பக்திவரும்படியாய்க் கிருபை பண்ணவேண்டுமென்று கேட்டுக்கொண்டபோது பண்டரிநாதன் தன் சுயரூபத்தோடு தோன்றிப் பக்த சிரோமணியான நரஹரி- நீயென்னுடைய பிரியமான நிஜபக்தனனபடியால் உன்னிடத்தில் இந்த உபாயங்களைச்செய்தேன். இனிமேல் எனக்கும்சிவனுக்கும்பேதமிருப்பதாகஎண்ணுதே யென்று சொல்ல-உடனே நரஹரி யென்பவர் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துத் திருவடிகளைப்பிடித்துக்கொண்டு ஸ்தோத்திரம்பண்ணி அரைஞாணைவாங்கி யிடுப்பிலேபோட அதுசரியாயிருந்தது. அப்போது அந்த வர்த்தகனும் சந்தோஷமாய்ப் பண்டரிநாதனையும் நரஹரியென்பவரையும் புகழ்ந்து வணங்கிவிட்டுத் தன்னிடம் போய்ச் சேர்ந்தான். பண்டரிநாதன் எப்பொழுதும் தன்டைய தாசர்கள் மனசுப்படியே நடக்கிறவராதலால் தன் நிஜபக்தனை நரஹரிநிமித்தம் அந்தநாள்முதல் தன் சிரசிலே பாணலிங்கம் போலக் கிரீடத்தைத் தரித்துக் கொண்டிருக்கிறார். நரஹரியென்பவரும் அதுமுதல் ஸ்ரீபண்டரிநாதனைப் பரமசிவனுக எண்ணிப்பக்தி செய்து கொண்டு வந்தார். ஸ்ரீபாண்டுரங்காயநம:.



# நாமதேவரைப் பண்டரிநாதன் சோதித்த சரித்திரம்.

ஸ்ரீஇராமச்சந்திர பரப்பிரமணேநம:. இப்படி யிருக்க ஒருகாலத்தில் பண்டரிநாதன் நாமதேவரை யேகாந்தத்திலே அழைத்துக்கொண்டுபோய் நான் சகல பூதங்களிலேயும் அந்தரியாமியாயிருக்கிறது உனக்குத்தெரியுமே யென்று சொல்ல-அவர் தேவரீருடைய கிருபையினலே தெரியுமென்று சொல்லினர். பிறகு சிலநாள் சென்றவுடன் சுவாமியானவர் நாமதேவரைச் சோதிக்க வேண்டுமென்று சுவானவடிவெடுத்துக்கொண்டு பண்டரிபுரத்துத் தெருவிலே திரிந்தும் யாத்திரைக்கு வந்த ஜனங்கள் சாப்பிடுகிறவிடத்திலே போய் அவர்களாற் துரத்தப்பட்டும் இரண்டொருவர் நாய்வந்தது துரத்துங்களென்று சொல்லிக்கொண்டேயிருக்கையில் சமயம் பார்த்துப்போய் அவர்கள் சோற்றுத்தவலையில் வாய்வைத்தும் அவர்கள் பிடிக்க முயற்சிசெய்தால் அகப்படாமல் ஓடியும் பிராமணர்கள் முதலிய வந்திருக்கிற பிரஜைகளிடத்தில் நானவிதவேடிக்கைகள் பண்ணிக்கொண்டு மிருந்தார். இப்படியிருக்கையில் ஒருவராவது ஒரு கவள அன்னம் போடவில்லை. ஆனல் நாமதேவர் ஒரு ரொட்டியைக் கையிலே வைத்துக்கொண்டு நின்றுகொண்டிருக்க இந்த நாயானது வந்து ரொட்டியைப் பறித்துக்கொண்டு ஓட்டம் பிடித்தது. அப்போது நாமதேவர் ஒருகிண்ணத்திலே நெய்யை ஊற்றிக்கொண்டு வந்து ஓ சுவாமி வரட்டு ரொட்டியைத்தின்னுதேயும் தின்னுதேயும் தொண்டையிலே அடைத்துக் கொள்ளுமென்று சொல்லிக்கொண்டு நாயைப்பிடித்து ரொட்டியைப் பிடுங்கித் துண்டு துண்டாய்ப் பிட்டு நெய்யிலே தோய்த்து நாய்வாயிலே கொடுக்கத்தலைப்பட்டார். அதுவும் பிரியமாய்ச் சாப்பிட்டது. இந்த அதிசயத்தைப் பார்த்து ஜனங்கள் சிரித்து நாமதேவருக்கு வெறிபிடித்ததனல் சுவானத்துக்கு ரொட்டியை ஊட்டுகிறர் பாருங்களென்று சொன்னர்கள். சிலர் இந்தப் பூமிதேவிக்குச் சகலசராசரமும் வித்தியாசமில்லாமலிருப்பதுபோல இவருக்கும் சகல பிராணிகளிடத்திலும் வித்தியாசமில்லையென்றர்கள். அப்போது சுவான ரூபமாயிருக்கிற ருக்குமணி காந்தன் நாமதேவரைப்பார்த்து நீயெப்படி யென்னையறிந்தாயென்றுகேட்க

அதினாலே யெனக்குத் தெரிந்ததென்றுசொல்லப் பகவான் சந்தோஷமடைந்து சகல ஜனங்களும் பார்த்துக்கொண்டிருக்கையில் அதிரிசியமானார். அவர்களெல்லாம் இவர் பண்டரிநாதனே யொழிய வேறில்லை. இதைத்தெரியாமல் நாமெல்லாம் தடியெடுத்துக்கொண்டு துரத்தினோமே யிந்த மர்மத்தை நாமதேவர்மட்டும்தானே தெரிந்து பகவானென்று உபசாரம் பண்ணினார். ஆதலால் அவரே தன்னியர் அவர் பக்தியே பக்தி நாமெல்லாரும் கர்மாபிமானத்தினாலே கெட்டுப்போகிறோமென்று சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

இப்படியிருக்கையில் பின்னை யொருகாலத்தில் கார்த்திகைமாசம் சுக்கில பக்ஷ யேகாதசி தினத்தில் நாமதேவர் சந்நிதியிலே கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கையில் இருஷீகேசன் அவரைப்பார்த்து நீர் இன்றைக்கு இங்கே போஜனத்திற்கு வரவேண்டுமென்று சொல்ல அதற்கு நாமதேவர் இன்றைபத்தினம் ஏகாதசி ஆதலால் அன்னத்தைக் கையால் தொட்டுப்பார்க்கவும் கூடாது நான் இன்றைக்குமட்டும் வந்து போஜனம் செய்யமாட்டேன். இப்படியிருந்தாலெந்த ஜன்மத்தில் நாங்கள் உன்னுடைய திருவடியில் வந்துசேருவோம். தெய்வத்தில் சிரேஷ்டம் இருஷீகேசன்- செடியில் சிறந்தது துளசி- விரதத்தில் சிரேஷ்டம் ஏகாதசி அல்லவாவென்று சொன்னார். அதைக்கேட்டு ஜகத்ஜீவனன் பூவுலகத்திலே அம்பரீஷனும் ருக்குமாங்கதனும் இந்த விரதத்தை ஆசரித்து வைராக்கியமாயிருந்ததுபோல ஒருவருமாசரிக்கமாட்டார்கள். பூமியில் ஈரமில்லாதபோது விதைத்த விதை முளையாதது போலவும் அன்பில்லாதபொழுது கொடையானது நிலைபெறாததுபோலவும் வைராக்கியமில்லாத பொழுது விரதமானது வீணாய் அழியுமென்று சொல்ல- நாமதேவர் ஓ சுவாமி வறுத்த விதை முளைத்தாலு முளைக்கும்- ஒரு குடக்துக்குள்ளே சமுத்திர நீர் அடங்கினாலும் அடங்கும்- பூமியானது இவ்வளவென்று நிறுக்கும்படி வந்தாலும்வரும்- தேவரீருடைய கருணையாலேயென்னுடைய நிச்சயத்திற்கு மட்டும் ஒருநாளும் வழுவுதல் வரமாட்டாது என்று சொல்லக்கேட்டுப் பகவான் சிரித்து வாராய் நாமதேவா உன்னுடைய குணத்துக்கும் நிச்சயத்துக்கும் என்னுடைய பிராணனையே ஆலத்தியாகச் சுற்றவேண்டுமென்று சொல்லிவிட்டு அதிரிசியமானார்.

மதுசூதனன் பின்னொருகாலத்தில் ஒரு யேகாதசி தினத்தில் நாமதேவரைப் பரீக்ஷை பார்க்கும்பொருட்டுக் கையில்தண்டமும் இடுப்பில் ஜீரண வஸ்திரமுமாய் விருத்த பிராமண வேடம் போட்டுக்கொண்டு நாமதேவர் வீட்டுக்கு வந்து உட்கார்ந்தார். அப்போது நாமதேவர் பிராமணனைப்பார்த்துச் சாஷ்டாங்கமாய்ச்சேவித்துச் சுவாமி நீரென்ன

காரியமா யிவ்விடத்திற்கு வந்தீரென்றுகேட்கப் பகவான்எனக்கு இப்பொழுது மிகுதியும் பசியாயிருக்கிறபடியால் உலுப்பை கொடுத்து அன்னம்பண்ணிச் சாப்பாடு செய்வியுமென்றார். அதற்கு நாமதேவர் இன்றைக்கு ஏகாதசி ஆனபடியினாலே அன்னதானம் பண்ணலாகாது ஆனால் பேரீச்சம்பழ முதலான பலகாரங்களிருக்கின்றன. அவைகளில் இஷ்டமானதை அங்கீகாரம் பண்ணலாமென்று சொன்னார். அப்போது பிராமணன் அன்ன தானம் தவிரப்பின்னையொன்றும் எனக்குத்தேவையில்லை உன்னுடைய வாசலில் அன்னம்வேண்டுமென்று அபேக்ஷையாகி வந்தேன் நீ யில்லையென்று சொன்னவிப்போதே யென்னுடைய பிராணன் போய்விடும் உனக்குப் பிர்மஹத்தி தோஷம்வந்து லபிக்குமென்று சொன்னார். அப்போது நாமதேவர் நான் விஷ்ணு பக்தன் பாபபுண்ணியத்திற்கு நீங்கியிருக்கிறேன் பாண்டுரங்கன் திருவடியிலே சித்தத்தைச் சமர்ப்பித்துவிட்டுச் சீவன்முக்தனாயிருக்கிறேன். ஒருவனுக்குப் புண்ணியத்திலாசை யில்லாதபொழுது பாபமேது. ஒன்றிலேயும் மோகமில்லாதவனுக்கு ஒருத்தி பிரிந்ததினாலே துக்கமேது பிராமணோத்தமரே என்று சொன்ன வசனத்தைப் பிராமணன் கேட்டு ஓ அரி பக்தனே நீ சித்தத்திலே சத்துவமில்லாமல்வாக்கினாலேஞானம்பேசுகிறாய் நான் அன்னமில்லாமல் மூர்ச்சையாகி யிருக்கிறேன் இந்தப்பசியை இந்தவேளையில் ஆற்றாதேபோனால் இப்பொழுதே என்னுடைய பிராணன் போய்விடுமென்று நிச்சயமாயெண்ணு என்று சொல்ல- நாமதேவர் ஓபிராமணா நீ பிராணனை விட்டா லென்கெதியு மப்படியேதான் முடியுமென்று சொல்லிவிட்டுப்பிராமணனுடைய சமீபத்தில் வந்துபார்க்கும்போது அந்தப் பிராமணனுக்குச் சுவாசம் நின்றுவிட்டது. இந்தச்செய்தியைக்கேட்டு அந்தவட்டாரத்திலிருக்கிற ஸ்திரீ புருஷர்கள்யாவரும் கூட்டங்கூடி வந்து நாமதேவரைப்பார்த்து அடாபாபி நாமதேவா எங்களுடைய வாசலிலே ஏன் பிரமஹத்திபண்ணினாய் பிராமணன் பசித்து வந்து அன்னம்கேட்டால் அவனுக்கு அன்னம் கொடாமல் பிரமஹத்திக்குப் பாத்திரனாகிவிட்டாயே மிகுதியும்ஞானவானென்று பேர்மாத்திரம் வகித்து ஒரு பிராமணனுக்கு ஒரு கவளஅன்னங்கொடுத்து அவன் பசியை ஆற்றாமல் அவனைக்கொன்று விடலாமோவென்று இப்படி நானாவிதமாகச் சொல்லிக்கொண்டிருக்கையில் நாமதேவர் தன்னுடைய மனதில் லேசமும் சஞ்சலப்படாமல் பிராமணனுடைய சரீரத்தைத் தன்னுடைய தோளிலே யெடுத்துப் போட்டுக்கொண்டு பீமாநதிக்கரைக்கு வந்து காட்டெரு முட்டையைப் பொறுக்கிச்சிதையடுக்கிஅதின் மேலே அந்தப்பிராமணனை வைத்துத் தானும் படுத்துக்கொண்டு எருமுட்டையைத்தன் கையினாலே அடுக்கிக்கொண்டு நெருப்பை வைத்துவிட்டார். நாமதேவருடைய ஸ்திரீயானவள் இந்தச்செய்தியைக் கேட்டு அவளும் வந்து சிதையில் படுத்துக்கொண்டாள். நெருப்பானது கலந்து எரிகிற

பொழுது பிராமணர்களும் மற்றவர்களும் இந்த நாமதேவனுடைய நிச்சயமும் திடபக்தியும் பதினாலுலோகத்திலேயும் கிடையாது என்று ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருக்கையில் ஸ்ரீ பண்டரிநாதன் சதுர்புஜராய்த்தோன்றி நாமதேவரை எடுத்து ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு உன்னைப்போல நிஜபக்தன் திரிபுவனத்திலும் கிடைக்கமாட்டான். அம்பரீஷ- ருக்குமாங்கதர்களைப்பார்க்கிலும் உன்னுடைய ஏகாதசி விரதநேமமதிகம் அவர்களுமிந்தநேமம்பண்ணித்தான் தங்கள்குலகோடியுடனே சாக்ஷாத் வைகுண்ட பதவியை அடைந்தார்கள். அவர்களுள் அம்பரீஷனுடைய விரதநேமத்தினாலேதான் நான் முன்னமே தசாவதாரமெடுக்க நேர்ந்தது. இப்பொழுது உன்னிமித்தம்தான் இந்தக் கலியுகத்திலே அனேக வேலைகள் செய்கிறேனென்று சொல்லிவிட்டு அதிரிசியமானார். அப்போது சகல ஜனங்களும் ஆச்சரியமாகி நாமதேவரைச் சரணமடைந்து பீமாதீரவாசியும ருக்குமணி காந்தனுமான பகவானை ஸ்மரித்துக்கொண்டு ஆனந்த பரிதர்களாயிருந்தார்கள். இந்த அத்தியாயம் சம்பூரணம். இதைச் சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் திடமான வைராக்கியத்தோடு பலவித நியமங்களை யுடையவர்களாயிருந்து தேகாந்தத்திலபரமபதப் பிராப்தராவார்கள் ஸ்ரீபாண்டுரங்கவிட்டலாயநம:.

## இருபத்தோராவது அத்தியாயம்.

# ஜெனீபாய் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: கேளுங்கள் புண்ணியசாலிகளே மகாமேருவானது தன்னையடுத்த பொருள்களுக்கெல்லாம் தன்னிறமாகிய பொன்னிறத்தைக் கொடுப்பதுபோல இந்தப்பக்தவிஜயமும தன்னைச் சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் சரித்திரத்தைத் தன்னைபபோல மேனமையாக்கும. அப்படிப்பட்ட இந்தக்கிரந்தத்தின் முன் அத்தியாயததிலே சோகாபரமானந்தர் நரஹரி யென்பவர்களுடைய சரிததிரமும் பகவான் நாமதேவரைச் சோதனை பண்ணினதையும் கேட்டீர்களே- இந்த அத்தியாயத்தினுடைய சரித்திரத்தைக் கேளுங்கள் பணடரிபுரத்துக்கு ஒரு வருஷம் கார்த்திகை மாதம் உச்சவத்துக்குக் கூட்டங்கூட்டமாய் வெகு ஜனங்கள் வந்து இருந்து எல்லாரும் பகவானைச் சேவித்துவிட்டு அவரவர்கள் ஊருக்குப்போய்விட்டார்கள்

அவர்களுக்குள்ளே ஒரு பெண் மாத்திரம் சுவாமி சந்நிதானத்திலே நின்று பக்த கூட்டங்களைப் பார்த்துக்கொண்டிருந்து ஆனந்தத்தில் மன்கு லயித்து அப்படியே நின்றுவிட்டாள். தாயார் தகப்பனார்முதலாகிய கூடவந்தவர்களெல்லாம் பலவாறு வரச்சொல்லி அழைத்ததற்குநான் வருகிறதில்லை இங்கேயேயிருந்து பண்டரிநாதனையும் அவனுடைய தாசர்களையும் தரிசனம் பண்ணிக்கொண்டிருப்பேன் உங்கள் பாட்டுக்கு நீங்கள் உங்கள் ஊருக்குப் போங்களென்று சொல்ல- அதைக்கேட்டு அங்கிருந்தவர்களெல்லாம் மிகுந்த ஆச்சரியப்பட்டு இதென்ன காரணம் இந்தப்பெண்ணுக்கு இவ்வளவு தீவிரமாய் பக்தியும் ஞானமும் வைராக்கியமுமுண்டாயின என்று சொல்லிச் சந்தோஷப் பட்டுக்கொண்டிருந்தார்கள். தாயும் தகப்பனும் பெண்ணைவிட்டுவிட்டுத் தங்களுடைய ஊருக்குப் போய்விட்டார்கள். அந்தப்பெண் சந்நிதியிலே உட்கார்ந்து பகவானைத் தியானம்பண்ணிக்கொண்டிருக்கையில் - நாமதேவர்கோவிலுக்குவந்து இந்தப்பெண்ணைப் பார்த்து கருணைவந்து நீயார் ஏன் தாய் தகப்பனைவிட்டு ஒண்டியாயிருக்கிறாய்- நீ பிறந்ததும் வளர்ந்ததும்- எந்தஊர்- உன் பெயரென்னவென்றுகேட்க- அதற்கு அந்தப்பெண் என்பெயர் ஜெனீ-தாய் தகப்பன் பண்டரிநாதன்தான் என்று சொல்லிவிட்டு சும்மாயிருந்துவிட்டாள். இவருக்கு உடனே மனதில் மிகுந்த அன்புண்டாகி அந்தப் பெண்ணைப் பார்த்து ஜெனீ நீ எங்கள் வீட்டில் வந்து பக்திசெய்துக் கொண்டிருக்கலாமென்று சொல்லிக் கையைப் பிடித்து வீட்டுக்கு அழைத்துக்கொண்டுபோய்த் தன்னுடைய தாயாராகிய குணபாயியைப் பார்த்துத் தாயே இந்தப்பெண் பண்டரிநாதனிடத்துள்ள அன்பினால் யாத்திரைக்கு வந்தவர்களிடத்தி லிருந்து பிரிந்துவிட்டாள். ஆனதினாலே நம்மோடுகூடவே யிருந்து நாமஸ்மரணை பண்ணிக்கொண்டிருக்கட்டும் என்று சொல்லிவிட்டுப்- பூர்வம் கிருஷ்ணாவதாரத்திலே கூனியாயிருந்தவள்தானிப்போது கலியுகத்திலே ஜெனீயாயவதரித்துப் பண்டரிநாதனுடைய பக்தியில் முழுகியிருக்கிறாளென்று எண்ணிக்கொண்டிருந்தார். அது முதல் ஜெனீபாயியானவள் நாளுக்கு நாள் நாமதேவர்வீட்டிலே வளர்ந்து அவருடைய வீட்டு அலுவலையும் பார்த்துக்கொண்டு சதா நாமஸ்மரணை பண்ணிக்கொண்டிருந்தாள்' ஆராகிலும் நீயாரென்று கேட்டால் நான் நாமதேவர் வீட்டுப் பணிவிடைப்பெண் அவர்தான் எனக்குத்தாயும் தகப்பனும் அவரைத் தவிர எனக்கு வேறே ஒருவரும் கிடையாதென்று சொல்லிவிட்டு ஹரி கீர்த்தனமும் நாம பஜனமும் பண்ணிக்கொண்டிருப்பாள்.

இப்படியிருக்கையில் ஒருநாள் நாமதேவர் தன் வீட்டிலே படுத்துக் கொண்டிருக்கும்போது ராத்திரிப்பதினைந்து நாழிகைக்குஒரு மழையும் பெருங்காற்றும் வந்துநாமதேவர் வீட்டைஆகாசத்திலேகொண்டுபோய்

விட்டது. அப்போது ருக்குமணிரமணன் சக்கரத்தைப் பார்த்து நீ போய் அந்தக்கூரையை யதாப்பிரகாரம் ஸ்தாபித்து அவ்விடத்தில் மழைபெய்ய வொட்டாமலும் காற்று அடிக்கவொட்டாமலும்பார்த்துக் கொண்டிருநாளுமிதோவந்துவிட்டேனென்று சொல்ல-அதுவுமப்படியே வந்து காத்துக்கொண்டிருந்தது. தானும் புறப்பட்டுவந்து அந்த வீட்டிலே விழுந்துபோன சுவர்களுக்குத் தன்கையினுலேமண்ணைப் பிசைந்து அடிப்படைபோட்டுச் சுவர்வைத்து மேல் கூரையுங் கட்டினுர்.

கேளுங்கள் சாதுக்களே பகவான் நினைத்த மாத்திரத்திலே குறைவில்லாமல் எல்லாச் செல்வமுமுண்டாவதாக இருந்தபோதிலும்-தன்னுடைய தாசர்களுக்கு அதிகச்சம்பத்தைக்கொடுத்துச் சம்சாரமாயையிலே அகப்படும்படியாய்ப் பண்ணுமல் அடிக்கடி ஒவ்வொரு துன்பத்தையுண்டாக்கித் தன்னிடத்தில் பக்தியுண்டாகும் பொருட்டுத்தான் அதை நிவர்த்திபண்ணுகிறவர்போலக் காட்டுவார். இப்படியே பாண்டவர்களுக்குத் துரியோதனனை நிர்மாணம்பண்ணி அவனைக்கொண்டு எந்நேரமும் துன்பங்களைப் பண்ணிவிட்டு அதை நிவர்த்திபண்ணுகிறவர் போலத் தன்னைக்காண்பித்துப் பாண்டவசகாயனென்று கொண்டு இருக்கிறுர். பவசமுத்திரத்திலே முழுகிப்போகாமடைய தாசர்களை ரக்ஷிக்கிற நிமித்தம் பகவான் இப்படிப் ப கொண்டு வருவதானது பெற்றதாயானவள் தன்னுடைய குழந்தைகளுக்கு இஷ்டமான பலகார பக்ஷணங்களைக் கொடுத்துத்திருப்திபண்ணிவளர்த்துக்கொண்டுவருகையில் மாந்தம் கணம் முதலிய நோய்கள் வராமல் இடை இடையே கொஞ்சம் கொஞ்சம் மருந்து கொடுப்பது போலுமிருந்தது. பகவான் இப்படி வீட்டைக்கட்டி அவ்விடத்திலே விழுந்த செத்தை குப்பைகளைத் தன்கையினுலே வாரித்தூரமாகக் கொண்டுபோய்க் கொட்டிக்கொண்டேயிருக்கிறபொழுது பொழுது விடிந்து நாமதேவர் வெளியிலேவந்து மின்னல்போலே பிரகாசிக்கும்படி திவ்வியமான பீதாம்பரத்தைக் கட்டிக்கொண்டிருக்கிற பகவானைக் கண்ணுலே பார்க்கப் பகவானும் நாமதேவரைப்பார்த்து ஓ நாமதேவா மிகுதியும் காற்றுமழைவந்தது அதினுலே உன்னுடைய குடிசைபோய் விட்டது. நீ சமுசாரவேலையைப்பாராமல் எந்நேரமும் என்னையேபஜனை பண்ணிக்கொண்டிருக்கிற படியினுலே உன் தாயார் குணுபாய் நிஷ்டூரம் சொல்லுவாளென்று ராத்திரியே ஓடிவந்து பறந்துபோன கூரையையும் சேர்த்துச் சுவரும் போட்டுக் கட்டினேனென்று சொல்லிக்கொண்டிருக்கையில் - குணுபாயும் ஓடிவந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்தாள். அதன்மேல் பகவான் நாமதேவருடனே பேசிக்கொண்டு வீட்டுக்குள்ளேபோய் உட்கார்ந்தார்.

அப்போது ஜெனீபாயானவள் வேகமாய்வந்து நமஸ்காரம் பண்ணி விட்டுப் பகவானுடைய சரீரம் வருந்தியிருப்பதுகண்டு உடம்பை பிடித்துக்கொண்டு கிருபா சமுத்திரா- கருணாலயா-மனமோஹனனே-யெங்களை ரக்ஷிக்கிற நிமித்தம் உமது சுயசரீரத்தினாலே பிரயாசப் பட்டீரோ வென்று சொல்லிக்கொண்டிருக்கையில்- நாமதேவர் சுவாமி உங்களுக்குச் சரீரத்திலே யிளைப்பும் ஆயாசமும் மிகுதியாயிருக்கிறபடியினாலே எழுந்திருந்து வாருமெல்லாரும் கூடிச் சாப்பிடுவோமென்று சொன்னார். அதைக்குணாபாய்கேட்டுபோஜன பாத்திரங்களைக் கொண்டுவந்துவைத்தாள். அப்பொழுது கோவிந்தன்- விட்டலன்-நாராயணன் - மாதவன் என்ற நாமதேவருடைய பிள்ளைகள் நாலுபேரும் பகவானும் ஒருபந்தியும்-குணாபாய்-ராதாபாய்-நாமதேவர் இவர்கள் ஒரு பந்தியுமாக உட்கார்ந்து சாப்பிட ஆரம்பித்தார்கள். ஜெனீபாய் மாத்திரம் பரிமாறிக்கொண்டு மனதிலே வியசனமுள்ளவளாய்ச் சுவாமி இப்பொழுது என்னைமட்டும் நீக்கிவிட்டு மற்ற எல்லாரையும் கூட்டிக்கொண்டு சாப்பிடுகிறது கரும்பினின்று சாரத்தைமட்டும் வாங்கிக்கொண்டு சக்கையையெறிந்துவிட்டது போலுமிருக்கிறதென்று எண்ணிக்கொண்டு இருந்துவிட்டாள். கொஞ்சம் சாப்பிட்டவுடன் பகவான் சாதம் இப்பொழுது நன்றாக இல்லையென்று நாமதேவரைப் பார்த்துச் சொல்ல- அவர்ஜெனீயானவள் கஷ்டப்படுகிறாளென்று தேவரீருக்குச் சாதம் ருசிக்கவில்லை. தொட்டிலிலே குழந்தை அழுதுகொண்டிருந்தால் தாய்க்குச் சாதமெப்படி ருசிக்குமென்றுசொல்ல -ருக்குமணிவரனானவர் சாப்பிடாமல் கையைவைத்துக்கொண்டு சற்றுநேரமிருந்து எழுந்திருந்துவிட்டார். ராதாபாய் குணாபாயிருவரும் இதைக்கண்டு மிக ஆச்சரியப்பட்டதல்லாமல் அந்தக்குணாபாயானவள்சுவாமி சாப்பிட்டுக்கொண்டிருந்த உச்சிஷ்டத்தையெடுத்துக்கொண்டு ஜெனியை யழைத்துஇந்த உச்சிஷ்டம் பிர்மாதிதேவதைகளுக்குந் துர்லபமானதுநாமதேவருடைய சினேகத்தினாலே உனக்குக்கிடைத்தது என்று சொல்லிக்கொடுக்க அதைக்கொண்டுபோய்ப் பிறகு சாப்பிடலாமென்று பத்திரம்பண்ணிவைத்திருந்தாள். அப்படியிருக்கையில் நாமதேவரும் பகவானும் ஒரு ஆசனத்திலே படுத்துகொண்டிருந்து நாமதேவர் மட்டும் நித்திரைபோய்விட்டார். பகவான் மெள்ள எழுந்திருந்து ஜெனீபாயியண்டையிலே வந்து மெதுவாய் எனக்குப் பசியாயிருக்கிறது நாமதேவரோடே சாப்பிடுகிறபோது நீ விசனப்பட்டபடியினாலே அந்தப்படியே வைத்துவிட்டேன். இப்போது பசிக்கிறதென்றுசொல்ல- அப்போது ஜெனீபாய் ஓ ருக்குமணிகாந்தா உம்முடைய கிருபைக்குப்பதிலாக உமக்குக்கொடுக்கிறதற்கு என்னுடைய ஹிருதயத்தைத் தவிர ஒன்றையுங்காணேன். நீர் வைத்துவிட்டுப்போன உச்சிஷ்டத்தைக் குணாபாயெனக்குக் கொடுத்தாள் அதைவைத்திருக்கிறேன். அதை இப்பொழுது உங்களுக்குக்கொ

டுக்கமனசு சங்கோசமாயிருக்கிறதென்றுசொல்லக் கேட்டுப் பண்டரிநாதன் நீ சங்கோசப்படாமல் அதைக் கொண்டுவா என்று பிரியத்துடனேசொல்ல- அப்படியே அதைக்கொண்டுவந்து பகவான் முன்னே வைக்க ஜெனீபாயியையுங்கூடவைத்துக்கொண்டு இரண்டு பேருமாய்ச் சாப்பிட்டார்கள். இதை ருக்குமணிதேவிபார்த்து இதுவென்ன ஆச்சரியம். எவனுடைய பிரபாவத்தைச் சுருதிஸ்மிருதி நிகமாகமங்களும் காணக்கூடாதோ எவன் கைலாசவாசிக்கும் அசாத்தியனோ அவன் நாமதேவருடைய ஜெனீயின் உச்சிஷ்டத்தைச் சாப்பிடுகிறுனென்று ஆச்சரியப்பட்டாள். இவ்விடத்திலே ஜெனீ பாயும் பகவானும் சாப்பிட்டுக் கை அலம்பிக்கொண்டு அப்படியே படுத்துக்கொண்டார்கள். அப்படியிருக்கக் குணுபாயியானவள் இதெல்லாம் பார்த்துக்கொண்டிருந்து மெள்ள எழுந்திருந்து நாமதேவரண்டையிலே வந்து பகவான் எழுந்திருந்ததும் ஜெனீபாயுடனே கூடச் சாப்பிட்டதும் அங்கே படுத்துக்கொண்டதுமாகிய இந்த வைபவங்களைச்சொல்ல- அதற்கு நாமதேவர் அவர் பக்த வச்சலன் எங்கே சத்பாவமிருக்கின்றதோ அங்கே காத்துக்கொண்டிருக்கிறவர். ராமாவதாரத்திலேசபரியினுடைய உச்சிஷ்டத்தைச் சாப்பிட்டவரல்லவாவென்றுசொன்னபடியால் அதைக் கேட்டுக்கொண்டுபோய்விட்டாள். ஜகந்நிவாசன் சிறிதுநேரஞ் சென்றுவந்து நாமதேவர் படுக்கையிலே கூடப்படுத்துக்கொண்டார். பிறகு விடிய ஜாமத்துக்கு எழுந்திருந்துபோய் ஜெனியினுடைய படுக்கையின்மேலே உட்கார்ந்து அவளைத்தட்டி எழுப்பினபொழுது-அவள் அதிகத்தூக்கக்கலக்கமாக இருந்தபடியால்- கழுத்திலே கையைக்கொடுத்துத் தூக்கி உட்காரவைத்துத் தன்னுடைய பீதாம்பரத்தினாலே அவள் முகத்தைத்துடைத்து ஓ ஜெனீ நீ மாவு அரைக்கும் பொழுது உன்னோடு நானுங் கொஞ்சநேரமரைத்துக்கொண்டு சந்தோஷமாக இருக்க விரும்புகிறேனென்றார். உடனே அவள் எழுந்திருந்து எந்திரத்தைப் பூட்டித் தானியத்தையுங்கொண்டு வந்து வைக்கப் பகவான் அவளைப்பார்த்து நீ யெந்திர அச்சைக்கையால் தொட்டுப்பாடிக்கொண்டு மாத்திரமிரு நானரைத்துவிடுகிறேனென்று சொல்ல - அவள் பாட ஆரம்பித்துக்கேளாய் அன்பானதோழீ நிவர்த்திதேவர்- ஞானதேவர்- சோபானுதேவர்-இவர்களே யெனக்குப் பரம்பரையானபந்து- அவர்களுடைய பிரசாதத்தினாலேதான் ஸ்ரீ சாரங்கதரன் என்பேரில் கிருபை பண்ணினார். நாமதேவர்தான் என்னுடைய தகப்பன்- ராதாபாய்தான் என்னுடைய பிரியமானதாய்- கபீர் சாவந்தன் முதலியவர்கள்தான் என்னுடைய சகோதரர்கள். அவர்கள் செய்யும் அதிசயத்தை யான் என்னவென்றுச் சொல்லுவேன். கேளாய் தோழீ பக்தி செய்து அவர்கள் சக்கரபாணியைச் சுவாதீனமாகப் பண்ணிக்கொண்டு அனேக அற்புதம் விளைத்துச் சுகானந்தத்திலே திருப்தியாயிருந்தார்கள்

பயிட்டினிபுரத்திலே பிராமணர்கள் ஞானேஸ்வரரை அவமானமாய்ப் பேசினபொழுது - அவர் எருமைக்கடாவாயினலே நாலுவேதத்தையும் சொல்லுவித்தார். கோராகும்பார் பாண்டுரங்கனுடைய தியானத்தினலே தன் குழந்தையை மண்ணேடே கூடமிதித்து விட்டதல்லாமல் பகவானுடைய ஆணையைத் தள்ளிவிட்டதென்று தன் கையையும் வெட்டிவிட்டார். நாமதேவருடைய கீர்த்தனமகிமையைக் கேட்டதினலே அந்தக்கையானது திரும்பவும் வந்தது. குழந்தையைப் பாண்டுரங்கன்கொண்டுவந்துகொடுத்து விட்டான். என்ன ஆச்சரியம் கேள் தோழி- சாவந்தனை தோட்டக்காரனேவனமாலியானவர்காணப்போனவிடத்திலே அவன் தன்ஹிருதயத்தைப் பிளந்து அதிலே அவரை வைத்துக்கொண்டான், அனந்தங்கோடி பிர்மாண்டத்தையும் தன் வயிற்றிலே வைத்துக்கொண்டிருக்கிறவனும் சந்தோஷமாய் சாவந்தனுடைய ஹிருதயத்திலே ஒளித்தான். அப்படி ஒளித்தவரை நாமதேவர் உடனே வந்து வெளிப்படுத்தினர். என்னுடைய இஷ்டபந்துவான கபீர் காசிநகரத்திலே தறியிலே உட்கார்ந்து வஸ்திரம் நெய்யும்போது தியானத்தால் மெய்ம்மறந்திருக்கச் சக்கரபாணியானவர்தான்போய் அவருக்குப் பதிலாய் உட்கார்ந்துகொண்டு நெய்துகொடுத்தார். சிவராத்திரியன்றைக்குக் கிழக்கு முகமாயிருந்த நாகநாதசுவாமி சந்நிதி நாமதேவருடைய கீர்த்தனம் கேட்கிற நிமித்தம் மேற்குமுகமாயிற்று. அப்படிக் கீர்த்தனம் செய்துகொண்டிருக்கும்பொழுது ஒன்பது லக்ஷம் பிரகாசமான பதாகங்கள் ஆகாசத்திலேயிருந்திறங்கின. ஆனதினலே அகடிதமான இந்தச்சாமர்த்தியங்களுக்குக்காரணம்என்னேடுமாவரைக்கின்றவரே. இவருடைய பெருமையைச் சுருதிசாஸ்திரத்தினலேயும் வர்ணித்து முடியாது என்று பாடின பாட்டைப் பகவான் ஆனந்தமாய்க்கேட்டுக்கொண்டு மாவரைத்துக்கொண்டிருந்தார்.

அப்போது குணபாயானவள் இந்தச் சப்தத்தைக்காதிலே கேட்டு தன் படுக்கையிலிருந்தபடியே ஓ ஜெனீ உன்னேடேகூட மாவரைக்கின்றவள் ஆரென்றுகெட்க- இவள் பேசாமலிருந்ததால் இந்த மாவு அரைப்பதற்குக் கூலிக்காரி ஒருத்தியை வைத்துக்கொண்டாயோ-இந்த இருட்டில் கூலிக்காசுவாங்குவதற்கு வந்திருக்கிறவளாரடீ யென்று திட்டிக்கோபமாய் கேட்கப்-பகவான் மாவரைக்கவந்திருக்கின்றநான் கிருஷ்ணம்மாள் நான் கூலிவாங்குவதற்கு வரவில்லை பாட்டுக்கேட்பதற்காக வந்து மாவு அரைக்கிறேனென்று சொல்ல-அப்போது நாமதேவர் தாயாரண்டையில் ஓடிவந்து தாயே அவர் ஜகத்ஜீவனன் அல்லவோ உனக்குத் தெரியவில்லையா அவரைத் திட்டினயே என்று சொல்ல- குணபாய் மனதிலே லச்சையடைந்து வீட்டுக்குள்ளே வந்து ஜெனீ இப்படிப்பட்ட பாக்கியசாலியா-மகா ஆச்சரியம்- ருக்குமணிகாந்தனே

இப்படிச்சுவாதீனம் பண்ணிக்கொண்டாளா-நான் அதை அறியாமல்விபரீதம் பண்ணினேனே-பிர்மாதியர்களுக்கும் துர்லபமானவனை நான் கோபித்துக்கொண்டேனே-ஆ-ஆ-இப்படிப் பகவானுக்கும் பக்தியையுடைய் ஜெனீக்கும் அபராதம் செய்த எனக்கு என்ன கொடியதண்டனை செய்தாலும் தகுமே யென்று விசனப்பட்டுக் கொண்டிருந்தாள். அப்போது பகவானும் ஜெனீபாயும் மாவையெல்லாம் எடுத்துவைத்துவிட்டுப் பின்னையும் பொழுதுவிடியக் கொஞ்ச நேரமிருந்தபடியினாலே- ஆனந்தமாய்ப் பேசிக்கொண்டிருக்கையில் பகவான் நித்திரைபோய்விட்டார். பிறகு அருணோதயமானவுடனே ஜெனீபாய் ஏ சுவாமி எழுந்திரும் கோவிலிலே அர்ச்சனை பண்ணுவதற்கும் தரிசனம் பண்ணுவதற்கும் அனேக பக்தர்கள் வந்து காத்துக்கொண்டிருப்பார்களென்று சொல்லச் சுவாமி எழுந்திருந்து ஜெனீபாயினுடைய பெருமையை உலகத்தாருக்குக்காட்ட நினைத்துத் தம்முடைய பீதாம்பரம் திவ்வியாபரணம் கவுஸ்துவ மணிமுதலானவைகளைப்போட்டுவிட்டு ஜெனீயுடையகந்தையைப் போர்த்திக்கொண்டு கோவிலுக்கு வந்துவிட்டார். கோவிலார் கதவைத் திறந்து உள்ளே வந்து பார்க்கிறபோது ஜகந்நிவாசனான நாராயணன் கந்தையைப் போர்த்திக்கொண்டிருக்கிறதைப்பார்த்து ஆச்சரியப்பட்டுச் சிலர் சுவாமி ஆதிநாராயணா- க்ஷீரசாகரவாசி - ருக்குமணிகாந்தா- உமக்கு இந்தக்கந்தை யேற்குமாவென்றும்- சிலர் லீலாநாடகா— பக்தர்களிடத்திலே அத்தியந்தம் பிரேமையானவனே- கர்மத்தை நிஷேதம் பண்ணிச் சித்தாந்தத்தை நிலை நிறுத்தும்பொருட்டு இப்படிச்செய்தீரோ வென்றும்- சிலர் இராமாவதாரத்தில் சபரியிருந்தது போலவும்- கிருஷ்ணாவதாரத்திலே கூனியிருந்ததுபோலவும்— இப்பொழுது எவள் இருக்கின்றாள். எவளுடைய மோகத்தில் அகப்பட்டு இந்தக் கந்தையைத்தரித்தீர் என்றும் சொன்னார்கள். அர்ச்சகன்கந்தையையெடுத்துப் பார்த்தவுடனே ஆபரணங்களொன்றையுங் காணாமையால்நமது-சுவாமி யாராவது அன்போடு ஒரு கவளம் அன்னம் கொடுத்தால் அவர்களுக்குக் கடலைக்கடைந்து அமிர்தம் கொடுப்பவர் இப்பொழுது யாருக்கோ தன்னுடையஆபரணம்பீதாம்பரமுதலானவைகளையெல்லாம்கொடுத்துவிட்டு- இந்தக் கந்தையை வாங்கிக்கொண்டு வந்தார். நாம் கோவில் கதவைப் பூட்டிக்கொண்டு போயிருக்கையில் இந்தப்படிச் செய்தால் நாமென்ன செய்வோம். இது யாருடையதோ தெரியவில்லை யென்று விசாரித்துச் சிலநாளைக்கு முன் கோவிலில் வந்திருந்த ஜெனீயென்பவளுடையதென்றறிந்து அவளைக் கேட்கவேண்டுமென்று யோசனை பண்ணிக்கொண்டு அவளிடத்துக்குப் போய்- ஓ ஜெனீபாய் நீ ருக்குமணிபதியானவரை உன்னுடைய நிஜபக்தியினால் வசிகரம் பண்ணிக்கொண்டாயாதலால் நாங்கள்சாத்தும் வஸ்திரங்களும் பண்ணுகிற பூசைகளும் அவர் மனசுக்குப் பிடிக்கவேயில்லை. நேற்று இராத்திரி அவர் உன்னு

டைய வீட்டிற்கு வந்து தன் பீதாம்பரத்தையும் ஆபரணங்களையும் போட்டுவிட்டு உன்னுடைய கந்தையை அணிந்துகொண்டு வந்தபடியால்- எங்களாசார கர்மங்கள் யாவும் கெட்டுப்போய் விட்டன. அஃது இருக்கட்டும் அந்தப்பீதாம்பரத்தையும் ஆபரணங்களையும்கொடுத்தால் நாங்கள் சுவாமிக்குச் சாத்தலாமென்றதற்கு - அவள் அவை தன்னிடம் இல்லை யென்று சொன்னதால் அது உன்னிடத்தில்தானிருக்கும் நீ கொடுக்கவேண்டும் இல்லாவிட்டால் உன்னைத் தண்டிப்போமென்று சொல்ல- அவள் அந்த ஆபரணங்கள் பீதாம்பரங்களொன்றையும் நான் எடுத்ததில்லை நான் கண்ணாலே கண்டிருந்தால் என் கண்ணிரண்டும் எனக்கு உதவாமல் போகக்கடவதென்று பிரதிக்கினை பண்ணினாள். அதன்மேல் இவர்கள் அவளிருந்த இடத்தைச்சோதித்துப் பார்க்கையில் - ஆபரணங்களெல்லா வற்றையும் பீதாம்பரத்தில் முடிந்து ஒரு பக்கத்தில் வைத்திருக்கக்கண்டு கோவிலார் முதலானவர்கள் சாக்ஷாத் பரப்பிர்மமான கருடத்துவஜனுடைய திவ்விய ஆபரணத்தைத்திருடிக் கொண்டு இல்லை யென்று சாதித்தவளை இருப்புக்கழுவிலே போடச் சொல்லிச் சாஸ்திரம் சொல்லுகிறது என்றுசொல்லிஅவளை இழுத்துச் சந்திரபாகைத்தீர்த்தக்கரையிலே கொண்டுவந்து நிறுத்தினார்கள். அப்போது ஜெனீபாய் ஆனவள் உருக்கத்தோடே ஓ சுவாமி பக்தவச்சலா- பதிதபாவனா-சாரங்கதரா- ருக்குமணிகாந்தா- பாண்டுரங்கா-நான் பரதேசி-அனாதை-ஒன்றையுமறியேனேயெனக்கு இப்படித்துன்பம்வந்ததே யென்னிடத்திலே கிருபைபண்ணி ரட்சியும் என்றுசொல்ல-அப்போது ருக்குமணிபதியானவர்ஓடிவந்து இவளுக்காகப்போட்டிருக்கிற இருப்புக் கழுமரத்தை பஸ்பம் பண்ணிவிட்டார். சகலரும் அதைப்பார்த்து ஆச்சரியப்பட்டுத் திக்பிரமையாய் இவள் பக்தியே பக்தி இவளே தன்னியமானவள். இவள் நினைத்த உடனே பண்டரிநாதனுக்கு உருக்கம் வந்து இந்தக்கழுமரமும் பஸ்பமாய்ப்போயிற்று. இவள்பேரில் சிறிதும் குற்றமில்லை, இது பண்டரிநாதனுடைய ஓர் திருவிளையாட்டென்று நானாவிதமாக ஸ்தோத்திரம் பண்ணிவிட்டு போய்விட்டார்கள். ஜெனீபாயும் தன்னிடம்போய் வழக்கம்போல இருந்தாள்.

பின்னொருகாலத்தில் இன்னுமொரு அதிசயத்தைக் கேளுங்கள் பாக்கியசாலிகளே ஒரு நாள் ஜெனீபாயியானவள் தானிருக்கும் குச்சு வாசல்படியிலே உட்கார்ந்து கொண்டு கவிகள் பண்ணிக்கொண்டிருந்தாள். அப்போதுபகவான்சர்வாந்தரியாமியானபடியினாலே கோவிலிலே இருந்தபடியே இந்தக் கவிகளைப் பிரியத்தோடே ஏட்டிலே எழுதிக் கொண்டிருந்தார். இப்படி எழுதிக்கொண்டிருக்கிறபோது ஞானதேவர் தரிசனத்துக்கு வர- அவரைக்கண்ட உடனே பண்டரிநாதன் அந்த ஏட்டை மறைத்துக்கொண்டார், அதைக்கண்ட ஞானதேவர் வந்து சா

ஞாரவிந்தத்தில் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சுவாமி யேகாந்தத்தில் உட்கார்ந்துகொண்டு என்ன வெழுதிக்கொண்டிருந்தீர்- என்னைக்கண்டவுடனே சங்கோசமாய் வைத்துவிட்டீரே என்று சொல்லப் பண்டரிநாதன் ஞானதேவா ஜெனீயானவள் கவிகட்டுகிறாள். அது எல்லாவற்றிலும் பிரியமாயிருந்தபடியினாலே யெழுதினேனென்று சொல்ல- ஞானதேவர் ஆச்சரியப்பட்டு ஜய ஜய ருக்குமணிகாந்தா ஜெனீயானவள் உம்மிடத்தில் பக்திபண்ணிக்கொண்டு உம்மைத்தானே ஸ்தோத்திரம் பண்ணுகிறாள் அப்படியிருக்க உம்முடைய ஸ்தோத்திரத்தை நீரே எழுதவேண்டுமோ- தேவரீருடைய பிரபாவத்தையும் அளவில்லாத கிருபையையும்சுருதிசாஸ்திரகமாகமங்களும்வர்ணிக்கிறதே- உம்முடைய அனந்தகவியான குணம்புதியிலிருந்து வியாசவால்மீகாதி மேகங்கள்வருஷித்துக்கொண்டிருக்கிறதே-பிர்மாதிதேவதைகள்சரஸ்வதிதேவி-சேஷன் முதலானவர்களும்-மற்றப்பக்தகோடிகளும் -நித்தியசூரிகளும்-உம்மைவர்ணித்து ஸ்தோத்திரம்பண்ணிக்கொண்டிருக்கஇந்த ஜெனீயுடைய கவிக்குப் பிரியப்பட்டுத் தேவரீரே எழுதிக்கொண்டுஎன்னைக்கண்டவுடனேஏன்மறைத்தீர். பதியினுடையஅந்தரங்கத்தைப் பதிவிரதையானவளறிவதுபோலத் தேவரீருடைய அந்தரங்கம் எங்களுக்குத் தெரியாமலிருப்பதுண்டோ சுவாமி உமக்கு அவளிடத்தில் அதிகப் பிரியமிருக்கின்றது. இத்தனை பிரியமாயிருக்கிற ஜெனீயை நாமதேவர் விட்டுக்குப்போய்ப் பார்த்துவரவேண்டுமென்று எனக்கு அபேக்ஷையிருக்கிறது. தேவரீருங்கூடவரவேண்டுமென்று சொல்லப்பகவானும் சந்தோஷமாய்ப் புறப்பட்டு ஞானதேவரோடே வருகிறபோது பின்னையும் அனேகபக்தர்கள் வந்தார்கள். அப்படியெல்லாரும் சேர்ந்துவருகையில் நாமதேவர் எதிர்கொண்டுவந்து பகவானையும் ஞானதேவரையும் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து ஆசனத்திலுட்காரவைத்துக் கீர்த்தனம் பண்ணும்போது சகலமான பக்தர்களும் ஆனந்தமாய்க் கேட்டுக்கொண்டிருந்தார்கள். அப்போது பகவான் நாமதேவரைப் பார்த்துச் சகலமான சாதுக்களும் ஜெனீபாயியைக் காணவேண்டுமென்று அபேக்ஷையாக வந்திருக்கிறபடியினாலே அவளை அழைப்பியென்றுசொல்ல-அப்போது சாணிமிதித்துக்கொண்டிருக்கிற ஜெனீயை அழைப்பித்தார், ஜெனீயானவள்வந்து பாண்டுரங்கனையும் ஞானதேவர் முதலானவர்களையும் சேவித்துவிட்டு ஒரு பக்கத்தில் நிற்க-அப்போது ஞானதேவர் நாமதேவரைப்பார்த்து நாமதேவா இன்றைக்கு ஒரு அதிசயத்தைக்கண்டேன். ஜகந்நிவாஸன் ஜெனீசேகரம் பண்ணின கவியைத்தானேஏகாந்தத்தில் எழுதிக்கொண்டிருந்து என்னைக் கண்டவுடன் மறைத்துக்கொண்டாரென்று சொல்லப்- பக்தபூஷணன் கேட்டு ஜெனீயுடைய நிஜபக்தியின் ரசத்தை நான் எழுதினதினாலே குறையென்ன. ஜெனீயினுடைய சொல்லுகள் பிராகிருதமாயும் கொச்சையாயுமிருந்தாலும் சுய ஆனந்

தகரமாயும் நிஜபோதமாயுமிருக்கிறதென்று சுத்தசத்துவமாகிய ஏட்டில் நான் யெழுதினேன். ஆகையால் ஜெனீபாயியுடைய கவிகளைச் சொல்லுகிறவர்கள் வாசலிலே நான் நின்றுகொண்டிருந்து அவர்கள் சமுசாரத்தில் ஒரு ஆபத்துமில்லாமல்சகலமங்களகரத்தோடே தேகாந்தியபரியந்தமிருந்து அப்பால் மேலாகிய சாயுச்சியமுக்தியை அடையும்படிசெய்வேனென்று சொன்ன உடனே ஞானதேவரும் மற்றச் சாதுக்களும் ஆனந்தத்தோடேகையைக் கொட்டிக்கொண்டு சிரித்தார்கள். அப்பொழுது கபீர்- சோக்காமேளன்- ரோகிதாஸன்- பட்டாணியென்கிறவன்-பயக்கசாய்பு என்கிறவன்-கமாலுபக்தன்-புல்லரியென்கிறவன்-முகுந்தராஜா- முதலான பக்தர்கள்இருந்தார்கள். ராதாபாய்-குணபாய்-நாமதேவர்- ஞானதேவர்-இவர்கள் சேனைகளின் மத்தியில் ராஜாவைப்போலும் நக்ஷத்திரங்களின் மத்தியில் சந்திரனைப்போலும் விளங்கினார்கள். ஞானதேவர் ஜெனீயைப் பார்த்து ஓ ஜெனீ நாமதேவர் தான் பிரகலாதராயும்- அங்கதனுகவும்- உத்தவராகவுமிருந்து இப்போது கலியுகத்திலே நாமதேவராய்ப் பகவானை ஆராதித்துச் சுவாதீனம் பண்ணிக்கொண்டார். நீ பூர்வத்திலென்ன சுகிர்தம்பண்ணிணுய் - பகவானை யெந்தஜன்மத்திலே ஆராதித்தாயென்று கேட்க- ஜெனீயானவள் பகவான் அயக்கிரீவஅவதாரமெடுத்தது முதல் அவர்திருவடிகளை அடுத்து இருக்கிறேன். தச அவதாரமெடுத்து நானுவிதலீலைகள் பண்ணின போதும் கூடவே யிருந்தேன் என்று சொல்ல விதுகேட்டு ஞானதேவர் ஆச்சரியப்பட்டு அப்படியானுல் நீ அபார புண்ணியராசி அதனுல்தான் பிர்மாதிதேவதைகளுக்குத் துர்லபமான ஹிருஷீகேசன் வசப்பட்டிருக்கின்றுரென்று சொன்னுர். பிறகு பகவான் சாதுக்களைப் பார்த்து ஓ சாதுக்களே இனி யின்னுர் சொல்லுகிறதை யின்னுரெழுதுகிறதென்று ஒரு நிர்ணயம் பண்ணுகிறேன். கேளுங்கள் ஞானேசுவரர் சொல்லுகிற கவி ரத்தினங்களைச் சச்சூதானந்த பிராமணன் எழுதவேண்டும்- நிவர்த்திதேவர் கவி ரத்தினத்தைச் சோபானுதேவ ரெழுதவேண்டும்- முக்தாபாய் கவிகளை ஞானேசுவரர் எழுதவேண்டும் -சோகாபரமானந்தர் கவிகளை விசோபாகேசர் எழுதவேண்டும் -சாவந்தன் கவி ரத்தினத்தைச் சிவோபா அர்ச்சகர் எழுதுவார்- கூர்மதாசருடைய கவியைச் சயத்துதேவர் எழுதுவார்-அனந்தபட்டர் பிரமருடையகவியைச் சோக்காமேளன் எழுதவேண்டுமென்று நியமித்து நாமதேவருடைய கவியும் ஜெனீபாயுடைய கவியும் தாம் எழுதுகிறேுமென்று ஒப்புக்கொண்டு ஞானதேவரைப் பார்த்து இனிமேல் ஜெனீயினுடைய கவிகளை உங்களுக்குக் காட்டுகிறதற்குச் சங்கோசமில்லையென்று சொல்ல- இவைகளைச் சாது ஜனங்கள் கேட்டு விசுவம்பரரான உம்மை இப்படி வசியம் பண்ணிக்கொண்ட ஜெனீயினுடைய பாக்கியத்தை யொருவர் அளவிட்டுச் சொல்லமுடியுமா-மதியைச் சேர்ந்தமான் எல்லாராலும் வணங்கப்

படவில்லையா-கிரகங்களைச் சேர்ந்தராகுகேதுஉயர்ச்சியடையவில்லையா-அவைபோலஉன்னை அடுத்துஉனதுபூரணகிருபையைப்பெற்றஜெனீயை இனியாராவது வேலைக்காரியென்றுஇழிவாகச்சொல்லுவார்களா-அவள் தான் எல்லாராலும் வணங்கத்தக்கவளென்று ஸ்தோத்திரம் பண்ணி னார்கள். அப்போது நாமதேவர் தீர்த்தங்கொண்டுவந்து பகவான் முத லாகச் சாதுக்களுடைய பாதத்தை அலம்பி ஸ்ரீ பாததீர்த்தம் வாங்கிக் கொண்டு பகவானுக்குச் சோடச உபசாரங்கள் பண்ணிச் சாதுக்களுக் கும் உபசாரம் பண்ணினார். பிறகு பகவான் பக்தர்களைக் கூட்டிக் கொண்டு கோவிலுக்குப்போய்ச் சேர்ந்து ருக்குமணிதேவியைப் பார்த் து நடந்த வர்த்தமானமெல்லாம் சொன்னார். இந்த அத்தியாயம் சம் பூரணம். இந்தச் சரித்திரத்தைச் சிரவணம் பண்ணினவர்கள் ஸ்ரீமந்நா ராயணனுக்கு விசேஷ பக்தராகப் பூலோகத்திலிருந்து பிறகு நித்திய சூரிகளுக்கு ஒப்பான பதவியை அடைவார்கள். ஸ்ரீ வாசுதேவஜகத்தி ரயகுரவேநம:.

இருபத்திரண்டாவது அத்தியாயம்.

# மச்சேந்திரநாதர் சரித்திரம்.

ஸ்ரீ இராமசந்திர பரப்பிரமணேநம: பக்தவிஜயமென்று சொல் லப்பட்ட இந்தக் கிரந்தமானது பலகற்பகவிருட்சங்கள் நிறைந்ததோட் டத்தையொக்கும். அதிலுள்ள ஒவ்வொரு விருட்சமும் தன்னையடைந் தவர்கள் விரும்பியவற்றைக் கொடுப்பதுபோல இதிலுள்ள ஒவ்வொரு சரித்திரமும் சிரத்தையோடு தன்னைச் சிரவணம் பண்ணினவர்கள் விரும்பிய சகல செல்வத்தையும் கொடுத்துத் தேகாந்தத்தில் பேரின்ப வீட்டில் சேரச்செய்யும்- அப்படிப்பட்ட இந்தக் கிரந்தத்தின் முன் அத் தியாயத்தில் பகவான் ஜெனீயினுடைய கீர்த்தியை விளங்கப் பண்ணி ன விருத்தாந்தத்தைக் கேட்டீர்களே இந்த அத்தியாயத்தில் மச்சேந் திரநாதர்-சாரங்கதேவர் இவர்கள் சரித்திரம் சொல்லப்படுகின்றது. கேளுங்கள் ஒரு நாள் க்ஷீரசாகரத்திலே கைலாசவாசியான பரமசிவன் உல்லாசமாய்ப் பார்வதிதேவியோடு உலாவிக்கொண்டிருக்கையில் ராம நாமபஜனம் பண்ணினார். அதைக்கண்டு பார்வதிதேவியானவள் அவ

ருக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து-ஓ பிராணநாதா நீர் இப்பொழுது பஜிக்கிற ராமநாம மகத்துவத்தை யெனக்குச் சவிஸ்தாரமாய்ச் சொல்ல வேண்டுமென்றுகேட்க- அந்தச் சங்கர பகவான் மிகவும் சந்தோஷப் பட்டுப் பார்வதியைப் பார்த்து ஓபெண்ணே இப்பொழுது நீ கேட்கின்ற ராமநாமமஹிமையானது முனியீசுவரர்களுக்குந் தேவர்களுக்குங் கூடச் சொல்லுவதற்கு எளியதன்று வேதங்களாலும் சொல்லிமுடியாது. ஸ்ரீ ராமன் திரிமூர்த்திகளும் ஒன்றாகச்சேர்ந்து பூலோகத்திலே தரு மத்தை நிலைநிறுத்திமனுஷர்களுக்கும் தேவர்களுக்கு முண்டாயிருந்த துன்பத்தை நீக்கும் பொருட்டு எடுத்த அவதாரம். வீரம்- தயை- பொறுமை- கொடை முதலிய நற்குணங்களுக்கெல்லாம் தாய் போன் றவர். அவர்கையால் சொர்க்க பதவியையடைந்தவர்களைக் கணக்கிட்டு முடியாது. அவர் வரங்கொடுக்க மேன்மையடைந்தோர் பலர். அவ ரைத் தரிசனம் பண்ணிப் பரமபதத்தையடைந்தவர் அநேகர். அவரா லே தான் வருணச்சிரம தருமம் இராஜ தருமம் முதலியவைகள் மனி தர்களுக்கு நன்றாகவிளக்கப் பட்டன. அவர் நாமம் திரிலோகத்திற்கும் மூலமந்திரமாக உள்ளது. செபித்தவர்களுக்குத் தம்மையே கொடுக்கத் தக்கது. ஒரு பிறப்பிலேயே எழுபிறப்பிற்கும் மருந்தாயுள்ளது. அதை உச்சரித்துக்கொண்டு அவருடைய நீலமேகசியாமள ரூபத்தையும் சந் திரமண்டலம் போன்ற முகத்தையும்செந்தாமரைபோன்றநேத்திரங்க ளையும் எப்பொழுதும் தியானம் பண்ணிக்கொண்டிருப்பவர்கள் தங்கள் அபீஷ்டத்தின்படி சாலோக சாமீப சாரூப சாயுச்சியமென்னும் பதவிகளை அடைவார்கள். வால்மீகர் நாரதர் முதலானவர்களே அந் த நாமஸ்மரணையின் பலனையறிவார்கள். இன்னும் அதன்பெருமையைச் சொல்லப் புகுந்தால் விஸ்தாரமாயிருக்கும் என்று சொல்லி முடித் தார். இவ்வாறுசொல்லிக்கொண்டு வருகின்றகாலத்தில் அங்குள்ள கர் பத்தையுடையஒருமச்சமானது அந்தப்பார்வதிபரமேசுவரர்களைமிகுந்த ஆசையோடு பார்த்துக்கொண்டு நின்றது. பிரகலாதரானவர் தன் தாயார்கெர்பத்திலே யிருக்கும்போது-அவளை யிந்திரன் சிறையெடுத் துக்கொண்டுபோக அந்தச் சிறையை நாரதபகவான் கொண்டுபோய்ச் சவரக்ஷணைபண்ணிவைத்துக்கொண்டிருந்துஅந்தம்மாளுக்கு உபதேசம் பண்ண அவரும் கருப்பத்திலிருந்து அந்த உபதேசத்தைக் கேட்டது போல-இப்பொழுது பார்வதிக்கு உபதேசம்பண்ணினதை மச்சத்தின் கர்ப்பம்கேட்டு-ஸ்ரீ ராமபிரானைத்தியானம்பண்ணிக்கொண்டிருந்து-திவ் வியமான மனிதரூபத்தோடும் இயற்கை ஞானத்தோடும் விசுவோத் தாரணம்பண்ண அவதரித்தது. அவர் மச்சத்திலிருந்து வந்தபடியால் அவரை எல்லாரும் மச்சேந்திரநாதரென்று அழைத்தார்கள். ஆயினும் அவர் தன்னிடத்தில் மீன் நாற்றமிருந்தபடியால் ஒருவரேர்டும் நெருங் காமல் தன்னை யணுகாதவனென்று சொல்லிக்கொண்டிருந்தார். அவர்

சாக்ஷாத் ருத்திராவதாரமாகையால் வைராக்கியத்திலும் நிஜ போதத்திலும் சமுத்திரம்போன்றவராயிருந்தார்.

இவர் பூலோகத்திலே சகலஜீவனுக்கும் அந்தர சாக்ஷிபோலவும் இரண்டாம் விஷ்ணுபோலவும் நிர்க்குண ஆலயம் போலவும்பரப்பிர்மத்தின்நிஜவுருவம்போலவும் பிரகாசித்துப் பிரபஞ்சத்திலே அவதாரமான நாள் முதல் அவித்தையின் ஸ்பரிசம் கூட இல்லாமலிருந்தார். இப்படிப்பட்டவர் பல தீர்த்தங்களில் ஸ்நானம் செய்யவும் அனேக ஸ்தலங்களைத் தரிசனம் பண்ணவும் இச்சையாய்ப்புறப்பட்டு ஊர்களிலேவந்து தெருக்களில் பிக்ஷைவாங்கிச் சாப்பிட்டுக் காடுகளிலே வாசம்பண்ணிக்கொண்டுவரும்போது- ஒரு ஊரில் ஓர் வர்த்தகன் வீட்டுக்குப்போய் ஓதாயேஅனுகாதவனுக்குப் பிக்ஷையுண்டானால்போடவேண்டுமென்று சொல்ல-அந்த வர்த்தகனுடைய பெண்சாதி இந்தச் சப்தம் காதிலே கேட்டவுடனே அன்னத்தை யெடுத்துக்கொண்டு வெளியிலேவந்து பார்க்கிறபோது- அவர் மஹா தேஜசுடனே பத்தரைமாற்றுத் தங்கம் போன்ற சரீரத்தில் விபூதியைத் தூளிதம் பண்ணிக் காஷாய அங்கி போட்டுக்கொண்டு-இரண்டு சூரியர்போல விளங்குகின்ற மகரகுண்டல மணிந்தகாதும்- செந்தாமரைபோலப்பிரகாசிக்கின்ற முகமும்-விசாலமாய்க்கிருபையோடு கூடின நேத்திரங்களும் உடையவராயிருக்கிறரூபத்தைக் கண்ணினாலே கண்டு-யாரோ மகானென்று நினைத்துப்பிரியத்துடனே சாஷ்டாங்கமாய்ச் சேவித்து-சுவாமி நீர் எங்கே யிருக்கிறவர் இங்கே யெங்குவந்தீரென்று கேட்க- மச்சேந்திரநாதர் நானிருக்கிறது சூனியமந்திரனமேதாம்- அதைக்கண்டவர் மோக்ஷத்தைக்காணும் பாக்கியமுடையவராவாரென்று சொன்னார். பிறகு அந்த வர்த்தகனுடைய பெண்சாதி சுவாமி யானுக்கு யிருந்த திரவியமிருந்தும் நெடுநாளாகப் புத்திர சந்தானமில்லாமையால் எனது வீடு சந்திரனில்லாத ஆகாயம்போலவும்- விளைவில்லாத பூமியைப்போலவும்- ஜலமில்லாத நதியைப்போலவும் அழகில்லாமலிருக்கின்றது. ஆகையாலெனக்கு ஒரு புத்திர சந்தானம் உண்டாகும்படியாய்க் கட்டளையிட வேண்டுமென்று சொன்னாள். அதை மச்சேந்திரநாதர் கேட்டுக்கொஞ்சம் விபூதியை யெடுத்து மந்திரித்து அவள் கையிலேகொடுத்து இதைச் சாப்பிட்டுவிடு பிறகு உன்வயிற்றினின்று விஷ்ணுவுக்குச் சமானமான குழந்தையுதிக்கும். இதை அந்தரங்கமாய்ச் சாப்பிடென்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்.

அந்த அம்மாள் அந்த விபூதியை உடனே சாப்பிடாமல் சில தன் தோழிமார்களோடே இதன்விருத்தாந்தத்தைச்சொல்ல அவர்கள்சந்நியாசிகளை நம்பலாகாது பொடிப்போட்டு மனுஷர்களைமோசம்பண்ணுவார்

களென்று நானுவிதச் சமுசயந்தரும் வார்த்தையைச்சொல்லக் கேட்டு அறியாமையால் அமிர்தத்தை விஷமென்று நினைக்கிற மூடர்களைப் போல அந்த விபூதியை யெரிகிற அடுப்பிலே போட்டுவிட்டாள். இப்படிப் பன்னிரண்டு வருஷமான பிறகு தீர்த்தயாத்திரைக்குப்போன மச்சேந்திரநாதர் ஆகஸ்மீகமாய் அந்த வூருக்கேவந்து அந்த வர்த்தகன் வீட்டுக்குப்போய் அனுகாதவனுக்குப் பிக்ஷை யிடவேண்டுமென்று சொல்ல-இந்தக்குரலைக்கேட்டு அந்த வர்த்தகனுடைய பெண்சாதியானவள் பிக்ஷையெடுத்துக்கொண்டுவந்தாள். இந்தஅம்மாளைக்கண்டவுடனே முன் ஞாபகம்வந்து நாம் விபூதி மந்திரித்துக் கொடுத்ததினுலுண்டான புத்திரனைப் பார்க்கவேண்டும் அழைத்துக்கொண்டுவாவென்று சொல்ல-அந்த வர்த்தகன் ஸ்திரீயானவள் விபூதியை யெறிந்துவிட்டோமென்று சொன்னல் எங்கே சபித்துவிடுகிருரோவென்று பயந்து மௌனமாயிருந்தாள். அதைப் பார்த்து அவர் பயப்படாதே விபூதியை யெறிந்துவிட்டதும் சாப்பிட்டதும் உள்ளதைச் சொல்லென்று கேட்க-அவள் அந்த விபூதியை அடுப்பிலே போட்டேனென்று சொன்னுள். அந்த அடுப்புச் சாம்பலை யெங்கே போட்டாயென்று கேட்கத் தெருக் குப்பையிலே போட்டேனென்று சொல்லி அந்த விடத்தையுங் காண்பித்தாள். அப்போது மச்சேந்திரநாதர் அந்தக் குப்பைமேட்டின் பேரிலே நின்றுகொண்டு ஓ அனுகாதவனேயென்று கூப்பிட்டார் அப்போது அந்தக் குப்பைமேட்டுக் குள்ளிருந்து குருநாதனே வந்தேன் வந்தேனென்று சத்தங்கிளம்ப- மச்சேந்திரநாதர் அந்த வூராரை அழைப்பித்து அந்தக் குப்பையை வெட்டியெடுத்தார். அவ்விடத்திலே ஒரு பிள்ளை பன்னிரண்டு வயது நிறைந்து திவ்வியதேஜசுடைய புருஷனுய்ப் பூரணச்சந்திர பிரகாசமுடையவனுய் முப்பத்திரண்டு லக்ஷணமுடையவனுய் ஸாக்ஷாத் விஷ்ணுவைப்போல சுந்தரமானமுகமும் விசாலமான நேத்திரமும் காதிலே குண்டலமும் உடையவனுய் நாமஸ்மரணை பண்ணிக்கொண்டு உட்கார்ந்து கொண்டிருக்கிறதைச் சகலரும் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். அப்போது மச்சேந்திரநாதர் அவனண்டையில்வந்து சாவதானம் பண்ணித் தம்முடைய அபய அஸ்தத்தை அவனுடைய சிரசிலே வைக்க அவன் எழுந்திருந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்து நின்றுன். அப்போது மச்சேந்திரநாதர் அந்தப் பிள்ளை பன்னிரண்டு வருஷம் குப்பைமேட்டுக் குள்ளிருந்தபடியினுலே அவனுக்கு கோரக்ஷக நாதனென்று பேர்வைத்து அவனைக்கையிலே பிடித்துக் கொண்டு நடந்தார். அந்த வர்த்தகன் இவைகளைப் பார்த்து நம்முடைய துர்க் காலத்தினுல் நிஜமான தனம் கையிலே அகப்பட்டும் பிராப்தம் இல்லாமற்போயிற்றென்று தன் ஸ்திரீயுடனே சொல்லிக்கொண்டு இருவரும் விசனத்தோடே மச்சேந்திரநாதர் திருவடியிலே வந்துவிழுந்து சுவாமி தேவரீர்கொடுத்த விபூதியை எங்களுடைய அபாக்கியத்தி

ஞாலே அவிசுவாசம் தோன்றி யிப்படிச் செய்துவிட்டோமென்று சொன்ஞர்கள். இதைப்பார்த்து மச்சேந்திர நாதருக்குக் கருணைவந்து உங்களுக்கும் புத்திரனுண்டாவானென்று சொல்லிக் கடாக்ஷம் பண்ணிவிட்டுக்கோரக்ஷகநாதனை கையிலே பிடித்துக்கொண்டு தீர்த்தக்ஷேத்திரங்களுக்கு நடந்தார்.

அப்போது கோரக்ஷகர் மச்சேந்திரநாதரைப் பார்த்துச்சுவாமி என் சிரசில் அபய அஸ்தத்தை வைத்துத் தாரகமந்திரத்தை உபதேசம் பண்ணவேண்டுமென்று பிரார்த்திக்க- அதற்கு மச்சேந்திரநாதர் இன்னுஞ் சில காலஞ்சென்ருல் உனக்குப் பரிபக்குவமுண்டாகும் அப்போது உபதேசம்பெற அதிகாரமுண்டென்றுசொல்லக்-கோரக்ஷகரும் சுவாமிகளின் கிருபையின்படியே ஆகட்டுமென்றுசொல்லிவிட்டு வழிநடக்கிற போது- மச்சேந்திரநாதர் ஒரு கிராமத்துக்குச்சமீபமாய்ப் போயிருந்துகொண்டுகோரக்ஷகரைப்பார்த்துஇந்தவூரிலேபோய்ப் பிக்ஷையெடுத்துக் கொண்டுவாருமென்று சொன்ஞர். அப்போது கோரக்ஷகர் கிராமத்துக்குவந்து வீட்டுக்கு வீடு பிக்ஷை கேட்டுக்கொண்டு ஒரு பிராமணன் வீட்டில் சமாராதனை நடக்கிற வேளையிலே வந்தார். அந்த வீட்டுப் பிராமண ஸ்திரீயானவள் வடை முதலான பக்ஷணங்கள் எதேஷ்டமாய்க் கொண்டுவந்து போட்டாள். அதைவாங்கிக் கொண்டுவந்து மச்சேந்திரநாதரிடத்திலே வைத்து உத்தமமான பதார்த்தத்தைப் பொறுக்கியெடுத்து முன்னே கொடுத்தார் அதைமச்சேந்திரநாதர் சந்தோஷமாய்ச் சாப்பிட்டுச் சிஷியனைப் பார்த்து இது வெகுருசியாயிருக்கிறது நாளைக்குமிப்படியேகொண்டுவந்து கொடுக்கவேண்டுமென்று சொல்ல- அப்படியே கொடுக்கிறேனென்று சொல்லிக் கோரக்ஷகர் மறுநாள் காலையிலே எழுந்திருந்து நித்திய நியமங்களை முடித்துக்கொண்டு கிராமத்துக்குவந்து நேற்றுவடை போளிகொடுத்த வீட்டுக்குபோஞலகப்படுமென்று எண்ணிக்கொண்டு அந்த வீட்டுவாசலிலே வந்துஉட்கார்ந்துதாயே நேற்றையதினம்கொண்டுவந்துபோட்டதுபோல இன்றைக்கும் பிக்ஷைகொண்டுவந்துபோடவேண்டுமென்றுசொல்ல-அந்தவீட்டுப்பிராமணனுடைய ஸ்திரீயானவள் நேற்றையதினம் பிராமண சமாராதனை ஆனபடியினலே வடை போளி யிருந்தன. அவற்றைக்கொண்டுவந்து போட்டேன் இன்றைக்கு அந்தப் பக்ஷணங்கள் இல்லாதபடியால் இருக்கின்றவைகளைக்கொண்டுவந்து கொடுக்கிறேனென்றுசொன்ஞள். அப்போது கோரக்ஷகர் தாயே யெனக்கு ஒன்றிலேயும் ஆசையில்லை, திரவியமும் சரி மண்ணும் சரிபதிஞலுலோகத்தின்வாழ்விலேயும் எனக்கு இச்சையில்லை. ஆனல் நேற்றையதினம்நீகொடுத்த போளிவடைமுதலிய பக்ஷணங்களை என்னுடைய சத்குருவுக்குக்கொண்டுபோய்க் கொடுத்தபொழுது அவர்திருப்தியாய்ச்சாப்பிட்டுஅந்தவடைமஹாருசியா யிருக்

தபடியால் அந்தவிதமான வடைநாளைக்கும்கொண்டுவந்துகொடென்று ஆக்கியாபித்தபடியினாலே இவ்விடத்தில் வந்தேனென்று சொல்ல- இல்லாதபதார்த்தம் எங்கேயிருந்துவரும்-உன்னைப்பார்த்தால் பிச்சைக்காரனாகத்தோற்றவில்லை-உனக்கு விருப்பமிருந்தால் நான்கொடுப்பதைவாங்கிக்கொண்டுபோவென்றுசொல்ல-அப்போது கோரக்ஷகர் என்னுடைய குருவின் அபேக்ஷையை நிறைவேற்றவேண்டுமாதலால் அதற்கு அவர் பேரிலே ஆணைப்படிக்கு உன்னண்டையிலிருந்து வடை வாங்காமல் போவதில்லையென்று சொல்லிக் கெட்டியாய் உட்கார்ந்தார். அப்போது இந்தப் பிராமண ஸ்திரீ என்னடா நீ முரண்டுபண்ணுகிறாய் நான் தர்மம் செய்யப்போனால் அதர்மமாய்வந்து முடிந்தது நீ பிச்சை யெடுக்கவந்தவனானால் ருசியாய் வடை தேடலாயா நீ கேவலம் சின்னமனுஷனாய்ச் சுவானம்போல ருசியான பதார்த்தத்திற்குச் சண்டைபோடுகிறாயென்றுசொல்லத்- தாயேநான் நாயிலும் கடையானவனாகவிருந்தாலும் இருக்கட்டும் உன்னிடத்திலே யிருந்து வடை வாங்காமல்போகிறதில்லையென்றார். அதற்குப் பிராமணஸ்திரீ நீ இப்போது உன்கண்ணைப் பிடுங்கிக் கொடுத்தாலும் வடைகிடையாது என்றுசொல்லக் கோரக்ஷகர் தாயே வேண்டுமானால் கண்ணைக்கூடக்கொடுக்கிறேன் வடைமட்டும் கொண்டுவந்து கொடுவென்று சொன்னார். அதற்கு அவள் இவர் மனஉறுதியை யறியாமல் கண்ணைக்கொடுத்தால் வடை கொடுக்கிறேனென்று சொல்ல- உடனே வடையைக்கொடும் அம்மாவென்று சொல்லி ஒரு கண்ணைப் பிடுங்கிஅந்த அம்மாள் முன்னேபோட்டார். இதைஅந்த அம்மாள் பார்த்துப் பயந்து அரண்மனையிலே தெரிந்தால் நமமுடைய வீட்டைக் கொள்ளையடித்து விடுவார்களென்று தெருக்கதவைச் சாத்திவிட்டு- கோரட்சகருடைய கண்ணிலிருந்துவந்த இரத்தப்பிரவாகத்தைத் தன் முன்றானையினாலே துடைத்து விளையாட்டு விபரீதமாய் முடிந்ததேயென்று மிகவும் பயப்படுகிறதைக் காமம் வெகுளி மயக்கமென்னு முக்குற்றத்தையும் வேரோடே களைந்துவிட்டு ஒன்றிலேயும் பற்றில்லாதிருக்கின்ற கோரட்சகர் பார்த்துச் சாந்தமூர்த்தியாய்த் தாயே பயப்படாதே வடைமட்டும் கொண்டுவந்துகொடு என்றுசொல்ல உடனே அந்த அம்மாள் உழுந்து ஊறப்போட்டு அரைத்துத் திவ்வியமாகவடைசுட்டு எதேஷ்டமாகக் கொண்டுவந்துகொடுத்தாள். கோரட்சகர் சாஷ்டாங்கமாய்ச்சேவித்து வாங்கிக்கொண்டு தாயே ஒன்றுக்கும் பயப்படாதே என்று சொல்லிவிட்டு மச்சேந்திரநாதர் முன்னே ஒரு கண்ணை மூடிக்கொண்டுவந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சுவாமிகளுடைய ஆக்கினைப் படிக்குக் கொண்டுவந்திருக்கிறேனென்றார். மச்சேந்திரநாதரும்திருப்தியாகிக்கோரட்சகரைப்பார்த்து உன்கண்ணுக்குஎன்னவென்றுகேட்க-அவ்விடத்திலேநடந்தசெய்திகளையெல்லாம்சொன்னார்-அதை மச்சேந்திரநாதர்கேட்டுநல்லதுவடைக்காகஒருகண்கொடுத்தாயேஎனக்

கு ஒரு கண் கொடுவென்று கேட்கக் கோரட்சகர் அதிசீக்கிரமாயிரண்டாவது கண்ணையும் பிடுங்கிக்கொடுத்தார். அப்போது மச்சேந்திரநாதர் பார்த்துச் சந்தோஷமாயிரண்டுகண்களையும்தடவிக்கொடுக்க விரண்டு நேத்திரங்களும் திவ்விய திருஷ்டி ஆயின. பிறகு கோரட்சகரைப் பார்த்து நீயேசத் சிஷன் உன்னைப்போலே எனக்குச் சத் சிஷன் மூன்று லோகத்திலுங் கிடைக்கான் என்றுசொல்லிவிட்டு ஞானோபதேசம் பண்ணினர். அந்தக் கோரட்சகர் சாம்பவனென்கிறவருக்கு கிருபை பண்ணினர். அந்தச் சாம்பவனை அத்துவைதாநந்தர் சரணமடைந்து அனுக்கிரகம் பெற்றார். அவரைப் பிரபாவாசர் சரணமடைந்து அனுக்கிரகம் பெற்றார். அந்தப்படி பிரபாவாசர் கயினிதரென்கிறவருக்கு யோகமார்க்கத்தை அனுக்கிரகம் பண்ணினர். அந்தக் கயினிதரிடத்திலிருந்து நிவாத்திதேவர் ஞானத்தை பெற்றார். நிவர்த்திதேவரிடத்திலிருந்து சோபானதேவர் முக்தாபாய் ஞானதேவர் இவர்கள் உபதேசம் பெற்றார்கள். ஞானதேவருடைய சரணத்தை விசோபாகேசரடைந்து ஞானத்தை அடைந்தார். அந்த விசோபாகேசரை நாமதேவர் சரணமடைந்துபெற்றார். அந்த விஷ்ணுதாசராகிய நாமதேவருடைய சரணத்தை ஜெனியடைந்து பெற்றாள். இந்தக் குருபரம்பரையினலே ஞானமானது எங்கும் விஸ்தாரப்பட்டது. ஸ்ரீ வாசுதேவ ஜெகத்திரையகுரவேநம: ஸ்ரீ பாண்டுரங்காயநம:.

# சாரங்கதேவர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரபரப்பிர்மணேநம:. கேளுங்கள் பாக்கியசாலிகளே ஞானதேவர் ஒரு நாள் கோவிலுக்குவந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்து ருக்குமணிபதியைப் பார்த்து சுவாமி நான் அளகாபுரிக்குப் போய்வருகிறேனென்று உத்தரவு வாங்கிக்கொண்டு புறப்பட்டு அளகாபுரிக்கு வந்து சித்தேசுவருக்கு வந்தனம் பண்ணி அவ்விடத்திலிருக்கிறபோது சாரங்கதேவர் இந்த ஞானதேவர் சாக்ஷாத் விஷ்ணுவின் அவதாரமென்று கேள்விப்பட்டு அவரைக்காணவந்தார். அவர் பூர்வோத்திரத்தைச் சொல்லுகிறேன் கேளுங்கள் பிர்மதேவருடைய முதல் சாமத்தில் பதினலு யிந்திரர்களுண்டாகி அத்தனைபேரும் கர்மமேபலமாகக் கொண்டபடியினலே சிறைச் சாலையிலே யிருக்கும்போது-ஒரு நாள் பிரமகுமாரரும் ஞானசாகரரும் வைஷ்ணவோத்தமமாகிய நாரத பக

வான் அவ்விடத்துக்கு ஆகஸ்மீகமாய் வந்தார். அவரைக் கண்டவுடனே இந்தப் பதினன்குபேரும் சாஷ்டாங்கமாய்ச் சேவிக்க-அவர் ஆசீர்வதித்துவிட்டு நாராயணு நாராயணுவென்று கெர்சித்துக்கொண்டிருந்தார். அப்போது இந்த பதினன்கு இந்திரர்களில் ஒருவராய் வெகுநாளாகச் சிறையிலிருந்த சாரங்கதேவர் நாரதரைப் பார்த்துச் சுவாமிநான் இந்தச்சிறையிலிருந்து விடுதலையாகும்படி யென் பேரிலே கிருபைபண்ணி ஜெனமைமரணம்போகும்படியான சாதனம் சொல்லவேண்டு மென்றார். அப்போது பிர்மகுமாரராகிய நாரதபகவான் இங்கிருந்துஇதற்குச் சாதனம் செய்வது அரிது ஆதலால் சாரங்கதேவா நீ மிருத்திகாலோகத்திலே போய்ப் பூலோகவைகுண்டம்போலேயிருக்கின்ற பண்டரிபுரத்திலே அவதாரமெடுத்து நாமஸ்மரணைபண்ணி அவ்விடத்திலே சாக்ஷாத் பரப்பிர்மசொரூபமாய்நின்றுகொண்டிருக்கிறபரமாத்துமாவையும்சீவன்முக்திநிலையையடைந்து நாமகீர்த்தனம் பண்ணிக்கொண்டிருக்கிறவர்களையும் தரிசனம் பண்ணவேண்டும்அதனாலேநீ கடைத்தேருவாயென்றும் சத்தியலோகவாசிகளாயிருந்தாலும் அவர்களும்மிருத்திகாலோகத்திலே பிறந்து தான் மோக்ஷ சுகத்தையடையவேண்டும் என்றும்சொன்னர். அதைக்கேட்டுச்சாரங்கதேவர்சாஷ்டாங்கமாய்ச்சேவித்துச்சுவாமி இந்தத்தேகம்விடுதலையாகும்பொருட்டுஒருஉபாயம்சொல்லவேண்டுமென்று சொல்ல- அதற்கு நாரதமகாமுனி வாசுதேவதுவாதசாக்ஷரியை உபதேசம் பண்ணினர். உடனே சாரங்கதேவருக்கு அந்த ஜன்மம் நிவர்த்தியாகிப் புண்ணிய பூமியாகிய பீமாதீரத்திலே பிராமணகுலத்திலே மறுக்கெணவம்சத்திலே விருத்தராயுள்ள விட்டோபா என்பவருக்கும்அவர்மனைவியாகிய ருக்குமணிதேவிக்கும் பிள்ளையாய்ப் பிறந்தார். பிறந்த உடனே அவர்களிருவரும் இந்தக்குழந்தையினுடைய சுந்தரத்தைப பார்த்துப் பரமானந்தத்தை அடைந்து பெரியோர்கள் சொற்படிச் சாரங்கதேவரென்று பெயரிட்டுமஹாபிரேமையாய் வளர்த்துக்கொண்டுவந்து ஏழாம் வயதிலே உபநயனமும் பண்ணினர்கள். அவர் வாக்கிலிருந்து எந்தவேளையில் எந்தச் சப்தம் புறப்பட்டாலும் அந்தப்படி நடக்கும். அவருடைய பாதம்பட்டவிடங்களிலே அஷ்ட செல்வங்களும் பெருகும். பதினலுவித்தையும்அறுபத்துநாலுகலைக்கியானங்களும் இயமம் நியமம் முதலிய அஷ்டாங்கயோகங்களும அறிந்த இவர் தனக்கு அந்தியகாலம் வந்ததானல் ஆத்துமாவைப் பிர்மாண்டத்திலேகொண்டுபோய் வைத்துவிட்டுக் காலவஞ்சகப்பண்ணி அந்தவேளையைத் தள்ளிவிட்டுப் பிறகுதேகத்திலே பிராணனை யிருத்திகொள்ளுவார். இப்படிக்கு ஆயிரத்து நானூறு வருஷம் காலனுடைய காதகம் தன்னிடத்திலே நடக்கவொட்டாமல் தடுத்துக்கொண்டு தாபிந்திதீரத்தில் கட்டின மடத்திலானந்தமாயிருந்து தினந்தோறும் பண்டரிபுரத்துக்குவந்து கீர்த்தனங்களும் நிர்த்தனங்களும் பண்ணிக்கொண்டிருப்

பார். அவருக்கு ஆயிரத்து நானூறு பேர் சிஷ்யர்களுண்டு அவர்களை யெல்லாம் ககனமார்க்கத்திலே அழைத்துக் கொண்டு போகுதல்முதலிய மஹாசாமர்த்தியங்கள் அவரிடத்திலிருந்தாலும் அவர் இதுவரையில் சத்குருவைத் தேடிச் சரணமடையாமல் தம்முடையசிஷ்யர்களுக்குத் தனக்குத்தோன்றினதை உபதேசம் பண்ணிக்கொண்டுவருவார். அது வைத்தியர்கள் பிறருக்குப் பத்தியம் சொல்லித் தான் கண்டதெல்லாம் புசிக்கிறதுபோலவும் ஜோசியன் தன்கிரஹசாரம் தனக்குத் தெரியாமல் மற்றவர்க்குப் பலன் சொல்லுவதுபோலும் இருந்தது. இப்படிச் சாரங்கதேவர் பல சிஷர்களைச் சேர்த்துக்கொண்டு தனக்குச் சத் குருவின்றியே வெகுகாலமிருக்கையில் ஒரு நாள் நமக்குச் சத்குரு ஒருவருமில்லை நம்முடைய சாமார்த்தியத்துக்குச் சமானமானவர்கள் ஒருவரையுங்காணேம்-ஆனாலும் நாம் ஆருக்குச் சரணம் புகுவோமென்று மனதிலே யோசனைபண்ணி ஞானதேவருக்கு ஒரு பத்திரம் எழுதுவோமென்றெண்ணிக்கொண்டு ஏட்டையும் எழுத்தாணியையும் கையிலே வைத்துக்கொண்டு சிரஞ்சீவியென்று எழுதுவோமென்றால் ஒருவேளை அவர் இடத்திலே உபதேசம் பெறவேண்டியதாயிருக்குமே தீர்த்தரூபமென்று எழுதுவோமென்றால் அவர் நமக்கு இளையவராக இருக்கின்றாரென்று யோசனைபண்ணி எழுதுவதற்கு ஒன்றும் தோன்றாமல் வெறும் ஓலையைச் சுருட்டி ஞானதேவர் கையிலே கொண்டுபோய்க் கொடுவென்று ஒரு சிஷன் கையிலே கொடுத்தார். அவர் அப்படியே அதை வாங்கிக்கொண்டு அளகாபுரிக்கு வந்து ஞானதேவருக்கு எதிரே நின்றார். ஞானதேவர் அவரைப் பார்த்துச் சாரங்கதேவர் உன்னை அனுப்புவித்தாரோவென்றுகேட்டுச்சீக்கிரமாய்ஓலையையெடுத்துப் பார்க்கையில் அது வெறும்ஓலையாகவிருந்தது. அதைப்பார்த்துஓஒ சாரங்கதேவன்இன்னும் வெள்ளோலை யாகத்தானே யிருக்கிறான். பலமில்லாத விருக்ஷம் பிர்மாண்டமாய் வளர்ந்ததுபோலும்-புருஷனில்லாத ஸ்திரீசிங்காரித்துக் கொண்டதுபோலும்- பூததயவில்லாதவன் ஞானம் பேசுவதுபோலும்-சத்குருவைத்தேடிச் சரணமடைந்து கிருதார்த்தனாகப் பண்ணிக் கொள்ளாமல் ஆயிரத்து நானூறு வருஷம் பிழைத்தும் வீணாக இருக்கின்றானே என்றுசொல்லிச் சாரங்கதேவருக்கு ஓர் நிருபம்எழுத ஆரம்பித்தார்சைதன்னியம் சகல பிராணிகளுக்கும் ஒன்றாயிருக்கின்றது அது மூத்ததுமல்ல-இளையதுமல்ல-நீளமுமல்ல- குறுகலுமல்ல- ஒன்றுமல்ல பலவுமல்ல-ஆணுமல்ல- பெண்ணுமல்ல- அலியுமல்ல-ஆகாசத்தை மேகம் கம்மிக்கொண்டுபலவாறுதோன்றினலும்ஆகாச முன்போலிருப்பது போல ஸ்தூலசரீரம் நெடியதானாலும் குறியதானாலும் சச்சிதானந்த சுவரூபம் ஒரேவிதமாயிருக்கும். எந்தெந்தப் பதார்த்தங்கள்பிர்மாண்டத்திலே இருக்கின்றனவோ அவ்வளவும் பிண்டத்திலே யிருக்கின்றன. மாயையும் அவித்தையும் பொல்லாதவையானபடியினாலே அவையொன்

றையுமறியவிடா. ஆனதினாலே சித்தம் விவேகம் காரணமாக அவற்றையறியவேண்டும். எது சகல விசுவத்துக்கும் பீஜமோ அது சகஜமாய் உன்னிடத்திலே இருக்கிறது. சாரங்கா இதை நீ அறிந்துகொள்ளென்று எழுதி அந்தச் சிஷன் கையிலே கொடுத்து அனுப்பிவிட்டார். அதைச் சாரங்கதேவர் வாசித்துப் பார்த்து சித்தத்திலே அனுபோகம்வந்து ஞான சாகரமாயிருக்கிற விவரிடத்துக்குப் பயணம் வெகு சீக்கிரமாய்ப் போகவேண்டுமென்று ஒரு வேங்கைப் புலியை அழைப்பித்து அதின் மேலேறி ஒரு கிருஷ்ண சர்ப்பத்தைச் சவுக்காய்ப் பிடித்துக்கொண்டு ஆயிரத்து நானூறு சிஷியர்களுஞ் சுற்றிலும் வர அவர்களுக்கு மத்தியில் வருகையில் இந்தச் சமாசாரத்தைச்சில ஜனங்கள்ஞானதேவரிடத்திலேவந்து ஆரோ ஒரு பெரியவர் வேங்கைப் புலியின்முதுகிலேறிக் கொண்டு ஒரு கிருஷ்ண சர்பத்தைச் சவுக்காய்ப் பிடித்துக்கொண்டுவருகிறாரென்றுசொல்ல-அப்போது குட்டிச் சுவரின்மேலே உட்கார்ந்து கொண்டிருந்த ஞானதேவர் அதைக் கேட்டுச் சாரங்கதேவர் வருகிறாரென்று அறிந்துகொண்டு குட்டிச் சுவரைப் பார்த்து ஓ குட்டிச்சுவரே நம்முடைய தரிசனத்துக்கு ஒரு பெரியவர் புலியின்மேலேறிக்கொண்டு வருகிறார் அவர் தரிசனத்திற்கு நாம்போகவேண்டுமே அதற்காக நீ புறப்படென்றுசொல்லஅதுஉடனேநடக்கத்தலைப்பட்டது.சகலஜனங்களும்பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். இப்படி இவர் குட்டிச்சுவரின்மேலேறிக்கொண்டு வருகிறதைச் சாரங்கதேவர்கேட்டுநாம் சேதனத்தைநடப்பிவிக்கிறது அதிசயமன்று அவர் அசேதனமாயிருக்கிறதை நடப்பிவித்துக்கொண்டு வருகிறதே அதிசயம். இப்படிக்கொத்த சத் குருவினுடைய மகிமையே மகிமையென்று புலியைவிட்டுக் கீழேகுதித்து அடிக்கொரு நமஸ்காரம் பண்ணிக்கொண்டுவந்து இவரைக் கண்டமாத்திரத்திலே தேக அபிமானம் லேசமுமில்லாமல் விட்டுப்போய்- ருக்குமணி தேவி சீதாதேவியைப்போல வடிவெடுத்தபோது கண்ட சத்தியபாமா லச்சை அடைந்ததுபோலவும்- சாம்பவதி சுயம்வரத்திலே கிருஷ்ணபரமாத்துமா கரடியைக் கொண்டு கானம்பண்ணச்சொல்லிக் கேட்டபோது நாரதர்லச்சைஅடைந்ததுபோலவும்- பிர்மதேவன்கோபால சிறுவர்களையும்கன்றுகளையும்திருடிக்கொண்டுபோய் ஒரு குகையிலே ஒளித்து வைத்தபோதுகிருஷ்ணன் அத்தனைகோபால சிறுவர்களும்அத்தனை கன்றுகளும் தாமே ஆனதைக்கண்டு பிர்மதேவன் லச்சை அடைந்ததுபோலும்-சாரங்கதேவர் ஞானதேவரைக்கண்டு லச்சை அடைந்து வந்து நமஸ்காரம் பண்ணி ஞானதேவரைப் பார்த்துச் சாக்ஷாத் பாண்டுரங்கனென்று மனதிலே நிச்சயம் பண்ணிக்கொண்டு பாதத்திலே விழுந்தார். அப்போது ஞானதேவர் சாரங்கதேவர் கையைப் பிடித்துக்கொண்டு அருகிலிருந்தஒருஆலமரத்தண்டைவந்துஉட்கார்ந்துசாரங்கதேவருக்கு உபதேசம்செய்து அனுக்கிரகம் பண்ணினார். இப்பொழுதும் அந்த மர

மும் அதின் கீழே விசாலமான பீடமுமிருக்கின்றன. அந்த விடத்தை ஜனங்கள் விடாய் தீர்க்கப்பட்டவிடமென்று சொல்லுகிறார்கள். அந்த விடத்திலே மனுஷர்கள் க்ஷணப்போது உட்கார்ந்தாலும் பிர்மானந்தத்தோற்றமுண்டாகிறது. பிறகுஞானதேவர்சாரங்கதேவருடைய கையைப்பிடித்துத்தம்முடைய ஆச்சிரமத்துக்குள்ளேஅழைத்துக்கொண்டு போகையில்- அவ்விடத்திலே முக்தாபாய் ஸ்நானம் பண்ணிக்கொண்டிருந்தாள். அதைச் சாரங்கதேவர் பார்த்துலச்சைப்பட்டுப் பின்வாங்கி வெளியிலேவந்துவிட்டார். அதை முக்தாபாய் பார்த்து அடே அஞ்ஞானிஏன் ஓடுகிறாயென்று சொல்ல- சாரங்கதேவர் இந்தவார்த்தையைக் கேட்டுத் திரும்பிவந்து இரண்டுபாதங்களிலும்விழுந்துநமஸ்காரம் பண்ணினார். அவரைப்பார்த்து முக்தாபாய் ஓ சாரங்கதேவா நீ யென்னைப்பார்த்துச் சங்கோசப்பட்டுக்கொண்டு திரும்பிப்போனாய் சுவரிலேயிருக்கிறதுவாரங்களைப் பார்த்து யாராகிலும் சங்கோசப்படுவார்களா- பசு மாடுகள் வஸ்திரம் கட்டிக்கொண்டாதிரிகின்றன. அவற்றைக்கண்டு சங்கோசப்படுவதுண்டோ. அப்படிப்போலநானும்பசுவர்க்கம்தானே யென்று சொன்னாள். அப்போது சாரங்கதேவர் அந்த அம்மாளுக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துவிட்டு- ஞானதேவருக்கு அனன்னிய சரணமடைந்து ஞானத்தைப் பெற்றுச் சாக்ஷாத் பரப்பிர்மசொரூபமாகிய அவருடைய அஸ்தம் இவருடைய சிரசிலே பட்டவுடனே சீவன் முக்திதசை அடைந்து ஞானசாராய் ஆனந்தபரிதராயிருந்தார். சாக்ஷாத் ஞானதேவர் வாசம்பண்ணுகிற அந்த அளகாபுரி பூலோகவைகுண்டமோ பண்டரிபுரமோ வென்று விளங்குகிறது. ருக்குமணிபதியான பண்டரிநாதரே ஞானதேவருடைய ரூபமாயிருந்து விளங்குகிறாரென்று அறியுங்கள் சாதுக்களே. இந்த அத்தியாயம் சம்பூரணம். இதைச் சிரவணம் பண்ணினவர்கள் அகங்கார மமகாரங்களைவிட்டுப் பரமஞானம் பெற்றுச் சீவன் முக்தராவார்கள். ஸ்ரீமதேராமாநுஜாயநம: ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரம்மணேநம:.



## இருபத்துமூன்றாவது அத்தியாயம்.

# சோகாமேளன் என்பவர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: கேளுங்கள் பாக்கியசாலிகளே பரிசக் கல்லானது- கடினமுடையதும் அதிக விலையில்லாததுமாகிய இரும்பில் பட்டவுடனே- அதன் கடினத் தன்மையையும் இரும்பென்கிற பெயரையும் மாற்றி மனிதர்களுக்கு ஆபரணமாகச் செய்வது போல- இந்தப் பக்தவிஜயமென்கிற கிரந்தமும் தன்னைச் சிரவணம் பண்ணினவர்களுடைய அஞ்ஞான நிறைந்த மனதில் பட்டவுடனே அதன் கடினத்தைமாற்றி ஞானியென்று பெயருண்டாக்கித் தேவர்களும் வணங்கும்படிசெய்யும். அப்படிப்பட்ட இந்தக் கிரந்தத்தின் முன் அத்தியாயத்திலே மச்சேந்திரநாதர்சரித்திரமும் சாரங்கதேவருக்கு ஞானதேவர் உபதேசம் பண்ணினதும் கேட்டீர்களே-இந்த அத்தியாயத்தில் சோகாமேளன் என்னும் பக்தர் சரித்திரத்தைக் கேளுங்கள். பண்டரிபுரத்தில் நீசர் குலத்திலே ஒருவர் பிறந்து சோகாமேளன் என்று பெயரடைந்து பண்டரிநாதனிடத்தில் மிகுந்த பக்தியுடையவராயிருந்தார். அவர் தினந்தோறும் ஆலயத்தைப் பிரதக்ஷணம்பண்ணிக் கொண்டு கோபுரவாசலிலேவந்து சுவாமியைத் தரிசனம்பண்ணவேண்டுமென்று உட்கார்ந்து கொண்டிருப்பார். அப்படியிருக்கையில் ஒருநாள் சில பிராமணர்களிவரைப் பார்த்து-அடே சோகாமேளா நீ விட்டோபாவைக் கண்ணாலேகாணவேண்டுமென்று ஏன்விருதாவாய்ப் பக்தி பண்ணுகிறாய்-உன்னிடத்திலே பகவானுக்குக் கிருபையிருந்தால் உனனை அவரே அழைத்துத் தரிசனம் கொடாரா-பிராமணர்கள் சமைக்கிற விடத்தில் சுவானம் போகக்கூடுமோ கூடாதே அதுபோலச் சக்கரபாணியைக்கோவிலுக்குள்ளேபோய்த் தரிசனம்பண்ணவேண்டுமென்று உனக்கு இருக்கும் அபேக்ஷை ஒருநாளும் நிறைவேறமாட்டாதென்று சொல்ல-அதற்குச் சோகாமேளன் எழுந்திருந்து சாஷ்டாங்கமாகச் சேவித்துச் சுவாமிகளே கேளுங்கள் சூரிய பகவான் லக்ஷம்யோசனை தூரத்திலிருந்தாலும் தாமரைப் புஷ்பத்தை விகசிப்பிக்கிறதுபோலும்-ஆமையானது கரையிலே முட்டையிட்டுவிட்டு நடுக்கடலிலே போயிருந்தாலும் அந்த முட்டைகளைக் குஞ்சாகச் செய்வதுபோலும்-பாண்டுரங்கன் கோவிலுக்குள்ளே யிருந்தாலும் தன் தாஸர்கள் எத்தனை தூரத்திலிருந்தாலும் அவர்களைக் காப்பாற்றுவார், பாண்டுரங்கன் கோவி

ஹக்குள்ளேயே யிருக்கிறாரென்று நினையாதேயுங்கள். சருவஜீவராசி களுடைய மனமென்கிற கோவிலிலேயும் குடியிருக்கின்றனர். நான் நிகிர்ஷ்டதேகியானாலும் என் மனதிற்குள்ளேயுமிருந்து என்னையும் காப்பாற்றுகின்றாரென்று சொல்லிவிட்டுச்- சுவாமி உம்முடைய தரிசனம் எனக்குக் கிடைக்கும்படி கிருபை செய்யவேண்டுமென்றுவிட்டுக் குப்போய் ருக்குமணிவரனைத் தியானம் பண்ணிக்கொண்டிருந்தார்.

அப்படியிருக்கையில் ருக்குமணிவாளனை பகவான் சோகாமேளர் பக்தியைப் பார்த்துத் தரிசனம் கொடுக்க நினைத்து கோவில் கதவுசாத்தப்பட்டபிறகு அவர் வீட்டுக்குப்போய் அவர் முன்னே நிற்கச்-சோகாமேளர் கண்டு சாஷ்டாங்கமாய்ச் சேவித்து ஸ்தோத்திரம் பண்ணிப் பண்டரிநாதா ஆலயத்தில் உனது தரிசனம் எனக்குக்கிடைக்கவேண்டுமென்று பிரார்த்திக்க உடனே சுவாமி சோகாமேளர் கையைப் பிடித்துக்கோவிலுக்குள்ளே அழைத்துவந்து பக்கத்தில் உட்காரவைத்துக் கொண்டு-சோகாமேளா நீ யெனக்கு அந்தரங்கமான பக்தன் உன்னை க்ஷணப்பொழுதாகிலும் நான் மறவேன் நாமதேவரோடேகூடச் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோதும் மற்றப் பக்தர்களிடமிருக்கும்பொழுதும் உன்நினைப்பு வந்துகொண்டேயிருக்குமென்றுசொல்லக்கேட்டுச்சோகாமேளர் சுவாமியின் இரண்டு பாதத்தையும் கெட்டியாய்ப் பிடித்துக் கொண்டு ஓ சுவாமி தீனபந்து- அனாதைநாதா-கருணாசிந்து- தேவரீர் இவ்விதமான அன்பை அடியேங்களிடத்தில் பூரணமாய் வைத்திருப்பதனால் தான் நாங்கள் பூலோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறோமென்று சொல்லிக்கொண்டிருந்தார். இப்படிப் பேசிக் கொண்டிருக்கிறதைப் பிராமணர்கள் கதவுக்கு வெளியே யிருந்து கேட்டு ஆச்சரியப்பட்டுச் சோகாமேளன் கோவிலுக்குள்ளேவந்து சக்கரபாணியுடனே பேசுகிறான் போலிருக்கின்றது. வைகுண்ட வாசியான ஸ்ரீ பண்டரிநாதனிடத்தில் இந்தப் பறையன் வரலாமா- பேசலாமா- இப்பொழுது இங்கே வந்தபடியால் எங்களுடைய ஆசாரம் முழுவதும் கெட்டுப் போய்விட்டதே- பிராமண கிரகத்தில் பஞ்சமன் வந்தது போலவும்- யாகசாலையில் சுவானம் நுழைந்ததுபோலவும்- வேதசாஸ்திரங்களாலே வர்ணிக்க முடியாத ஷட்குண ஐசுவரிய சம்பன்னரான பண்டரிநாதன் ஆலயத்தில் இந்தப் பறையன் வந்தானே யென்று சொல்லிக் கோவில் கதவைத்திறந்து கொண்டு உள்ளேவந்து சோகாமேளனைப் பார்த்து-அடே சோகாமேளா தாழ்மையான புலையர் குலத்திலே பிறந்த நீ நாங்கள் கோவில் கதவைச் சாத்திப் பூட்டிக்கொண்டு போயிருந்தவேளையில் எப்படி உள்ளேவந்தாயென்று கேட்கச்-சுவாமிகளே நானாக உள்ளே வரவில்லை-சுவாமியென்னுடைய கையைப் பிடித்து மாயமாய் உள்ளே அழைத்துக்கொண்டு வந்தார். அதினால் இக்கச்

தடவை க்ஷமை பண்ணுங்கள் இனிவரவில்லையென்று சொல்ல-அதற்கு அர்ச்சகர்கள் அவன் சொல்வது உண்மைதானென்றறிந்து பண்டரிநாதன் இவ்வித லீலைகளைச் செய்தால் நாம் இவனைத் தண்டிப்பதால் பயனென்ன உண்டு- ஆயினும் இவன் இவ்விடத்திலே யிருந்தானானால் தேவாதி தேவன் இவனை அடிக்கடி கோவிலுக்குள்ளே அழைத்துக் கொண்டுவருவார்- அதனால் அடிக்கடி நமது ஆசாரத்திற்குக் குறைவு வரும் என்றெண்ணிச் சோகாமேளரைப் பார்த்து நீ யிப்போதுதானே இவ்விடத்தை விட்டுச் சந்திரபாகைக்கு அப்புறம் போகவேண்டும் இல்லாவிட்டால் உன்னைச் சிக்ஷிப்போமென்று சொல்ல- அதற்கு அவர் நல்லது அப்படியே செய்கிறேனென்று சொல்லிவிட்டுச் சுவாமிகளே நான் பகவானைத் தரிசனம் பண்ணினால் தீட்டென்று சொல்லுகிறீர்களே-கங்கையிலே பறையரும் பிராமணர்களும் ஸ்நானம் பண்ணவில்லையா அந்தக் கங்கைக்குத் தீட்டுண்டோ-பூமியிலே சகல ஜாதிகளும் நடக்கிறார்களே அந்தப் பூமிக்குத் தீட்டுண்டென்று எந்தச் சாஸ்த்திரத்திலாவது சொல்லுகிறதா இல்லையே அப்படிப்போல ருக்குமணிநாதன் சர்வாந்தரியாமி- சர்வபரிபூரணன்-தேவாதி தேவன்- யதுகுலதிலகன்- அவிபத்தன்- அனந்தங்கோடி பிர்மாண்ட வியாபகன்-சகல ஜாதிகளையும் சரியாகப்பார்ப்பவன் அப்படிப்பட்டவனுக்குத்தீட்டுண்டென்று ஏன் தோஷத்துக்குப் பாத்திரமாய்ச் சொல்லுகிறீர்களென்றுசொல்லப்-பிராமணர்கள் கேட்டு அடே நீ பறையன் சகல ஜாதியிலேயும் கீழானவன் நீயா எமக்கு ஞானமோதுகிறாய்- நீ யெங்களுக்கு ஞானமோதுகிறது- ஆடுமேய்க்கிறவன் பிரகஸ்பதி பகவானுக்கு விவேகம் சொல்வதுபோலும் இருக்கின்றது. இனிமேல் நீ பீமாதீரத்துக்கு அப்புறத்திலே போய்க் குடியிருக்கவேண்டும்இல்லாவிட்டாலுன்னைச்சிக்ஷித்துத் துரத்திவிடுவோமென்று சொன்னார்கள். அதைச் சோகாமேளர் கேட்டுச் சுவாமிகளே தாயும் தந்தையும் நீங்களேயென்று நம்பி வெகுநாளாய்க் காத்துக்கொண்டிருந்த அடிமையான என்னை இது வரையில் சவரக்ஷணைபண்ணிக்கொண்டுவந்து இப்போது துரத்திவிடுகிறீர்களே அப்படிச் செய்யாமல் ரட்சிக்கவேண்டுமென்று சொல்லியும் கேளாமையால்கண்களிலே ஜலம் பெருகச் சுவாமியைப் பார்த்துச் சேவித்துவிட்டுத் தியானம் பண்ணிக்கொண்டு வீட்டுக்குப் போய்த் தன் ஸ்திரீயுடனே நடந்த சங்கதிகளையெல்லாம் சொல்லிப் பீமாதீரத்துக்குஅப்புறத்திலே போய் ஒரு குச்சுக்கட்டிக்கொண்டிருந்தார்.

அவ்விடத்திலே யிருந்து பகவானைத் தியானம் பண்ணிக்கொண்டு இருக்கிற நாளையிலேஒருநாள்சோகாமேளர் சாப்பிடஉட்கார்ந்தபொழுது நீலமேகசியாமளனான பகவானும் அங்கேபோய்த் தானும் கூடச் சாப்பிட வேண்டுமென்று சொன்னார். அது கேட்டுச் சோகாமேளர்

பக்கத்திலிருந்த ஒரு வேப்பமரத்தடியிலே அழைத்துக்கொண்டுபோய் இருவருமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறபோது- சோகாமேளர் வேப்புமரத்தின் மீதிருக்கிற காக்கைகளைப் பார்த்து ஓ காக்கைகளே என்னுடைய நீலமேகசியாமளன் இந்த மரத்தடியிலே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறபடியால் நீங்கள் பழங்களைத் தின்று கொட்டைகளை இங்கேபோடாதீர்கள் வேறொருமரத்தின்பேரிலேபோய்ச் சாப்பிடுங் களென்று சொன்னதையும் - தன்னுடைய ஸ்திரீகொண்டுவந்த தயிர் தவறிக் கீழே விழுந்து சுவாமியுடைய பீதாம்பரத்திலே தெரித்து எங் கும் தயிராய்ப்போய்விட- அதைப்பார்த்து அடியென்ன காரியம் பண் ணினாய் சாக்ஷாத் சக்கரபாணி அல்லவா யென்னுடனே கூடச் சாப்பி டுகிறவர். அவர் பிராமணர்களைக்கூட விரும்பாமல் நம்முடைய வீட் டில் வந்திருக்க நீ யதையறியாமல் இப்படி அந்யாயம் பண்ணினாயே யென்று சொன்னதையும் அந்த மார்க்கமாய்ப் போய்க்கொண்டிருந்த கோவில் அர்ச்சகர்களிலே ஒருவன் கேட்டுஅகங்காரமாய்எரிச்சலோடு என்னடா பறையா பிதற்றுகிறாயென்று சொல்லிக் கொண்டுவந்து தா டையிலே ஒருஅடிஅடித்துவிட்டுப்பீமாநதியிலேஸ்நானம்பண்ணிக்கோ விலுக்குப்போய்ச் செங்கல்லின்பேரிலே நின்றுகொண்டிருக்கிற பகவா னைப் பார்த்தார். பகவானுடைய பீதாம்பரமுழுதும்தயிரினாலே நனைந் து இருக்கிறதையும் கன்னம் வீங்கியிருக்கிறதையும் கண்டு திக் பிரமை யாயெண்ணிப் பார்த்து ஓ-ஓ-அங்கே நடந்தவையெல்லாம்இங்கேசரியா யிருக்கின்றனவே-நாம்செய்ததுதானேமூடத்தன்மையானகாரியம்-சோ காமேளன் பகவானுக்கு நிஜ பக்தனாகக்காணப்படுகின்றானென்று அனு தாபப்பட்டுப் பகவானைச் சரணமடைந்தால் தனக்குச் செய்த குற்றத் தைமட்டும் தீர்ப்பார்- தாசர்களைச் சரணமடைந்தால் அவர்களுக்குச் செய்த குற்றமும் பகவானுக்குச் செய்தகுற்றமும் நீங்குமென்று சோ காமேளரிடத்துக்கு ஓடிவந்து நானறியாமல் உனக்குச் செய்த குற் றத்தைப் பொறுத்துக்கொள்ளவேண்டு மென்று சொன்னதல்லாமல்- பக்தபூஷணன் கிருபாசமுத்திரன் கன்னம் வீங்கியிருக்கிறது- நீ நிஜ பக்தனானபடியினாலே கோவிலுக்கு வந்தால் உன்னைக்கண்டு பகவானு டைய கன்ன வீக்கம் வாங்கிப்போமென்று பிரார்த்தித்து கையைப் பிடித்துக் கோவிலுக்குள்ளே அழைத்துக்கொண்டுவந்தார். சோகா மேளர் பகவானை ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு ஸ்தோத்திரம் பண் ணிக் கன்னத்தைத் தடவினவுடனே பகவான் முக வீக்கம் வாங்கிப் போய்ப் பிரசன்னவதனராயிருந்தார். இந்த அதிசயத்தை யெல்லாரும் பார்த்து ஆச்சரியப்பட்டுப்பக்தவச்சலராயும்-பக்த பூஷணராயும்- பக்த பராதீனராயும்- பக்தாபிமானியாயும்- பக்த சுவரக்ஷகராயுமிருக்கிறபண் டரிநாதரை நானாவிதமாக ஸ்தோத்திரம் பண்ணினார்கள். அன்று நாகம்

கொண்டு சோகாமேளர் கோவிலுக்குத் தாராளமாய்வந்து நித்தியம் தரிசனம் பண்ணிப்போவார். ஸ்ரீ பாண்டுரங்கவிட்டலாயநம: ஸ்ரீரங்க நாமனேநம:.

# பண்டரிநாதன் ஜெனீபாயுடன் ஊழியம் செய்ததுமுதலான சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: ஒருநாள் பகவான் அம்சதூளிகா தல்பத்தின்மேல் சயனித்துக்கொண்டு ருக்குமணிதேவியைப் பார்த்து இன்றையத்தினம் எனக்கு மிக ஆயாசமாயிருக்கிறபடியால் உடம்பைச் சற்றே பிடியென்று சொல்ல -ருக்குமணிதேவிகேட்டு இந்த ஆயாசம் வரதக்கதாயென்ன அலுவல் செய்தீர். சாவந்த பக்தனுடைய தோட்டம் கொத்தினீரோ-கபீருடைய உருக்கத்தைப் பார்த்து அவருக்கு வஸ்திரம் நெய்து கொடுத்தீரோ- நாமதேவருடைய வீட்டுக்கு மண்சுமந்து சுவர்வைத்தீரோ- பெகுளாபுரமென்கிறவூருக்குச் சாக்ஷிக்குப்போனீரோ- ஞானதேவ ரேறிக்கொண்டிருந்த குட்டிச் சுவரை இழுத்ததினுலே சிரமபட்டீரோ சோகாமேளனுக்கு உழவடித்ததினுலே சிரமப்பட்டீரோ-சோகி நிமித்தம் அலைந்துதிரிந்தீரோ என்று கேட்க- ஜெகன்னிவாசன் இந்த அலுவல்களெல்லாம் இன்றைக்குச் செய்யவில்லை ஆனால் நாமதேவருடைய வீட்டிற்கு வெகு பேர் பக்தர்கள் விருந்தாளிகளாக வந்தார்கள் அதனாலே ஜெனீபாய்க்கு மிகவும வேலைஉண்டானபொழுது அந்த வேலைகளை அவள் என்னையே ஸ்மரித்து என்னுடைய நாமங்களையே சொல்லிக்கொண்டு வருத்தப் பட்டுச் செய்தாள். அது கண்டு நான் ஒரு பெண்வடிவாகப்போய் அவள் செய்யவேண்டிய ஊழியங்களைச் செய்துவிட்டுவந்தேன். அவள் அரைக்கவேண்டிய மாவரைத்தேன். ஜெனீபாய்மெழுகுகையில் நான்சாணிதெளித்தேன். அவள்கூட்டினபொழுது நான் குப்பைகளை வாரிக்கொட்டினேன். ஜெனீபாய்துவைக்கவேண்டிய வஸ்திரங்களை அவளோடு நானும் துவைத்தேன். ஜெனீபாயெடுக்கவேண்டிய தண்ணீரெல்லாம் நானும்கூடவெடுத்தேன். இப்படி நானுவிதமாய் அவளுக்குள்ள வேலையை யெல்லாம் நானும்கூடவிருந்து செய்தேன் என்று சொல்லக்கேட்டு ஆச்சரியப்பட்டு மந்தஹாசத்தோடே ஓ சுவாமி பக்தர்களுக்கு இப்படிக்கூட ஊழியம் செய்ய வேண்டுமோவென்று சொல்லி ஆலிங்கனம் பண்ணிக்கொண்டு மஹா ஆனந்தத்தோடே சரீரத்தை ஆபாதமஸ்தக பரியந்தம் பிடித்துக்கொண்டிருந்தாள்.

பின்னை ஒரு நாள் நாமதேவர் ஹரிஹரக்ஷேத்திரத்திலே மஹாப ருவகாலத்திலே கருடகம்பத்திற் கருகிலே நின்று கீர்த்தனம் பண்ணிக் கொண்டிருக்கிறபோது பகவான் அவருடைய ஆனந்தத்தைப் பார்த்துத் தானும் மனிதரூபமெடுத்துக் கையிலே தாளம் பிடித்துக்கொண்டு அவ ருக்குப் பின்னாலே வந்து நின்று அவர் மறந்துபோன சொற்களை ஞா பகப்படுத்திக் கொண்டிருந்தார். அதைப் பகவத் பக்தர்களனைவரும் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள். தேவதைகள் ஆகாசத்திலே யிருந்து புஷ்பவருஷம் வருஷித்தார்கள். பின்னையுமொருநாள் நாமதேவர் கீர்த் தனம் பண்ணிக்கொண்டிருக்கிறபோது பகவானும் ஒரு பக்தரைப் போல எதிரே நின்று கீர்த்தனம் பண்ணினார். அப்போது அவருக்குத் தேகம் பரவசமாய்ப் பீதாம்பரம் நழுவிப்போய்விடச் சகலமான பக்தர் களும் பார்த்துச் சும்மாவிருந்தார்கள். ஞானதேவர் சுவாமியுடைய கையைப் பிடித்துக்கொண்டு ஹே ஸர்வக்ஞமூர்த்தே பீதாம்பரத்தை யெடுத்துக் கட்டிக்கொள்ளலாமேயென்று சொன்னார். அந்தவசனத் தைப் பகவான் கேட்டு மந்தஹாசத்தோடே ஞானதேவா என்னிடத் திலே மானவமானமில்லை. உயர்ந்தவன் தாழ்ந்தவனென்கிற வித்தியாச மில்லை. பக்தர்களிடத்திலே சித்தத்தை வைத்து அவர்களை மகிழச் செய்யக்கூத்தாடுகிறதே யெனக்குத் தொழில் அதிலேயும் எனக்குப் பிரேமை பக்தனாகிய நாமதேவனுடைய கீர்த்தனத்தைக் கேட்டுச் சரீ ரம் பரவசமாய்ப் போகிறது என்று சொல்லிக்கொண்டிருக்கிற சமயத் திலே கபீர் பக்தர்வந்து பகவானை ஆலிங்கனம்பண்ணிக்கொண்டு இந் தச் சந்தோஷத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். இப்படிக் கீர்த்தனம் ஆனபிற்பாடு பகவான் நாமதேவரையும் மற்றப் பக்தர்களையும் கூட உட்காரவைத்துக்கொண்டு ஞானதேவரைப் பார்த்து இன்றையத்தி னம் கீர்த்தனம் வெகு ஆனந்தமாயிருந்தது அல்லவா என்றுசொல்ல- ஞானதேவர் சூரியனை தீவட்டிபிடித்தாற்பிரகாசத்துக்குக் குறைவுண் டோ அப்படிப்போலத் தேவரீர் கையில் தாளம் பிடித்துக்கொண்டு கீர்த்தனம் பண்ணின படியினாலே ஆனந்தத்திற்கு குறைதலுண்டா யிருக்குமாவென்று சொல்ல- அதைப் பகவான் கேட்டுப் புன்சிரிப்போ டு உண்மைதானென்று சொல்லிவிட்டுப் பக்தர்களனைவரையும் கூட வைத்துக்கொண்டு சாப்பிட்டுவிட்டுக் கோவிலுக்குள்ளேபோய் விட் டார்.

அப்போது கபீர் உள்ளேபோய்ப் பேசிக்கொண்டிருந்து ராமேசு வர யாத்திரைக்கு உத்தரவுவாங்கிக்கொண்டு புறப்பட்டார். வழியில் கீர்த்தனம் பண்ணிக்கொண்டுவரும்போது ஸ்ரீ வானனென்றும் தத்து வனென்றும் இரண்டு பிராமணர்கள் இவருடைய மகத்துவத்தைப் பார்த்து இவரிடத்திலே உபதேசம் பண்ணிக் கொண்டார்கள். இவர்

அவர்களுக்கு உபதேசம் பண்ணிவிட்டு ராமேசுவரத்துக்குப் போய் மறுபடியும் காசிக்குப் போனார். இந்தக் கபீரிடத்தில் உபதேசம் பெற்ற பிராமணர்களை அவர்கள் உறவின் முறையார் யாரோ ஓர் துலுக்கனிடத்தில் உபதேசம் பெற்றார்களென்று ஜாதிக்குப் புறம்பாகத் தள்ளிவிட்டார்கள். இவர்களுக்குச் சந்ததியிருந்தபடியாலிந்தப் பழிச்சொல்லுக்குப் பயந்து விசனப்பட்டு ஊரைவிட்டுக் காசிக்குபோய்க்குருவைக்கண்டு சமாசாரத்தைச் சொன்னார்கள். அவர் ஞானஉபதேசம்பெறுவதற்கு ஜாதிகுலமேது ஆகிலும் உங்கள் விசனத்தை மாற்றப் பகவானிருக்கிறாரென்று சொல்லக்கேட்டு நிச்சயமாய்நம்பி ஊருக்குவந்து பிள்ளைகளுக்கு உபநயனம் பண்ணினார்கள். கலியாணமும் பண்ணுகிறதற்கு நினைத்துத் தன் பெண்ணைத் தமயன் பிள்ளைக்கும் தமயன் பெண்ணைத் தன் பிள்ளைக்கும் செய்கிறதாய்நிச்சயம் பண்ணி அந்தக்காரியத்திற்கு வேண்டிய சாமான்களை ஜாக்கிரதைசெய்து பந்தல் போடுகிறதற்கும் ஆரம்பித்தார்கள். அப்பொழுது ஊரிலேயிருக்கிற பிராமணர்கள் இவர் வீட்டுக்குவந்து உங்களுக்குச்சம்பந்தி ஆரென்று கேட்க-நாங்கள் ஜாதியென்றும் குல மென்றும் முறையென்றும் அபிமானம் வைத்துக்கொண்டிருந்தோம். அதை மகானுபாவர்களாகிய நீங்கள் தள்ளிவிட்டீர்கள். ஆகையால் இப்பொழுது சாதிகுலம் முறைபாராமல் நாங்கள் எங்களுக்குள்ளே தானே சம்பந்தம்பண்ணிக் கொள்ளுகிறோமென்று சொல்லக்கேட்டுப் பிராமணர்களனைவரும் யோசனைபண்ணி இவர்களிரண்டுபேரும் கபீரென்னும் விஷ்ணுபக்தரண்டையில் உபதேசம் பெற்றார்களென்று தள்ளினோமே அவர்கள் அவரிடம் உபதேசம்பெற்றதனால்நமக்குவந்தகுற்றமென்ன- இப்போது இவர்கள்நம்மேலே பழியைப்போட்டு முறைதப்பிக் கலியாணம் பண்ணுகிறார்களே-இதினாலே நமக்கு அபகீர்த்திவருவதுமன்றி இவர்கள்குலமும் கெட்டுப்போமே பகவானும் நம்மேலேகோபம் பண்ணுவாரேயென்று தெரிந்து- வலிய அவர்களை அழைத்துத் தங்களுடன் சேர்த்துக்கொண்டு முறை பிசகாமல் தங்கள் பெண்களை அவர்கள் பிள்ளைகளுக்கும் அவர்கள் பெண்களைத் தங்கள் பிள்ளைகளுக்குமாகக் கலியாணம் நடத்தினார்கள். பிறகு இவர்கள் இந்தச் சமாசாரத்தைக் கபீருடனே சொல்ல-அவர் எல்லாம்பகவானுக்குப் பொறுப்பென்று சொன்னார். இந்த அத்தியாயம் சம்பூரணம். இதைச் சிரவணம் பண்ணினவர்கள் உலகத்தில் நடக்கின்றயாவும் பகவத்செயலென்று துணிந்து தாங்கள் கொண்ட வைராக்கியத்தை விடாதிருந்து கடைசியில் பரமபதத்தையடைவார்கள். ஸ்ரீ இராமச்சந்திர ஜகத்குரவே நம: ஸ்ரீ கிருஷ்ணாய பரமகுரவேநம:.

# இருபத்துநான்காவது அத்தியாயம்.

## கபீர் சிஷ்ராகிய பதுமநாபர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திர பரப்பிரமணேநம: கேளுங்கள் பாக்கியசாலிகளே இந்தப் பக்தவிஜயம் என்னும் கிரந்தமானது ஞானநிறைந்த களஞ்சியம்- வைகுண்டத்தின்வழி- ஸ்ரீமந்நாராயணனிடம் அழைத்துச் செல்லும் தூதன். அப்படிப்பட்ட இதன் முன்அத்தியாயத்திலே சோகாமேளன் என்பவர் சரித்திரமும் பகவான் செய்த பல அற்புதங்களும் கேட்டீர்களே இந்த அத்தியாயத்திலே கபீருடைய சிஷ்ராகிய பதுமநாபரென்கிற பிராமணருடைய சரித்திரத்தைக் கேளுங்கள். காசிப் பட்டணத்தில் பிராமணகுலத்தில் பதுமநாபரென்றொருவர் பிறந்து சௌளம் உபநயனம் வித்தியாரம்பமுதலிய சடங்குகள் செய்விக்கப் பெற்று- வேதசாஸ்திரபுராணங்களை யெல்லாம் கற்றுத் தேறினபின்- கடவுள் ஒருவருண்டு அவரால் அளவற்ற அண்டங்கள் படைக்கப்பட்டிருக்கின்றன. அவ்வண்டங்களெல்லாம் சராசரங்களால் நிறைந்திருக்கின்றன- அந்தச் சராசரங்களுக்குள் மனிததேகம் கிடைப்பது அரிது- அப்படிப்பட்ட தேகம் கிடைக்குமானால் ஞானவானாகிய ஒரு சற்குருவையடைந்து உபதேசம்பெற்றுச் சர்வலோகாதாரனும் சர்வஜீவரக்ஷகனுமான ஸ்ரீமந்நாராயணனுக்குப் பக்திசெய்து அவருடைய நாமஸ்மரணைபண்ணிக்கொண்டிருப்பதே மேலான பதவியென்று தெளிந்து- நல்லஆசாரியனைத் தேடிக் கபீர்தாசரைச் சரணமடைந்து அவரிடத்தில் அனுக்கிரகம்பெற்று ஈஷணாத் திரயங்களை வர்ஜித்து நிறைசாந்தமுடையவராய் விளங்கிக்கொண்டிருந்தார்.

அப்படியிருக்கும் காலத்தில் அந்நகரத்தில் வசிக்கும்ஒருவர்த்தகன் விசேஷ திரவியசம்பத்தையுடையவன்- உதாரி- பகவத்பக்தன்- பந்துக்களையும் அனுசரித்தவர்களையும் சவரக்ஷணை பண்ணிக்கொண்டிருப்பவன். அவன் மனைவி சகல நற்குணமுமுடையவள். அவளிடம் ஐந்து பிள்ளைகள் பிறந்தார்கள். இப்படி நல்ல வாழ்வை யுடைத்தாயிருக்கும் பொழுது- அவனுக்குப் பூர்வ கர்மவசத்தினாலே குஷ்டரோகம் வந்து மிகவும் வாதனைப்படுத்திக் கிருமிகளும் உண்டாகித் துற்கந்தம் வீசத் தலைப்பட்டது. இந்தத் துற்கந்தத்தினாலே ஒருவரும் சமீபத்திலே கூட வாராமலிருப்பதைக்கண்டுஅவன்சித்தத்தில் மிகுந்தவருத்தமுற்றுப்

பூர்வஜந்மபலனை இப்படி அனுபவிக்கிறேனென்று எண்ணிக்கொண்டிருந்தான். அவனுடைய பிள்ளைகளும் ஸ்திரீயும் பிரயாசைப்பட்டுத் தம்மிடத்தில் வந்த வைத்தியர்கள் ஜோசியர்கள் மந்திரவாதிகள் முதலானவர்கள் சொன்ன ஜபங்கள்-தபங்கள்-ஓமங்கள்-முதலியவைகளைக் குறைவில்லாமற் செய்தும் நாளுக்கு நாள் ரோகம் அதிகரித்தது. அப்போது அந்த வர்த்தகன் இந்த வேதனையைச் சகிக்கமாட்டாமல் அவர்களைப் பார்த்துத் தன்னை யெடுத்துக்கொண்டுபோய்ப் பாகீரதியிலே போட்டு விடுங்களென்று சொல்ல-அவர்களனைவரும் அழுது கொண்டு நின்றார்கள். வர்த்தகன் அவர்களுக்குப்பின்னும் பலவிதமாகத்தயிரியம்சொல்லித் தன்னை எடுத்துக்கொண்டுபோய்ப் பாகீரதியிலேபோட்டு விடும்படியாகச்சொன்னான். அவர்களும் பிறகு வர்த்தகனை எடுத்துக்கொண்டுபோய்க் கங்கைக் கரையிலே வைத்துக்கொண்டு போட்டவுடனே அமிழ்ந்து போகத்தக்கதாகக் கைக்கிரண்டு குடத்தையுங்காலுக்கிரண்டு குடத்தையும்கட்டிக்கொண்டிருக்க வெகு ஜனங்கள் அந்த வேடிக்கையைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

அந்தச் சமயத்தில் பதுமனுபரென்கிற பிராமணர் கங்காஸ்நானத்துக்குப் புறப்பட்டுவந்துஇந்தக்கூட்டத்தைக்கண்டுஅதன் காரணத்தை விசாரித்து அறிந்துகொண்டு அந்த வர்த்தகனிடத்தில்போய்-ஏனிந்த அருமையான நரதேகத்தின் பிராணனை விடத்துணிந்தாய்-எண்பத்துநான்கு லக்ஷம் ஜீவராசியிலும்அனேகாவர்த்தி ஜன்மமெடுத்து உண்டான புண்ணியவிசேஷத்தினாலேஇந்தமானிடஜென்மம்வந்தது. இந்தத்தேகத்தினாலேவெகுபிரயோஜனத்தை அடையலாம். ஹரிநாமஸ்மரணையைப் பண்ணி கிருதார்த்தனாகிறதற்கும் சாதுசனங்களைச் சரணமடைந்து ஜனனமரணமென்கிற கொடியை வேரோடே பிடுங்கிவிட்டு ஆனந்தரூபமாகிறதற்கும் ஏதுவானது இந்தச் சரீரம். இப்படிப்பட்ட துர்லபமான மனுஷதேகத்தை ஏன் விட்டுவிடுகிறா யென்று கேட்டதற்கு-அந்த வர்த்தகன் சுவாமி யென்னுடையபூர்வ கர்மபலன் பொல்லாதது- அதனாலேஇந்தக்கோரவியாதியை அடைந்திருக்கிறேன். இந்தப் பிடை வியாதியிலே இருந்து நீங்கலாகவேண்டுமென்று கால புருஷதானமுதல் சகல தானங்களும்- ஜெபங்கள்-ஓமங்கள்-அர்ச்சனை-அபிஷேகங்கள்- பிராமணபோஜனங்கள்- மந்திரதந்திரங்கள் எல்லாமும் செய்து என்னஉபாயம் பண்ணினாலும் இந்தக் கர்மம் நீங்கவில்லை-இந்த வியாதியின் துற்கந்தமும்உபத்திரவமும்சகிக்கமுடியவில்லை. இப்படி அவதிப்படுகிறதைப் பார்க்கிலும் இந்தக் கங்கையில் என் பிராணனை விட்டுவிட்டால் உத்தமம். ஆகையால் தேகாந்தியப் பிராயச் சித்தம் பண்ணிக்கொள்ளுகிறேனென்று சொல்லக் கேட்டுப்பதுமநாபர் ஓ வர்த்தகனே எல்லா உபாயமும் பண்ணினீர் ஆனால் ஒரு உபாயமாத்திரம்

ராமா-வென்று சொல்லச் சொன்னேனென்று விண்ணப்பம் பண்ணினார். அதைக் கபீர் கேட்டுச் சந்தோஷத்தை அடைந்து ஆனந்தபரிதரானார். ஸ்ரீ பாண்டுரெங்கநேநம:.

# கபீர் பதினாயிரம் பைராகிகளுக்கு உலுப்பை கொடுத்த சரித்திரம்.

ஸ்ரீ இராமச் சந்திரபரப்பிரமணேநம: கேளுங்கள் பக்தசிகாமணிகளே கபீர்தாசரானவர்சம்சாரத்திலே யிருந்தாலும்தாமரை யிலைத்தண்ணீர்போலும்- கண்ணாடியிற் பிரதிபலித்தமுகம்போலும்-அதிலே ஒட்டாமல் விரக்தராய்ச் சதா ஆனந்தமுடையவராய் ராமநாமத்தை ஜபித்துக்கொண்டு இருந்தார். அப்படியிருக்கையில் ஒரு நாள் பதினாயிரம் வைஷ்ணவவீரர்களான பைராகிகள் காசிக்கு வந்து அந்தவூர் ஜனங்களைப் பார்த்து- இந்த வூரிலே எங்களுக்கு உலுப்பை முதலானவை கொடுத்துப் பராமரிக்கததக்கவர்கள் யாராகிலுமுண்டா வென்றுகேட்க-அந்த வூரிலுள்ளகுடிலர்கள்விநோதத்தின்பொருட்டுஇந்த ஊரில் கபீரென்றுஒரு பகவத்பக்தரிருக்கிறார்அவர்தான்மிகுந்ததனவந்தரானதால் வந்த பாகவதர்களை விசாரித்து அன்னபானாதிகள் கொடுத்துக்கொண்டுவருகிறார். அவரைத்தவிர இந்த வூரில் அப்படிக்கொடுப்பவர் ஒருவருமில்லை யென்று சொல்லக் கேட்டுப் பைராகிகள் கபீர் வீட்டுக்குச் சீதாராமாவென்கிற சப்தத்துடனே போனார்கள். அந்தச் சப்தத்தைக் கேட்டஉடனே அவர் வெளியே ஓடிவந்து சத்பாவத்தோடே சாஷ்டாங்கமாய்ச் சேவிக்க- பைராகிகள் கபீரைப் பார்த்து நாங்கள் தீர்த்தவாசிகள் பதினாயிரம்பேர் வந்திருக்கிறோம். இந்தவூரில் தாசர்களுக்குப் போஜனம்கொடுப்பவராரென்று கேட்டால் நீர்தான் மஹா தாதா உம்மைத்தவிர ஒருவருமில்லை யென்று சொல்லக்கேட்டு இங்கே வந்தோமென்றார்கள். கபீரானவர் அவர்கள் மனோரதத்தை அறிந்துகொண்டு அவர்களுக்கு உபசாரம் பண்ணி இருக்கவைத்துவிட்டுத் துளசிசெட்டி என்கிற வர்த்தகன் வீட்டுக்கு வந்து என் வீட்டில் சாது ஜனங்கள் பதினாயிரம்பேர் வரையிலும் வந்திருக்கிறார்கள். அவர்களுக்குப் போஜனம் பண்ணுவிக்கவேண்டி யிருக்கிறபடியால் நீர் அரிசி பருப்பு முதலானவைகள் கொடுக்கவேண்டுமென்று கேட்டார். அதற்கு அந்த வர்த்தகன் உன்மத்தனும் - துராசாரனுமான படியினாலே உன்னுடைய ஸ்திரீயை ஒரு ராத்திரிக்கு அனுப்புவித்தால் நீ கேட்ட சாமானெல்லாம் கொடுக்கிறேனென்று சொல்லக் கபீரானவர் அவசியம் அப்படியே அனுப்புகிறேனென்று வாக்குத்தத்தம் பண்ணினார். அதின்மேல் இவர்

கேட்டசாமான்களெல்லாம் கொடுத்தான். அதையெடுப்பித்துக்கொண் டு வீட்டிலே வந்திருக்கிற சாதுக்களுக்கு உபசாரம்பண்ணிப் போஜன மும் பண்ணுவித்துத் திருப்திசெய்து அனுப்பிவிட்டார். பிறகு தன் ஸ் திரீயைப் பார்த்துக் கடைத்தெருவில் ஒரு வர்த்தகன் மஹா உதாரி அவனைப்போய் சாமான்கள் கேட்டபொழுது உன்னை ஒரு ராத்திரிக்குக் கொடுக்கச்சொல்லிக்கேட்டான். அப்படியே வாக்குக்கொடுத்துவிட்டுச் சாமான்கள் வாங்கிக்கொண்டுவந்துவிட்டேன். ஆகையால் இன்றைராத் திரிநீ அவன்மனோரதம்நிறைவேறப் பண்ணவேண்டுமென்றுசொல்ல-அந் தப்பதிவிரதா சிரோமணி அப்படியே ஆகட்டும் சுவாமியென்றுசொல்லி அலங்காரம்பண்ணிக்கொண்டு புறப்படும்போது கபீரானவர் லாவண் ணியசமுத்திரம்போலே யிருக்கிற தன் ஸ்திரீயின் கையைப் பிடித்துக் கொண்டு அந்த வர்த்தகனிடத்தில் கொண்டுவந்துவிட்டு வர்த்தகன் மனோரதப்படிக்கு நடந்துக்கொள்ளென்று சொல்லிவிட்டு வீட்டுக்குப் போய்விட்டார். அப்போது இந்தவர்த்தகன் கபீர்ஸ்திரீயைப்பார்த்து எல் லையில்லாத காமாதுரனாய் அனேகபரிமளவஸ்துகளைச்சேகரம்பண்ணிக் கொண்டுவிட்டிற்புழுவானது விளக்கைகண்டுவந்துவிழுவதுபோலஉல்லா சத்துடனே விஷயபோகங்களுக்கு இச்சைப்பட்டுக் கொண்டிருக்கை யில்-பக்தவத்சலனும் பக்த சுவரக்ஷகனுமான பாண்டுரங்கன் சகல ஆயு தங்களையும் தரித்துக்கொண்டு அந்தவூர்க் கொத்தவால்வேஷமெடுத்துக் கொண்டு அவ்விடத்தில்வந்து அடே பாபீ பிறன் ஸ்திரீயிடம் ஆசைப் பட்டாய்உன்னையிப்போதே பிராணனை வாங்கிவிடுகிறேன் என்றுசொல் ல- வர்த்தகன் கேட்டுப் பயந்து கடுங்காற்றைக்கண்ட மேகம்போலும் சூரியனைக்கண்ட பனிபோலும் சகலவிஷயங்களும் பறந்துபோய் நடுங் கிக்கொண்டு காலிலேவந்து விழுந்து உமக்குவேண்டிய திரவியம் கொ டுக்கிறேன் என்னைக்காப்பாற்றவேண்டுமென்றுசொல்லக் கோபத்தைத் தணித்துக் கொத்தவால் வேஷம்போட்டபகவான் அடே பாபி இந்தப் பாக்கியசாலி என் தங்கை இவளுக்குச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்து நீ எண்ணினதோஷங்கள்போக க்ஷமை கேட்டுக்கொள்ளென்று சொல் ல- அப்போது வர்த்தகன் கபீருடைய ஸ்திரீயின் காலிலே விழுந்து அறியாமையால் நான் பண்ணின குற்றத்தைப் பொறுத்துக்கொண்டு காப்பாற்றவேணும்தாயேநீங்கள்உங்கள்வீட்டுக்குப்போகலாம் அம்மணி யென்று சொல்லி பயந்து நிற்கையில்- பகவான் வர்த்தகனைப் பார்த்து அடே இன்றுமுதல் ஜாக்கிரதையாயிருவென்றுசொல்லிவிட்டுக் கபீ ருடைய ஸ்திரீயை அழைத்துக்கொண்டுபோய் அவர் வீட்டில் விட்டு விட்டு அதிரிசியமாய்ப்போய்விட்டார்.

அப்போது கபீரானவர் தன் ஸ்திரீயைப் பார்த்து நான் வர்த்தக னுக்கு ஒரு ராத்திரிக்கு வாக்குக் கொடுத்துவந்திருக்க நீ யென்னபண் ணினாய் ஏன் சுறுக்கிலேவந்துவிட்டாய் என்றுகேட்க- அப்போது ஸ்திரீ யானவள் சுவாமி நான் தங்கள் ஆக்கினைப்படியே யிருக்கும்போது அந்த

## இருபத்தைந்தாவது அத்தியாயம்.

# ரோகிதாசர் சரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரபரப்பிர்மணேநம: பூலோகத்திலே ஒருவனுக்குத் தாயானவள் நல்ல உணவுகளைக் கொடுத்துச் சரீரத்தைமட்டும் வளர்ப்பாள். தந்தையானவன் தன்னால் இயன்ற கல்விப் பொருளையும் செல்வப்பொருளையும் கொடுத்து வாழ்வைமட்டும் உண்டாக்குவான். ஆனால் சாதுக்கள்- தாசர்கள் பெருமையையும் ஸ்ரீமந்நாராயணனுடைய அற்புதச் செயல்களையும் சொல்லி இகலோக பூச்சியத்தையையும்-பரலோக சாம்பிராச்சியத்தையும்உண்டாக்குவார்கள். அத்தன்மையான சாதுக்களால் செய்யப்பட்ட பக்தவிஜய மென்னும் இந்தக் கிரந்தத்தின் முன் அத்தியாயத்தில் கபீர் தாசர் சிஷியராகிய பதுமநாபர் சரித்திரமும்- கபீர் பக்தர் பதினாயிரம் சாதுக்களுக்கு உலுப்பை கொடுத்த சரித்திரமும்கேட்டீர்களேஇந்த அத்தியாயத்தில்ரோகிதாசர் என்பவர் சரித்திரம் சொல்லப்படுகிறது. கேளுங்கள்கங்கையின்தென் பாகததிலுள்ள ஓர் கிராமத்தில் சக்கிலியர் குலத்திலே ரோகிதாசர் என்றொருவர் இருந்தார். அவர் தாழ்மையான குலத்தில் பிறந்திருந்த போதிலும் நல்ல நடை- தரும சிந்தை- பரோபகாரம்- பக்த விசுவாசம்-தெய்வபக்தி முதலிய குணங்களைப் பூர்வஜென்ம சுகிர்தத்தாலுடையவராயிருந்தபடியால் தன்னுடைய சாதித்தொழிலைச் செய்ய ஆரம்பித்தவுடனே கொஞ்சமாவது தன் நிலைமைக்குத் தக்கபடி தருமஞ்செய்ய நினைத்துத் தினந்தோறும் ஒரு பாதரக்ஷைத்துத் தருமத்திற்கென்று எடுத்து வைத்திருந்து பகவத் பக்தர்களைக் கண்டவுடனே அவர்களிடத்திற்குப் போய் வந்தன வழிபாடுகள் செய்து அதில் ஒன்றைக்கொடுப்பார். அன்றியும் யாத்திரைக் காரர்களுக்கும் எளியவர்களுக்கும் மிதியடி முதலியவை பழுது பட்டிருந்தால் கூலிவாங்காமல்செய்துகொடுத்துச்சதா ஹரி கீர்த்தனம்பண்ணிக்கொண்டிருப்பார்.

இப்படி யிருக்கையில் தன் வீட்டிற்குச் சமீபத்தில் பிருந்தாவனம் ஒன்று உண்டாக்கி ஸ்ரீமந்நாராயணனைப் பூசைபண்ணவேண்டுமென்று நினைத்து- அதற்குத் தானிழிவான சாதியிலே பிறந்திருக்கிறோமென்றெண்ணி மிகுந்த வருத்தப்பட்டுக் கடைசியில்- சர்வலோகங்களிலும் சர்வபிராணிகளிடத்திலும் வியாபகமாக இருப்பவர் தன்னிடத்திலும் இருப்பார்- தான்செய்யும் பூசையையும் ஏற்றுக்கொள்ளுவார் என்று நிச்சயம்பண்ணிக்கொண்டு சாளக்கிராமம் ஒன்று சம்பாதித்து அதன்

பூசைக்குவேண்டிய தண்ணீர்ப் பாத்திரம்- மடிசஞ்சி- சம்புடம்-பீடம் முதலிய சாமான்களெல்லாம் தோலால் செய்துகொண்டு தன்னுடைய துளசிவனத்தில் உட்கார்ந்து பூசைசெய்ய ஆரம்பித்தபொழுது-பசியா னதுவந்து சித்தத்தைப் பேதப் படுத்துவதைக்கண்டு திரிகரணங்களும் ஒன்று சேர்ந்து செய்யாத பூசை பலனற்றது அதைத் தவிரச் சாப்பிட் டிருந்து செய்தாலும் பட்டினியாயிருந்து செய்தாலும் வித்தியாசமில்லை என்றெண்ணிக் கவலையிலெழுந்து பசி அடங்கச் சாப்பிட்டுவிட்டு ஸ்நா னம்பண்ணிப் பிருந்தாவனத்திற்கு வந்து தோலாசனம் போட்டுக் கொண்டு தோல் பெட்டகத்திலிருக்கும் சாளக்கிராமத்தை யெடுத்து வைத்துப் பூசைபண்ணுவார். யாராயிருந்தாலும் நல்ல சிந்தையும்-ஹரி கீர்த்தனமும்-மெய்யான அன்புமுடையவர்களிடத்தில் பண்டரிநாதன் காத்துக்கொண்டிருப்பாராதலால் இவரிடத்தில் மிகுந்த கிருபையாயி ருந்தார். இப்படிக் கொஞ்சமாவது வேறுபடாத நிஜபக்தியோடு நெடுங் காலம் பூஜை செய்துகொண்டுவருகையில்- ஒரு நாள் அவ்வூர்ப் புரோ கிதர் தற்செயலாக அந்த நந்தவனத்தண்டையில் வந்து இவர் பூசை செய்வதைப் பார்த்துக் கூப்பிட இவர் வந்து சாஷ்டாங்கமாக நமஸ் காரம் பண்ணினார். அப்பொழுது இவரைப் பார்த்து நீ துளசிவனம் வைக்கலாமாவென்று கேட்கச் சுவாமி உலகத்தில் பயிர்செய்வதற்குக் கூடச் சாதி பார்க்கவேண்டுமோ- என்னையொத்த பள்ளர்கள் தானே பயிரிடுவதற்கு உரியவர்கள் அவர்கள் பயிரிட்ட பதார்த்தங்கள் உங்க ளுக்கும் தேவபூசைக்கும் உபயோகப்படவில்லையா- அப்படி யிருக்க நான் துளசித் தோட்டம் போடக்கூடாதா வென்றார். அதற்குப் பிரா மணர் அதுபோகட்டும் இப்பொழுது நீ அங்கே என்ன பூசைசெய்து கொண்டிருக்கிறாய் என்றதற்குச் சுவாமி நான்சாளக்கிராமம் வைத்துப் பூசை செய்கிறேன் என்றார். இதைக் கேட்ட உடனே பிராமணன் கையைத் தட்டிச் சிரித்து நன்றாயிருக்கின்றது சக்கிலியனாகிய உனக்குச் சாளக்கிராமபூசைசெய்யத்தெரியுமாநீதொடலாமா அதற்குப்பரிசுத்தமா னபூசைப் பாத்திரங்கள்வேண்டுமே-அதைத்தோலில்தானேவைக்கிறது- நீ வயிறு நிறைய உண்டு இருக்கிறாயே இப்படி உண்டுவிட்டுத்தானா பூ சை பண்ணுகிறதென்று கேட்டார். அப்பொழுது ரோகிதாசர் சுவாமி பகவானைப் பூசைபண்ணவேண்டுமென்று எனக்கு மிகுந்த ஆசை இருந்தது அதனால் செய்கிறேன். பூசை செய்வதற்கு முக்கியமான காரணம் அன்புதானே - அது தவிர மற்றவை எப்படியிருந்தாலும் குற்றமில்லையே- பகவான் சர்வாந்தரியாமி யானபடியால் என் வீட்டி லும் என் சரீரத்திலும் என் ஆத்மாவிலுமிருப்பாரல்லவா- அப்படிப் பட்டவரை நான் பூசை பண்ணலாகாதா- தோலில்லாமல் ஒரு பதார்த் தமுமில்லையே- எண்பத்துநான்கு லக்ஷம் ஜீவராசிகளிலும் தோல்தானே மூடிக்கொண்டிருக்கின்றன - அவைகளிலெல்லாம் வியாபித்திருக்கின்

ருசே- அப்படிப்பட்டவருக்குத்தோலாலாகிய பெட்டியாகாதாவென்று சொன்னதைப் பிராமணர் கேட்டு-ரோகிதாசா என்ன நீ எனக்குப் பிரமஞானம் ஓதுகிறாய்- சரீரத்தில் பிராணன் உள்ளமட்டும் அதைத் தோலென்றும் தீட்டுள்ளதென்றும் சொல்லலாகாதே யென்று சொன்னார். அதற்கு ரோகிதாசர் தோலானது சுக்கில சுரோணிதத்தாலுண்டானதென்றும் பிராணனோடுகூடியிருக்குங் காலத்தில் தான் மலமூத்திரமுதலிய அசுத்தங்களை மூடிக்கொண்டிருக்கிறபடியால் மிக அசுத்தமுள்ளதென்றும் எல்லாரும் அறிவார்களே-அப்படி யிருக்க அசுத்தங்களினின்று நீங்கி நல்ல வாசனை பெற்றிருக்கின்ற இந்தத்தோலேஅசுத்தமுடையதென்று சொல்லலாமோவென்றார். அதற்கு மேல் பிராமணர் அது போகட்டும் நீ சாப்பிட்டுவிட்டு பூசைசெய்கிறாயே அது மஹா தோஷமல்லவாவென்றார். அதற்கு ரோகிதாசர் சுவாமி மனமானது ஆனந்தமாக இருந்தல்லவா பூசை பண்ணவேண்டும். ஆனந்தம் விஞ்ஞானமயத்தை ஆதாரமாக உடையது- விஞ்ஞானமயத்திற்கு மனோமயம் ஆதாரம்- மனோமயத்திற்குப் பிராணமயம்ஆதாரம்-பிராணமயத்திற்கு அன்னமயமாதாரமாதலால் பசியை அடைக்கி அதை நல்ல நிலையில் வைத்துவிட்டுத் தானே பூசைபண்ணவேண்டுமென்றார். அப்பொழுது அந்தப் பிராமணர் அடே மூர்க்கா சாளக்கிராமம் சுத்தமாயிருப்பது அதைப் பூசைசெய்வதற்குப் பிராமணனைத் தவிர இதரஜாதிகள் யோக்கியர்களல்ல-எவன் எக்ஞோபவீதம் தரித்திருக்கிறானோ அவனே விஷ்ணு பூசைக் குரியவனென்றுசொல்லக்கேட்டு-ரோகிதாசர் ஒன்றும் சொல்லமாட்டாமல் வருந்திப் பகவானை நினைத்து ஓ சுவாமி அனந்தசயனா - அனாதரட்சகா- ருக்குமணிமனோகரா- சர்வாந்தரியாமி- பிராமணர்கள்தானோ உன்னைப் பூசைபண்ணவேண்டும்- நான் செய்யும்பூசை உமக்கு ஏற்காதோவென்று பலவிதமாக ஸ்தோத்திரம் பண்ணினார். உடனே பகவான் கருடவாகனராய்ப்பஞ்சாயுததாரியாய்லட்சுமீசமேதராய்த் தோன்றி ஓ ரோகிதாசா எனக்கு உயர்ந்தசாதியரென்றும்தாழ்ந்தசாதியாரென்றும் பேதமில்லை- அன்புசெய்பவர்களெல்லாம் பக்தர்கள்தான் நீஎன்னுடைய நிஜபக்தன் நீசெய்யும்பூசையேஎனக்கு மிகவும் பிரியமானது என்று சொன்னதல்லாமல்ரோகிதாசரைப் பிராமணதேஜசுடனும் எக்ஞோபவீதத்தோடும் விளங்கும்படி செய்தார். இதைப் பிராமணர் கண்டு ஆச்சரியப்பட்டு ரோகிதாசரைப் பார்த்து நீயே விஷ்ணுவின் நிஜபக்தன் உன்னுடைய அந்தரங்கம் தெரியாமல் உன்னையிழிவாகப் பேசினேன் ஆனால் நானிப்படிச் செய்ததனால்தங்கத்தைப் புடமிட்டால் அது மிகுந்த ஒளியை அடைவதுபோல உன்னுடைய பிரபாவம் அதிகமாயிற்று என்றுசொல்லிவிட்டுப் போய்விட்டார். இந்த அத்தியாயம் சம்பூரணம். இதைச் சிரத்தையோடு சிரவணம் பண்ணினவர்கள் பகவானுக்கு அன்புடையவர்களே மேலானவர்களென்று அறிந்துமிகுந்த அன்போடு சரியையாதி மார்க்கங்களில் நின்று வைகுண்டபதவியையடைவார்கள். ஸ்ரீவாசுதேவ ஜகத்திரயகுரவேநம: ஸ்ரீரங்கநாதமனோகராய:.

## இருபத்தாறுவது அத்தியாயம்.

# பீப்பாசிராஜாசரித்திரம்.

ஸ்ரீ இராமச்சந்திரபரப்பிரம்மணேநம: கேளுங்கள் பாக்கியசாலிகளே பாற்கடலிற் பிறந்தசந்திரனானது உலகத்தின்புறத்திலுள்ள இருளை நீக்கிப் பயிர்களைத் தழைக்கச் செய்யும் அதுபோலச் சாதுக்களிடத்திலுண்டான பக்தவிஜயமானது மனிதர்களின் அகவிருளை நீக்கி ஞானமாகிய பயிரைத் தழைக்கச் செய்து மோட்சமாகிய பலனைக் கொடுக்கும். அப்படிப்பட்ட இந்தக் கிரந்தத்தின் முன் அத்தியாயத்தில் ரோகிதாசருடைய சரித்திரத்தைக் கேட்டீர்களே இந்த அத்தியாயத்தில் பீப்பாசிராஜா சரித்திரம் சொல்லப்படுகின்றது. மங்களகடமென்கிற பட்டணத்திலே பீப்பாசியென்னும் பெயருடன் ஒரு ராஜா இருந்தார். அவர் தர்ம சீலர்-உதாரமுடையவர்-சாதுக்களுக்குஉபசாரம்செய்பவர்-பவானியையே பூசை பண்ணிக்கொண்டிருக்கிறவர். அப்படிப்பட்டவர் தினந்தோறும் பிராதக்கால மெழுந்திருந்து ஸ்நான சந்தியாவந்தனாதி நித்திய நேமங்களை முடித்துக்கொண்டு பவானிக்குச் சோடச உபசாரத்துடனே பூசை பண்ணித் தூபதீபம் கொடுத்து மஹா நைவேத்தியம் சமர்ப்பிக்கிறபோது தேவி பிரசன்னமாகி அந்த அன்னத்தைச் சாப்பிடுவாள். அப்படிச் சாப்பிட்டானவுடன் ராஜா தாம்பூலம்கொடுத்துவிட்டுப் பிரதக்ஷண நமஸ்காரம்பண்ணிப் பிறகு தான்போஜனத்துக்குப் போவார். இப்படிநடந்துவருகிறபோது-கிருபையுடையவர்களும்வைராக்கிய சீலர்களுமாகிய சில விஷ்ணு தாசர்கள் தீர்த்த யாத்திரை பண்ணிக்கொண்டு அந்த ராஜாவினுடைய அனந்தங்கோடி ஜன்மாந்தர சுகிர்த வசத்தினாலே அப்பட்டணத்திற்கு வந்தார்கள். அவர்களுக்கு ராஜா சோடசஉபசாரங்கள்செய்து உணுப்பை முதலானவையும்கொடுத்துவிட்டுத்தான் ஸ்நானம்பண்ணிப் பவானிபூசைபண்ண ஆரம்பித்து நைவேத்தியத்தைச் சமர்ப்பிக்கிறபோது தேவி பிரசன்னமாகி வந்து அன்னத்தைச் சாப்பிடவில்லை. அப்போது ராஜா மிகவும் பிரார்த்திக்கத் தேவி பிரசன்னமாகி ராஜாவைப்பார்த்து ஓ ராஜாவே உன்னுடைய பட்டணத்திலே பல விஷ்ணுதாசர்கள் வந்து இருக்கிறார்கள். அவர்கள் சாப்பிடுகிறதற்கு முன் நான் சாப்பிடக்கூடாது. அவர்கள் வைகுண்டநாதனுக்கு அத்தியந்த பிரியமானவர்கள். அவர்கள் உன்னுடையபட்டணத்திற்கு வந்ததினால் நீ அளவற்ற பாக்கிய சாலியாகிறாய்என்று சொல்ல-ராஜாகேட்டுக் கைகூப்பிக்கொண்டு ஏ தேவி உன்னைப் பார்க்கிலும்

பெரிய தெய்வமிருக்கிறதோவென்று கேட்டான். அதற்குப் பவானி ஓ ராஜாவே எவனுடைய அந்தம் பிரமேந்திராதி தேவர்களும் அறிய மாட்டார்களோ- எவனுடைய பிரகாசத்தினாலே சூரிய சந்திரர்கள் விளங்குகிறார்களோ-எவன்மாயாவிசிஷ்டனாய்யுகந்தோறும்மச்ச- கூர்ம- வராக- நரசிம்ம- வாமன- பரசுராம-ரகுராம- பலராம-கிருஷ்ண- கற்கி யாதி அனந்த அவதாரங்களை யெடுத்துத் துஷ்டநிக்கிரக சிஷ்டபரி பாலனங்களைப் பண்ணிப் பிர்மேந்திராதி தேவர்களுடைய சங்கடங்களை நிவாரணம் பண்ணினானோ- எவன் பரமபதவாசியோ -அவனே புராண புருஷோத்தமன் - அவனே சர்வத்திரர்களுக்கும் சிரேஷ்டன் என்று சொல்லக்கேட்டு ராஜா தேவியினுடைய திருவடியைக் கெட்டியாய்ப் பிடித்துக்கொண்டு அப்படியானால் தாயே எனக்கு அப்படிப்பட்ட பக வானுடைய தரிசனம்பண்ணுவிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கத்தேவி யானவள் ஓ ராஜாவே அஷ்டமாசித்திகளும் பல வகை நிதிகளும் என்னைக் கேட்டால் கொடுப்பேன் வேத வேத்தியனும்-ஒன்றினாலேயும் இன்னபடியென்று அளவிடக் கூடாதவனும்- அனந்த சொரூபனுமான பகவானுடைய தரிசனம் உனக்குப் பண்ணுவிக்க என்னாலேயாகாது. அவருடைய தரிசனத்தில் உனக்கு அபேக்ஷை யிருந்தால் சொல்லுகி றேன் கேள். சுத்தசத்துவசீலனாய் வைராக்கியனாய் எவன் ஸ்ரீமந்நாரா யணனிடத்திலே சிந்தையை வைத்திருக்கின்றானோ அவனுக்கு ஸ்ரீமந் நாராயணன் பிரசன்னமாவான். அப்படிப்பட்டசாதுக்கள் அநேகர்உன் னுடைய நகரத்திலே வந்திருக்கிறார்கள். அவர்களைச் சரணமடைந்து தேவாதிதேவனைத் தரிசனம் பண்ணிக்கொள்ளென்று சொல்ல-ராஜா அந்தக்ஷணமே ஆர்த்தனாய் அந்தச்சாதுக்கள் இறங்கி யிருக்கிற இடத் துக்குப் போய்ச் சாஷ்டாங்கமாய்ச் சேவித்துச் சகல உபசாரங்களும் பண்ணிக் கைகட்டிக்கொண்டு சுவாமிகளே எனக்குப் பகவானுடைய தரிசனமாகும்படியாய்க் கிருபைபண்ணவேண்டுமென்று சொல்ல-அந் தச் சாதுக்கள் சந்தோஷமாய் ஓ ராஜாவே நீ நல்ல தருமசீலன்-பக வத்பக்தன்தான்-ஆனாலும் காசிக்ஷேத்திர வாசியாகிய ஸ்ரீ ராமானந்த சுவாமியைச் சரணமடைந்தாயானால் உன்னுடைய மனோரதம் நிறை வேறும் ஜென்ம சாதகமாகும். அது ஒன்றைத் தவிர மற்றொன்றினாலே யும் உன் கருத்திற்குப் பயனில்லையென்று சொன்னார்கள்.

இராஜா இதைக்கேட்டவுடனே புத்திரர்கள் மந்திரி பிரதானிகளை அழைப்பித்து ராச்சியத்தை அவர்களிடம் ஒப்புவித்துவிட்டு அநேக தான தருமங்களைப் பண்ணி ஸ்ரீ கிருஷ்ணார்ப்பணம் பண்ணிவிட்டுக் கா சிக்குப்போய் ஸ்ரீ ராமானந்த சுவாமிகளைச் சரணமடைந்து ராஜாவும்

மஹா பதிவிரதையான ராஜஸ்திரீயும்சர்வத்தையும்தெஜித்துச் சுவாமிகளுடைய திருவடிகளுக்குக் காயிக வாசிக மானசீகங்களைச் சமர்ப்பணம் பண்ணிவிட்டு அவருடைய கிருபாதிருஷ்டிக்குப்பாத்திர பூதர்களாகிக் காத்துக்கொண்டிருந்து சுவாமிகளே அடியேங்களுக்குப் பகவானுடைய தரிசனமாகும்படி யருளவேண்டுமென்று பிரார்த்தித்தபொழுது சுவாமிகளுக்குக் கிருபைவந்து ராஜாவுக்கும்அவர் ஸ்திரீக்கும் உபதேசம்பண்ண எண்ணி மேலாகிய திருமந்திரத்தை உபதேசம் பண்ணி எப்போதும்வாக்கிலேராமா-கிருஷ்ணா- வாசுதேவா- நாராயணா-முகுந்தா-கோவிந்தா வென்று கீர்த்தனம் பண்ணிக் கொண்டிருந்தால் பகவான் தரிசனங்கிடைக்குமென்றுசொல்லிக்கட்டளையிட்டார்.அப்படியே இவர்களிருவரும் தீவிரமுமுட்சுக்களானபடியால் தாகமெடுத்தவன் ஜலத்தைக்கண்டவுடன் அபேக்ஷையாய்க் குடிப்பதுபோலராமானந்த சுவாமிகள் உபதேசம் பண்ணின அந்தக்ஷணமேமனதிலே பதியப்பெற்று அனுசந்தானம்பண்ணிக்கொண்டிருக்கையில்-துவாரகைக்குப் போகவேண்டுமென்று ராஜாவுக்குஅபேக்ஷையாகி ஸ்ரீ குருவினிடத்திலே உத்தரம் வாங்கிக்கொண்டு அவ்விடத்திற்குப்போய்க் கோமதி நதியில் ஸ்நானம் பண்ணி ஸ்ரீ கிருஷ்ணபரமாத்துமாவினுடைய தரிசனம் பண்ணும் பொருட்டு மஹா துவாரத்துக்கு வந்து சாஷ்டாங்கமாய்ச் சேவித்து கை கூப்பிக்கொண்டு ஸ்ரீ ஹரியைப் பார்த்து ஓ பக்த வத்சலா எங்களுடைய அஞ்ஞான திசையில் உன்னை தேவாதிதேவனென்றும் ஜனார்த்தனனென்றும்தெரியாமல்விட்டுவிட்டுச் சத்தியைப் பூசை பண்ணினோமே. ஜய ஜயமுகுந்தா- முராரி- கம்ஸாரி-புராணபுருஷா- ருக்குமணிபதி - ஸ்ரீ ஹரியே- சர்வலோகசரண்ணியா-சக்கரபாணி - தேவரீரைச் சரணமடைந்தோம்-நீ தீனர்களான எங்களிடத்தில்கிருபைபண்ணவேண்டும் என்று அனந்தவிதமாய் ஸ்தோத்திரம் பண்ணிக்கொண்டு உருக்கத்தோடே யிருக்கிற சமயத்திலே ஸ்ரீ வாசுதேவ மூர்த்திக்குக் கிருபைவந்து ராஜாவுக்குத் தரிசனம் கொடுக்கும்பொருட்டுச் சதுர்புஜராய்- பீதாம்பரதாரியாய்- சங்கு சக்கரகதாதரராய்- ராஜீவலோசனராய் தே[illegible]மான கிரீடதாரியாய்- திவ்வியமங்கள மூர்த்தியாய்ப் பிரச[illegible]னார். அப்போது இருவரும் அளவில்லாத ஆனந்த பரவசராய்ப் பூசை பண்ணி ஸ்தோத்திரம் பண்ணினார்கள்.

இப்படிக்கு நாலுமாதபரியந்தம் ஸ்ரீ ருக்குமணிகாந்தனை ஆராதனம்பண்ணிக் கீர்த்தனம் பண்ணிக்கொண்டிருந்து அப்பால் பகவானுடைய உத்தாரம் வாங்கிக்கொண்டு காசி க்ஷேத்திரத்திற்குப் போகிற வழியில் ஒரு ஆரணியத்தில் பயங்கரமான ஒரு வியாக்கிரமானது

மில்லே. இந்த அத்தியாயம் சம்பூரணம். இந்த அத்தியாயத்தில்சொல்லப பட்டிருக்கிறபீபாசிராஜாவின் சரித்திரத்தைச் சிரத்தையோடுசிரவணம் பண்ணினவாகள்ஸ்ரீமந்நாராயணனேமேலானதெய்வமென்றும-பக்தவத் சலனென்றும்- சர்வாந்தரியாமியென்றும தெளிந்துயெம்பெருமானிடத் தில் உண்மையான பக்தியுடையவர்களாயிருந்து சர்வாபீஷ்டத்தையும் பெற்றுத் தேகாந்தியத்தில் சாயுசசிய பதவியை யடைவாகள். ஸ்ரீஇரா மச்சந்திர பரப்பிர்மணேநம: ஸ்ரீ கிருஷ்ணய பரமகுரவேநம: ஸ்ரீபாண்டு ரங்கவிட்டலாயநம:.

முதலாவது பாகம் முற்றிற்று.